ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸுதர்சனர்

# பதில்

(ஐந்தாவது சதகம்)

## மதங்கள், சாஸ்திரங்கள், இலக்கியங்களில் வாசகர்களின் 100 ஐயவினாக்களுக்கு ஆசிரியரின் விளக்கங்கள்


ஆசிரியர்:—

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B. L.,
(ஸுதர்சனர்) அட்வகேட்,
ஆசிரியர்: 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்',
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.


---


ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.




---


[24—4—1982]

விலை ரூ. 5.00]  [தபால் 0.50

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

## இதில் விமர்சிக்கப்பட்டுள்ள பத்திரிகைகளும், பிரமுகர்களும்:—

1. விகடன்—1, 15, 23 கேள்விகள்
2. குமுதம்—2, 36, 62, 85
3. ஹிந்து—3, 20 61, 67
4. கல்கி—முன்னுரை, 2 4, 10, 18. 34, 59
5. காமகோடி பிரதீபம்—11
6. கலைமகள்—12 17
7. இதயம்—16, 35, 68. 69, 86
8. பாலஜோதிடம்—19
9. குன்றக்குடி அடிகளார்—22
10. ஸப்தகிரி—29, 37
11. கலைஞர் கருணாநிதி—35, 42, 60
12. சென்னைப் பல்கலைக் கழகம்—41
13. தாய்—43
14. அக்நிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாசார்யர்—44, 70
15. மணியன்—45
16. குங்குமம்—60
17. தினமலர்—64
18. அமுதசுரபி—71,
19. அமரபாரதி—76
20. 'வைகறை' என்ற பாண்டிச்சேரி அரவிந்த ஆச்ரம வெளியீடு—89
21. பயனீர் பப்ளிகேஷன்—97
22. ஞானபூமி—100
23. காமகோடி பீடாதிபதிகள்—1, 4, 10. 18, 26. 34. 39, 43, 45 59, 66, 70, 71, 76, 82, 83
24. கி. வா. ஜகந்நாதன்—29
25. மதுரை ஆதீனம் (பாராட்டு)—8
26. ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா—25 to 28, 30, 31, 32, 46 to 56, 58, 65
27. ஸ்ரீரங்கநாதபாதுகா—24
28. மீ. பா. சோமசுந்தரம்—2. 57
29. கி. வீரமணி—85
30. தினமணிகதிர்—முன்னுரை

## அநுபந்தங்கள்

1. திருவேங்கடத்தில் ஆக்ரமிப்பு—கேள்வி 29
2. அத்வைத விசிஷ்டாத்வைத மதங்கள் ஒன்றுதானா?—66
3. சங்க நூல்களும் கருணாநிதியும்—35, 42
4. காமகோடி பீடாதிபதிக்கு பகிரங்க கடிதங்கள்—34, 45,66
5. மணியனுக்கு பகிரங்க கடிதம்—45
6. இராவணன் கொடியவனே—38
7. மதமாற்றத்துக்கு முக்கிய காரணமும் பரிஹாரமும்—34,87
8. கருணாநிதியைக் குறித்துச் சில கேள்விகள்—60
9. இராவணாரிதாஸரின் முழக்கம்.

# ஸுதர்சனர் பதில்
# ஐந்தாவது சதகத்தின் முன்னுரை

( ஸுதர்சனர் )

ஸுதர்சனர் பதில் தொடங்கி சுமார் ஆறு வருடங்கள் ஆகிறது. பரமவைதிக மதமும், தமிழ்நாட்டிலும் சங்ககாலத்திலிருந்தே ஒழுக்கத்தில் உயர்ந்தவர்களால் ஆதரிக்கப்பட்டு வரும் மதமுமான வைஷ்ணவத்தை அழிப்பதற்கு, கடந்த பல வருடங்களாக நம் நாட்டிலுள்ள சைவர்களாலும், அத்வைதிகளாலும், அரசியல் வாதிகளாலும் பல வகைகளில் பெரு முயற்சிகள் செய்யப்பட்டு வந்ததாலேயே, அவற்றை அம்பலப் படுத்தி, அவர்களுடைய மனச்சாட்சியைத் தூண்டிவிடவும், வைஷ்ணவர்களை விழிப்புறச் செய்யவும் ஸுதர்சனர் பதில் தொடங்கப்பட்டது. நமது நடுநிலை நிற்கும் நேர்மையான கண்டனங்கள் எதற்கும் இந்தப் பத்திரிகைகளாலும், மத ப்ரசாரகர்களாலும், அரசியல் வாதிகளாலும் பதில் எழுத இயலாமலிருக்கையே நமக்குப் பெருவெற்றியாகும். வைஷ்ணவ சமூகச் சான்றோர்கள் பலராலும், தினமணிசுடர் விமர்சகர், மதுரை ஆதீனம் முதலானவர்களாலும் ஸுதர்சனர்பதில் பாராட்டப்பெற்றுமிருக்கிறது. சமீபகாலத்தில் கலைமகள், கல்கி போன்ற சில பத்திரிகைகளில் வைஷ்ணவ விரோத ப்ரசாரம் மிகவும் குறைந்திருப்பது பாராட்டத்தக்கது. பொது ஜனப் பத்திரிகைகளில் காமகோடி பீடாதி$_4$பதிக்கே ஏக போ$_4$ாக$_3$மாக இடமளிப்பதையும், மற்ற மதத் தலைவர்களுக்கு இடமளிக்காமலிருப்பதையும் சுட்டிக்காட்டி வந்தோம். இப்போது ஶாஸ்த்ரீயமுறையில் பேசும் ச்ருங்கேரி பீட$_2$ாதி$_4$ பதிக்கும் கலைமகள் முதலானவற்றில் இடமளிக்கப்படுகிறது. 11—4—82 கல்கி இதழில் ஸ்ரீமதழகியசிங்கரின் பேட்டியில் அவரது கருத்துக்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, ப$_4$க$_3$வத்பரத்வத்தை நிலைநாட்டி, ஸ்ரீமதழகியசிங்கர் ஸாதித்திருப்பதையும், "தென்கலை வடகலை வ்யவஹாரங்கள் பக்தியினால் ஏற்படுபவை. அவற்றைப் பெரிதுபடுத்தக் கூடாது" என்று ஸாதித்திருப்பதையும் வெளியிட்டிருப்பது நேர்மையானது. "ஜீயரின் கருத்துக்களில் ஒன்றிரண்டை ஜீரணிப்பது சிலருக்குச் சிரமமானாலும் பெரியவரது எண்ணங்களுக்கு மதிப்பளித்து அவையும் இங்கு பிரசுரமாகின்றன" என்று ஆசிரியர் குறிப்பெழுதியிருப்பது பெரும்பான்மை மக்களைத் திருப்தி செய்வதற்கு என்று கொள்ளலாம்.

சமீபகாலம் வரையில் தினமணி கதிரில் ஆசிரியராயிருந்த திரு நா. பார்த்தசாரதி அவர்கள் தமது மணிவண்ணன் பதிலில் திருக்குறுங்குடி கோவில் 'அரியும் சிவனும் ஒன்று' என்று நிரூபிப்பதாக எழுதினர். "திருக்குறுங்குடி கோவிலில் உள்ள சிவனுக்கு 'பக்கம் நின்றார்' என்று திருமங்கையாழ்வாராலேயே பெயர் குறிக்கப்பட்டிருக்கிறது. ஒருவர் பக்கத்தில் மற்றொருவர் நிற்பதால் இருவரும் ஒன்று என்று ஆகிவிடாது. மேலும், பெருமாள் புறப்பாடுகளில் பக்கம் நின்றார் ஸந்நிதிக்கு முன் வரும்போது 'பக்கம் நின்றாற்கு ஒன்றும் குறைவில்லையா?' என்று அர்ச்சகர்மூலம் கேட்பதும், சிவன்கோவில் குருக்கள் முன்வந்து 'ஒன்றும் குறைவில்லை' என்று விண்ணப்பிப்பதும் இக்கோவிலில் இன்றும் நடைபெறுகிறது. இவற்றிலிருந்து இக்கோவிலில் சிவன் பரிவார தேவதையே என விளங்குகிறது. இதை தினமணிகதிரில் வெளியிட்டுப் பொதுமக்களுக்கு உண்மையை உணர்த்த வேண்டும்" என்று தினமணிகதிர் காரியாலயத்திற்குக் கடிதம் எழுதினோம். கதிர் நிர்வாகிகளுக்கு உண்மையை வெளியிடும் நேர்மையில்லை. திரு நா. பார்த்தசாரதி கதிர் ஆசிரியராயில்லை என்று தெரிந்தவுடன் அவருக்குக் கடிதத்தின் நகலை அனுப்பி, அவர் கருத்தில் மாற்றம் விளைந்ததா என்று கேட்டிருந்தோம். நாம் 12—4—82 அன்று சென்னை சென்றிருந்தபோது திரு நா. பார்த்தசாரதி போன் மூலம் நம்மோடு தொடர்புகொண்டு 'தங்கள் விளக்கத்தைக் கண்டபின் என்னுடைய கருத்து மாறிவிட்டது' என்று கூறினர். நமது விளக்கங்களைக் கண்டபின்பும் மௌனமாயிருக்கும் காமகோடி பீடாதிபதியும், கலைஞர் கருணாநிதியும், மணியனும், கி. வா. ஜகந்நாதனும், விகடன், இதயம் முதலான பத்திரிகைகளும் இத்தகைய நேர்மையைக் காட்டாதது மிகவும் வருந்தத்தக்கது. இனியாவது இவர்கள் நேர்மையையும் நடுநிலைமையையும் காட்டுவதன்மூலம் நம் நாட்டில் 'இந்து' மதம் என்று பெயர்பெற்று விளங்கும் மதங்கள் அனைத்தும் தனித்தன்மையுடன் செழித்து வளர வழிவகுப்பார்கள் என்று நம்புகிறோம்.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில்—ஐந்தாவது சதகம்

V. ஸ்ரீநிவாசன், திருச்சி-17 K. R. நரசிம்மன், மேட்டுப்பாளையம், திருச்சி ஜில்லா.

*1. நாலாவது சதகத்தில் 91, 92 கேள்விகளின் பதிலில் காமகோடிப் படை வரலாற்றை மாற்ற எண்ணிப் பல கற்பனைக் கதைகளை எழுதி வைணவத்திற்குத் தீங்கிழைத்துவருகிறது என்று நிரூபித்திருக்கிறீர்கள். விகடனில் வெளியிடப்பட்டுவரும் பரிசு நாவலான 'சோழநிலா' என்னும் கற்பனைச் சரித்திர நாவலில் 21—3—81 இதழில் வைணவர்களைக் கொலைகாரர்களாகவும், க்ருமிகண்டனை நல்லவனாகவும் சித்திரிப்பதன்மூலம் மு. மேத்தா என்னும் நாவலாசிரியர் தங்களது நிருபணத்தை மறுபடியும் உண்மையாக்கியிருப்பதைப் பார்த்தீர்களா ?*

பார்த்தேன். இப்பொய்ம்மை நம்நாட்டுப் பத்திரிகைகளில் மேலும் பல பொய்க் கதைகளின் மூலம் பரப்பப்படும் என்பதையும், அக்கதைகளுக்கெல்லாம் பல பரிசுகள் கிடைக்கும் என்பதையும் அறிவேன். இதற்கெல்லாம் தூண்டுகோல்—இப்பத்திரிகைகளோடும், இந்த எழுத்தாளர்களோடும் இடைவிடாமல் தொடர்புகொண்டு அவர்களை இத்தகைய கதைகளை எழுதும்படி உற்சாகப்படுத்திவரும் காமகோடி பீடாதிபதியே என்பதையும் அறிவேன். காலஞ்சென்ற ஜகச்சிற்பியன் என்ற நாவலாசிரியரைத் தூண்டிவிட்டு, க்ருமிகண்டனை நல்லவனாகச் சித்திரித்து "திருச்சிற்றம்பலம்" எனும் நாவல் எழுதச்செய்து, அதற்குப் பரிசு கொடுக்கச் செய்து விகடனில் வெளியிடச் செய்தார். இப்போது அதே பொய்யை மறுபடியும் பரப்பி, வைஷ்ணவர்களைக் கொலைகாரர்களாகவும் சித்திரித்து. மு. மேத்தாவை நாவல் எழுதச்செய்து, விகடனில் பரிசு நாவலாக வெளிவரும்படி செய்துவிட்டார். சைவத்திலேயே காபாலிகர்கள், காளாமுகர்கள் முதலான நரபலி கொடுக்கும் கொலைகாரர்கள் இருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. 'கல்கி' முதலான பல நாவலாசிரியர்களும் இவ்வுண்மையை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். வைணவத்தில் இத்தகைய கொலைகாரர்கள் இருந்ததாக வரலாறே கிடையாது. வைணவ வெறுப்பாலேயே இத்தகைய நாவலை எழுதச்செய்து,

விகடன் பரிசு கொடுத்திருக்கிறது என்பது வெளிப்படை. "முன்றிற் கிடந்த கருங்கடல் போய் முன்னைக் கடல்புக" [தக்கயாகப் பரணி] என்று ஒட்டக்கூத்தன் — குலோத்துங்க சோழன் (க்ருமிகண்டன்) கோவிந்தராஜப் பெருமாளைக் கடலில் தூக்கி எறிந்துவிட்டதாகத் தெளிவாகக் கூறியிருக்கிறான். இது "திருச்சிற்றம்பலம்" என்னும் விகடன் பரிசு நாவலிலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. அப்படியிருக்க, அப்பெருமாள் திருமேனியைப் பெயர்த்துக் கடலோரத்தே வைத்து, அங்கே கோயில் கட்டிக்கொள்ளுமாறு அச்சோழன் ஆணையிட்டதாக எந்த ஆதாரமும் இல்லாமல் 'சோழ நிலா' வில் எழுதப்படுகிறது. "ஒட்டக்கூத்தர் காவியச்சுவைக்காக 'குலோத்துங்கன், திருமாலை அவருக்கே உரிய பழைய கடலுக்கே அனுப்பிவிட்டான்' என்று தம் தக்கயாகப்பரணியில் பாடினார்" என்றும் எழுதுகிறார் மேத்தா. தெய்வத்திருமேனியை இடித்துக் கடலில் எறிந்த கொடுஞ் செயலை மறைப்பதற்காக எழுதப்படும் பொய்களே இவை என்பது நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும். ஒட்டக் கூத்தன் தனது குலோத்துங்க சோழன் உலாவில் சங்க காலத் தமிழர் கண்ட வேதமுதல்வனும் ஆதிபரம்பொருளான திருமாலைத் தன் சைவ வெறியாலே 'சிறு தெய்வம்' என்று தூற்றியிருக்கிறான். அதைக் குறிப்பில் காட்டியிருக்கும் மேத்தாவும்,விகடனும் ஒட்டக்கூத்தனைப் போலவே சைவ வெறியர்கள் என்பது சொல்லாமலே விளங்கும். கிருமிகண்டசோழனுக்கு மிகச் சமீப காலத்தில் எழுந்த திவ்யஸூரிசரிதம், கோயி-லொழுகு முதலிய வைணவ நூல்கள் குலோத்துங்கன் மீது பழி சுமத்துவதாக இவர்கள் எழுதுவது நகைப்பிற்குரியது. ஈடு முதலான திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களில் ஜ்ஞான பக்தி வைராக்யங்களில் தலைசிறந்தவர்களான நம்பிள்ளை, பெரிய வாச்சான் பிள்ளை முதலான பூர்வாசார்யர்களும் க்ருமிகண்டன் செய்த கொடுமையைப் பொறித்து வைத்திருக்கிறார்கள். பில்ஹணன் என்னும் வடமொழிக் கவியும் தன் காவியத்தில் இதைக் கல்வெட்டாக்கி வைத்திருக்கிறான். சைவ வெறியனை ஒட்டக்கூத்தன் பாடியிருப்பதே இவையெல்லாம் உண்மை என்று காட்டித் தரும்போது,இவர்கள் வைணவநூல்களைப் பழிப் பது நேர்மை தவறிய செயலேயாகும். இவ்விஷயத்தில் சைவரான

'சதாசிவபண்டாரத்தார்' என்னும் ஆராய்ச்சியாளர் எழுதியிருப்பவையெல்லாம் அபிமானத்தால் எழுதப்பட்டவையாகையாலே ஏற்கத்தக்கவையன்று என்பதைத் தற்போது 96-வயது நிரம்பியிருக்கும் தமிழ் மூதறிஞர் பி. ஸ்ரீ. அவர்கள் 'ஸ்ரீராமாநுஜர்' என்னும் தமது (சாகித்ய அகாடமி பரிசு பெற்ற) நூலில் விரிவாக விளக்கியிருக்கிறார். ஸுதர்சனர் பதில் இரண்டாவது சதகம் 22, 23, 24 கேள்விகளின் பதிலில் பி. ஸ்ரீ. யின் நிருபணங்களிலிருந்து முக்கியமான பகுதிகளை எடுத்துக் காட்டிப் பண்டாரத்தாரின் வாதங்களின் பொய்ம்மையை அம்பலப்படுத்தியிருக்கிறோம். பல பொய்க் கதைகளில் திருப்பித்திருப்பி எழுதுவதன் மூலம் இந்தப் பொய்யை மெய்யாக்கி விடலாம் என்று காமகோடிப் படையினர் கருதுவது மிகவும் அருவருக்கத்தக்கதாகும். கற்பனைக் கதைகள் மூலம் வரலாற்றைப் பொய்யாக்க முயலும் இவர்கள் தங்கள் சிறுமையைக் காட்டிக் கொள்கிறார்களே தவிர, இம்முயற்சியில் இவர்கள் வெற்றி பெறமாட்டார்கள். ''ஸத்யமேவ ஜயதி'' [உண்மையே வெல்லும்] என்பது உபனிஷத் வாக்கு.

S. *திருவேங்கடம், ஸ்ரீரங்கம்.*

*2. 2—4—81 குமுதத்தில் 'அகடிதகடனு சாமர்த்தியம் என்றால் என்ன?' என்னும் தலைப்பில் ஒரு துணுக்கு வெளி வந்துள்ளது. கல்கியின் குமாரர் ராஜேந்திரன் ராஜாஜியை 'அகடிதகடனு சாமர்த்தியம்' என்று அவர் எழுதியிருப்பதற்குப் பொருள் என்ன என்று கேட்டதாகவும், ராஜாஜி பொருள் விளக்க மறுத்துவிட்டதாகவும், ''இப்படிப்பட்ட ராஜாஜியுடன் இணைந்து இரண்டுநூல்களை மீ. ப சோமு எழுதி வெளியிட்டிருக்கிறார் என்றால் அவருடைய பொறுமை எப்படிப்பட்டது என்பதை நாம் ஊகித்துக்கொள்ளலாம்'' என்று கி. ராஜேந்திரன் கூறியதாகவும் வெளிவந்துள்ளது. இதுபற்றித் தங்கள் கருத்து என்ன?*

மீ. ப. சோமுவின் உதவியுடன் ராஜாஜி நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் சில பாடல்களுக்கு விளக்கமாக எழுதிய 'பக்தி நெறி' பற்றியும், முதலாழ்வார் மூவரின் சில பாடல்களுக்கு விளக்கமாக எழுதிய 'முதல் மூவர்' பற்றியுமே இங்கு குறிப்பிடப்படுகிறது. சில பாசுரங்களுக்கு எளிய

நடையில் விளக்கங்கள் கூறியிருந்தபோதிலும், தாம் சமரச வாதியானபடியாலும், சைவரான சோமுவைத் துணையாகக் கொண்டிருந்தமையாலும் இவ்விரு நூல்களிலும் 'ஆழ்வார்கள் விஷ்ணுபரத்வத்தை நிலைநாட்டியவர்கள்' என்னும் உண்மையை மாறுபடுத்த முற்பட்டார் ராஜாஜி. உடனுக்குடன் நமது ஸுதர்சனத்தில் கட்டுரைகளை வெளியிட்டு, ஆழ்வார்களின் சமயக்கொள்கையை நிலைநாட்டி ராஜாஜிக்கும் அனுப்பினோம் நாம். 'சமய விஷயங்கள் தமக்கு அவ்வளவாகத் தெரியாது' என்று ராஜாஜி எழுதிய பதில்களையும் அவ்வப்போது ஸுதர்சனத்தில் வெளியிட்டிருக்கிறோம். இது நிற்க. 'அக₄டிதக₄டநாஸாமர்த்₂யம்' என்னும் பத₃ம் திவ்ய ப்ரபந்த வ்யாக்₂யானங்களில் அடிக்கடி வரும் ஸமஸ்த(கூட்டுப்) பத₃மாகும். ஜீவர்கள் எவராலும் ஆற்றமுடியாத அருஞ்செயல்கள் அக₄டிதச் செயல்கள் எனப்படும். அத்தகைய செயல்களையும் ஆற்றவல்ல பரம்பொருளின் திறமையே அக₄டிதக₄டநாஸாமர்த்₂யம் எனப்படும். இதற்குப் பிரஸித்₃த₄மான த்₃ருஷ்டாந்தங்கள் பின்வருமாறு:— (1) எல்லாவுலகங்களையும் சிறு குழந்தை வடிவான தன் வயிற்றில் ஒரு மூலையில் அடக்கி ஓர் ஆலந்தளிரிலே சயனித்துக் கொண்டிருந்த எம்பெருமானுடைய திறமை அக₄டிதக₄டநாஸாமர்த்₂யத்தில் சேர்ந்ததாகும். (2) சிறு பிராயத்திலேயே கண்ணன் கோவர்த்தனமலையை எடுத்து ஏழு நாள் கைவிரலாலே தாங்கியதும் இத்தகைய அக₄டிதக₄டநாஸாமர்த்₂யமேயாகும்.

S. வரதராஜன், ஸ்ரீரங்கம்.

*3. 29—3—81 ஹிந்துவில் அநுபந்தத்தில் மயிலை கபாலீச்வரர் கோயில் பற்றிய கட்டுரையில்—சிவன் பார்வதிக்கு உபதேசித்துக் கொண்டிருந்தபோது பார்வதி ஒரு மயிலின் அழகை ரஸித்துக்கொண்டிருந்தாள் என்றும், அதைக்கண்டு கடுங்கோபம் கொண்ட சிவன் 'என் வார்த்தையைக் கேளாமல் மயிலைப் பார்த்துக்கொண்டிருந்ததால் நீ மயிலாகப் பிறக்கக் கடவாய்' என்று சாபம் கொடுத்தாரென்றும், அதன்படி மயிலாகி, பார்வதி சிவனைப் பூஜித்த தலமே மயிலாப்பூர் என்றும் ஸ்தல புராணம் காணப்படுகிறது.' இத்தகைய கதைகள் சைவத்துக்குப் பெருமை சேர்க்குமா ?*

பெரும்பாலான ஸ்தலபுராணங்களில் பாமரஜனங்களுக்குத் தலங்களின் மகிமையைப் புரியவைப்பதற்காக இத்தகைய கற்பனைக் கதைகள் காலக்ரமத்தில் கற்பிக்கப்பட்டன. காம கோடி பீடாதிபதி வேதசாஸ்த்ரங்களுக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தைக் காட்டிலும் அதிக முக்கியத்துவத்தை இந்த ஸ்தலபுராணங்களுக்குக்கொடுத்து, இவற்றைப் பரப்பும்படி தம் பக்தர்களுக்கு ஆணையிட்டிருக்கிறார். இதனால் இந்த ஸ்தலபுராணங்களின் தொகுப்புதான் இந்து மதம் என்னும் தவறான கருத்து பாமரமக்களிடையே பரவிவிட்டது. 'இப்படி சாபம்கொடுப்பதையும், அநுபவிப்பதையுமே இயல்வாகக் கொண்ட கடவுளர்கள் எப்படிப் பரம்பொருளாகமுடியும்?' என்று கிறித்தவர்களும் சமூகக்காரர்களும் நகைப்பதற்கு இடமளிக்கிறது இது. "ஜீவான்மா எத்தகையது? பரமான்மா எத்தகையது? இருவர்க்குமுள்ள தொடர்பு யாது? மோக்ஷம் என்பது என்ன? அதை அடைவதற்கு வழி என்ன?" முதலான, ஒவ்வொரு மதத்திற்கும் அவசியமான ஆராய்ச்சிகளில் மக்கள் ஈடுபடுவதை இந்த ஸ்தலபுராணங்கள் தடுத்துவிடுகின்றன. தலபுராணங்களுக்கு முக்கியத்துவம் குறைந்து, முற்கூறிய வேதாந்த ஆராய்ச்சிகளில் என்று மக்கள் ஈடுபடுகின்றனரோ அன்றுதான் இந்து மதத்தில் சேர்ந்த சைவம், வைஷ்ணவம், அத்வைதம் முதலான மதங்கள் எல்லாமே தழைக்கும்.

S. வேங்கடம் *சமயபுரம்.*

*4. சைவ வைஷ்ணவ சாக்த ஆகமங்களில் ஜ்ஞான பாதத்தில் "ஈசனைத் தவிர வேறொரு பொருள் இல்லை என்று உணரும் நிலையே ஜ்ஞானநிலை. அதுவே வீடு, அதுவே பேறு" என்று சொல்லியிருப்பதாகக் காமகோடி பீடாதிபதி 29—3—81 கல்கி இதழில் கூறியிருக்கிறாரே? இ:துண்மையா?*

மிகவும் பிற்பட்ட காலத்தில் வளர்ந்த சாக்த ஆகமங்களில் எதுவேண்டுமானாலும் சொல்லியிருக்கலாம். மகாபாரதத்திலும், ப்ரஹ்மஸூத்ரத்திலும் எடுக்கப்பட்ட சைவ வைஷ்ணவ ஆகமங்களில் அப்படி எங்கும் சொல்லப்பட்டிருக்கவில்லை. பரமான்மா, ஜீவான்மா ஆகிய இருவரும் தனித்தனித் தத்துவங்களென்றும், பரமான்மா எங்கும் பரவியிருப்ப

தால் எல்லாத் தத்துவங்களும் அதுவே என்று கூறலாம் என்றும், பரமான்மாவை ஜீவான்மா கோவில்களிலும், மனத்திலும் வைத்துப் பூஜிப்பதாலேயே ஜீவன் பரமனை அடைவதாகிற மோக்ஷத்தைப் பெறமுடியும் என்றும் இவ்வாகமங்கள் கூறுகின்றன. இப்படி பேதங்களைப் பற்றியே விரிவாகக் கூறியிருக்கையால் ஆதிசங்கரர் தமது ப்ரஹ்மஸூத்ரபாஷ்யத்தில் சைவ வைஷ்ணவ ஆகமங்கள் இரண்டையுமே கண்டித்திருக்கிறார். "உலகம் முழுவதும் பொய். எந்த பேதமும் அற்ற அறிவொன்றே மெய்'' என்னும் தம் கொள்கையையே இவ்வாகமங்கள் பேசியிருந்தால் இவற்றை அவர் கண்டித்திருக்கவே மாட்டார். ஆகவே பீடாதிபதி கூறியிருப்பது பொய்யேயாகும்.

ஜோஸ்யர், T. V. ரங்கஸ்வாமி அய்யங்கார், காஞ்சீ-3.

*5. 1936ம் வருஷம், ஸ்ரீஸரஸ்வதீ போதினி முத்ராக்ஷர ஆலயத்தில் பதிப்பிக்கப்பட்ட ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்துடன் இணைக்கப்பட்ட ஸ்ரீராம அஷ்டோத்தர சதநாமத்தில் "விபீஷண ப்ரதிஷ்டாதா ஸர்வாபகுண வர்ஜித:'' என்று அச்சிடப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க 1965ம் வருஷத்தில் தென்னிந்திய அர்ச்சகர் அசோசியேஷன் பதிவு எண் 39/1950 10-11 தம்புசெட்டித்தெரு, சென்னை-1. பொதுக்காரியதரிசி, ஸ்ரீ சி. சுவாமிநாத குருக்களால் வெளியிடப்பட்ட அஷ்டோத்தர சதம்பம் (விஷ்ணுபரம்) என்ற ஸ்தோத்திர நாமாவளியில் "சிவலிங்க ப்ரதிஷ்டாத்ரே நம:'' என்று உள்ளது. இப்பதிப்பின் ஆசிரியரான C. ஸ்வாமிநாத குருக்களுக்கு இதுபற்றி எழுதினேன். அவரிடமிருந்து சரியான பதிலில்லை. இதுபற்றிய உண்மை என்ன?*

"விபீஷணப்ரதிஷ்டாதா ஸர்வாபகுணவர்ஜித: । பரமாத்மா பரப்ரஹ்ம ஸச்சிதாநந்தவிக்ரஹ: ॥" என்பது பழைய பதிப்பிலுள்ள ராமாஷ்டோத்தரத்தின் கடைசிக்கு முந்திய ஶ்லோகம். இது குருக்களின் பதிப்பில் "ஶிவலிங்கப்ரதிஷ்டாதா பரமாத்மா பரப்ரஹ்ம ஸச்சிதாநந்தவிக்ரஹ:'' என்று மாற்றப்பட்டுள்ளது. 'ஸர்வாபகுணவர்ஜித:' (எந்த துர்குணமும் இல்லாதவன்) என்பது எடுக்கப்பட்டுவிட்டது. இது இருந்தால் ராமனுக்கு ப்ரஹ்மஹத்திதோஷம் ஏற்பட்டது என்னும் பொய்வாதம் நிற்காதாகையால் இத்திருநாமத்தை எடுத்துவிட்டார்கள். 'விபீஷணப்ரதிஷ்டாதா' என்பது 'ஶிவலிங்கப்ரதிஷ்டாதா' என்று மாற்றப்பட்டுவிட்டது. குருக்கள் பதிப்பில் ஶ்லோகம் ஒட்டாது என்பது

வெளிப்படை. இதிலிருந்தே களவு வெளிப்படுகிறது. 'ராமன் ராவணனைக்கொன்றதாலுண்டான ப்₄ரஹ்மஹத்திதோஷம் போவதற்காக ராமேச்வரத்தில் சிவலிங்கப்ரதிஷ்டை₂ செய்தான்' என்னும் வாதத்தின் பொய்ம்மை நமது வெளியீடான 'ராமலிங்கப்ரதிஷ்டை'யில் விரிவாக நிரூபிக்கப்பட்டுள்ளது. இன்றுவரை எவராலும் இதற்கு பதிலுரைக்கமுடியவில்லை.

R. தேவராஜன், பம்பாய்-19. (6, 7 கேள்விகள்)

*6. சில ஆழ்வார்கள் ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் பிருதுகளுடன் தங்கள் பெருமையையும். குலப்பெருமையும் கூறிக்கொள்வது எதனால்? "மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும் இவ்வையந்தன்னொடும் கூடுவதில்லை" என்ற குலசேகரன் 'கொல்லி காவலன், கூடல்நாயகன், கோழிக்கோன்' என்று கூறிக்கொள்வதின் நோக்கம் என்ன?*

ரிஷிகளும் *"வால்மீகிர் ப₄க₃வாந் ரிஷி:"* என்று தங்களது பெருமைகளைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். தாங்கள் சொல்லும் வார்த்தையில் பொய்யில்லை என்று காட்டுவதற்காக இப்படித் தங்கள் பெருமைகளையும், திருநாமங்களையும் தங்களது நூல்களில் சொல்லிக்கொள்ளும் மரபு நெடுங்காலமாகவே உண்டு. அப்படிச் சொல்லிக்கொள்ளாதவர்களான முதல் நாலு ஆழ்வார்களும், திருப்பாணாழ்வாரும் அநுப₄வம் விஞ்சியதாலே தங்களை மறந்தார்கள் என்று கொள்ளவேண்டும்.

*7. திருநாராயணபுரம் 108 திவ்யதேசங்களில் சேர்ந்ததா?*

1. மைசூரிலுள்ள மேலக்கோட்டை திருநாராயணபுரம். இது எம்பெருமானாரால் அபி₄மானிக்கப்பெற்றது. 'ஒருநாயகம்' [4-1] என்னும் திருவாய்மொழியில் "திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்று முதல் பாசுரத்தில் வருவதால் இப்பதிகத்தை எம்பெருமானார் திருநாரணனுக்கு ஸமர்ப்பித்தார். (2) திருச்சி ஜில்லாவில் தொட்டியத்துக்கருகில் மற்றொரு திருநாராயணபுரம் உள்ளது. அங்குள்ள வேத நாராயணப்பெருமாள் கோவிலில் சமணர்கள் நெருப்புப் பற்ற வைத்து விட்டார்கள். எம்பெருமானாருக்கும் முன்னிருந்த பிள்ளை திருநறையூர் அரையர் என்னும் மஹான் தம் குடும்பத்தோடே பெருமாள் திருமேனியில் படுத்துக்கொண்டு உயிரை விட்டுப் பெருமாளை ரக்ஷித்தார். ஆகையால் இதுவும் அவரது அபி₄மானம் பெற்ற ஸ்த₂லமாகக் கொண்டாடப்படுகிறது. இரு தலங்களும் 108 திவ்யதேசங்களில் சேர்ந்தவையல்லவாயினும் ஆசார்யாபி₄மான ஸ்த₂லங்களாகும்.

K. நாராயணன், புத்தூர், திருச்சி-17.

*8. ஸுதர்சனர்பதிலைச் சைவர்கள் பாராட்டியிருக்கிறார்களா?*

ஸுதர்சனர் பதில் நாலாவது சதகத்தை அதில் விமர்சிக்கப்பட்ட அனைவர்க்கும் அனுப்பினேம். அதைப்பெற்ற மதுரை ஆதீனம் ஸ்ரீஞானசம்பந்ததேசிகர் அவர்கள் ஸுதர்சனர் பதிலை மனமாரப் பாராட்டியுள்ளார்கள். அது பின்வருமாறு—

எல்லாம்வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக. இந்து மத விளக்கம் தேடிச் செல்லும் பக்தர்களுக்கு மிகத் தெளிவான முறையில் சாத்திர ரீதியில் நமது மதக்கொள்கைகளை அடிக்கோடிட்டு அழுத்தந்திருத்தமாக ' ஸுதர்சனர் பதில் ' குன்றின் மேலிட்ட விளக்காய் தோன்றியுள்ளது. எல்லாத் தரப்பு வாசகர்களும், சைவர்களாயினும் சரி, வைணவர்களாயினும் சரி அல்லது பிற மதத்தினர்களாயினும் சரி, தங்கள் அரிய வெளியீட்டில் சீரிய பயன்களைக் காணுவர் என்பதை உறுதியாகக் கூறிக்கொள்கிறோம். பாராட்டத் தக்க வண்ணம் பல நூறு கேள்விகளிலிருந்தும் பொருத்தமாக ஒரு நூறு கேள்விகளைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்குத் தக்கவாறு பதில்கள் அளித்துள்ளீர்கள். தேர்ந்த வழக்கறிஞராகப் பணியாற்றி வந்த தங்களுக்கு இந்த வகையில் கேள்விகளுக்குப் பதில்கள் சொல்வதென்றால் அது கைவந்த கலையாக இருக்குமல்லவா ? வைஷ்ணவ சித்தாந்தத்தில் மிகத் தேர்ச்சி பெற்றவராதலின் தத்துவ உண்மைகளை ஒரு சிறந்த வைஷ்ணவ பக்தர் என்ற முறையில் நூறு பதில்களையும் பக்தர்களின் உள்ளத்தில் பள்ளத்து வெள்ளம்போல் பதியச்செய்துள்ள தங்களை மிகவும் வாழ்த்தி மகிழ்ந்து மென்மேலும் இந்து சமய மாண்பினை நிலைநாட்டிட்டு அரும்பணியாற்றிவர ஆசீர்வதிக்கின்றோம்.

தலைசிறந்த சைவப்புலவரும் நேர்மையாளருமான நக்கீரன் வழியடிமை திரு. பி. மா. சோமசுந்தரனூர் 23-3-81ல் ஓர் கடிதம் எழுதியுள்ளார். அதில் முக்கியமான பகுதிகள் பின்வருமாறு—

சமய சமரசம் என்பது அவ்வச்சமயத்தவர் அவரவர்கட்கு ஏற்பட்ட விதிகளைப் பின்பற்றி ஒழுகுதலும் பிறசமயத்தாருடன் வலிய சண்டை ஏற்பட்டாலன்றி மற்ற சமயத்தவர் ஒழுகலாற்றுக்கு ஊறுவிளைக்காதிருத்தலுமே என்பது என் கோட்பாடு. அவரவர் தம் சமயத்தில் ஊன்றியிருத்தலைக்கண்டு மகிழாவிட்டாலும் பொறைமேற்கொண்டிருத்தலே சால்புடைமை ஆகும். சைவமும் வைணவமும் தங்கட்கு எதிரியாக முளைத்து அளவுகடந்த வளர்ச்சி பெற்றுள்ள மாயாவாதியை அடக்குதல் வேண்டும் என்பதும் என் விழைவே.

இத்தகைய நேர்மையாளர்களோடு ஒத்துழைத்து, சைவத்தையும் வைணவத்தையும் உறுதியாக வளர்க்கவேண்டுமென்பதே நமது எண்ணமுமாகும்.

R. தேவராஜன், பம்பாய்-19.

*9. ஸ்ரீமுஷ்ணமும், காஞ்சீபுரமும், ஜகந்நாதபுரியும் அருளிச் செயலில் இடம்பெற்றுள்ளனவா? இல்லாவிடில் காரணம் என்ன?*

ஸ்ரீமுஷ்ணம் ஸ்வயம்வ்யக்த (தான்தோன்றி) ஸ்தலங்களில் ஒன்று. அருளிச்செயலில் இடம் பெறவில்லை. காஞ்சியில் வரத ராஜப்பெருமாள் கோயில் முதலான பல ஸந்நிதிகள் அருளிச் செயலில் இடம் பெற்றுள்ளன. பூரிஜகந்நாதமும் அருளிச்செய லில் இடம்பெறவில்லை. ஆனால் எம்பெருமானாரால் மங்களா ஶாஸனம் செய்யப்பெற்றது. தம் திருவுள்ளத்தில் எந்தப் பெருமாள்கள் காட்சியளித்தனரோ அவர்களையே ஆழ்வார்கள் பாடினார்கள். எல்லாக் கோவில்களையும் எல்லா ஆழ்வார்களும் பாடுவது இயலாதன்றோ.

R. பார்த்தசாரதி, சென்னை-80.

*10. 12—4—81 கல்கியில் 'சமய ஒருமைப்பாடு' என்னும் தலைப்பில் காமகோடி சிறியபீடாதிபதி கூறியிருப்பதை விமர் சிக்கவேண்டுகிறேன்.*

" உலக சரித்திரத்தில் பல தேசங்களில் பல காலங்களில் பல மகான்கள் தோன்றி, பரதத்துவமாய் அமைந்த உண்மை களை அவர்களுடைய மனத்துக்குப் புலனாகும்படிசெய்து, தங்களைப் பின்பற்றுவோருக்கு அவைகளை எடுத்துக்கூறி, புது சமயம்போல் தோற்றுவித்தார்கள்......வேதத்தின் சாரம்தான் எல்லா சமயங்களும் " என்பது இதில் முதல் பாரா. இதில் 'அவர்களுடைய மனத்துக்குப் புலனாகும்படிசெய்து' என்பது அந்வயிக்கவில்லை. இது நிற்க. "மறுபிறப்பும் கர்மவினைப் பயனும் கிடையாது; எங்கள் மதத்தைப் பின்பற்றாத பாவி களுக்கு மீளாநரகம்தான். " என்று கூறும் கிறிஸ்தவமும் இஸ்லாமும் வேதத்தின் ஸாரம்தான் என்று பீடாதிபதி ஒப்புக்கொண்டுவிட்டார். இக்கொள்கை பரவினால் இந்துக்கள் என்று பெயர் வைத்துக்கொண்டிருக்கும் அனைவரும் இவ்விரு மதங்களில் ஒன்றைத் தழுவுவதற்கே வழி வகுக்கும். இந்தத் துணுக்குப் பேச்சின் கடைசி பாராவில் "பகவான் கீதையில் 'மனிதர்கள் என்னைப் பலவாறாக எந்த ரூபத்திலும் எப்படி வணங்கினாலும் அவரவர்களுடைய பக்தியை நான் வேரூன்றச்

செய்கிறேன்' என்று கூறியிருப்பது இதற்குச் சான்றாகும். இதை நாம் அறிந்துகொண்டால் சமயச் சச்சரவுகளும் சண்டைகளும் நம்மில் ஏற்படக் காரணமில்லை." என்று பேசியிருக்கிறார். இது கீதை 7-21 ச்லோகத்தின் ஸாரமாகும். இதற்கு அடுத்த இரு ச்லோகங்களில் தன்னை ஆராதிப்பவர்கள் மோக்ஷபலனைப் பெறுகிறார்கள் என்றும், மற்ற தெய்வங்களை ஆராதிப்பவர்கள் அற்பமாய், நிலையில்லாத பலன்களைப் பெறுகிறார்கள் என்றும் கூறி, தன் உருவங்களான மற்ற தெய்வங்களைத் தொழுபவர்களைக் குறித்து மிகவும் வருத்தத்தைக் காட்டுகிறான் கண்ணன். ஆதிசங்கரரும் இப்படியே பாஷ்யமிட்டிருக்கிறார். இதை மறைத்துவிட்டு 'எல்லா மதங்களும் ஒன்றுதான்' என்று எழுதுவது பெரிய மோசடியாகும். மதங்களின் அடிப்படையில் மிகவும் வேறுபாடுகள் உள்ளன என்பதும், ஒன்றைக் கண்டித்தாலொழிய மற்றொன்றை நிலைநாட்ட முடியாது என்பதும் மிகவும் வெளிப்படையான உண்மைகள். இப்படி வேறுபாடுகள் இருந்தபோதிலும் சகிப்புத் தன்மையோடு பல சமயத்தவர்கள் சண்டை சச்சரவுகள் இல்லாமலிருக்கலாம் என்பதும் வெளிப்படையானது. தலைசிறந்த ஆராய்ச்சி நூல்களான மத நூல்களை 'சண்டை சச்சரவு' என்று பெயரிட்டு அமுக்கப் பார்த்தால், பல மதங்களை நிர்தாக்ஷிண்யமாகக் கண்டித்திருக்கும் ஆதிசங்கரரின் பாஷ்யங்களையே முதலில் நெருப்பிலிட்டுப் பொசுக்கவேண்டும்; அல்லது ஆற்றில் தூக்கி எறியவேண்டும். இதற்கு இக்காமகோடி பீடாதிபதிகளும், கல்கி பத்திரிகையினரும் தயாராகயிருக்கின்றனரா என்பது உலகிற்குத் தெரியவேண்டும். விஞ்ஞானம், அரசியல் முதலிய பல துறைகளில் ஒருவரையொருவர் மறுக்கும் நூல்கள் தினமும் தோன்றிக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். கல்கி முதலான பத்திரிகைகளிலும் ஒவ்வொரு இதழிலும் இதைக் காண்கிறோம். சண்டை சச்சரவு என்னும் பெயர் வைத்து இவற்றை எவரும் ஒதுக்கவில்லை. ஒதுக்க முடியவும் முடியாது. மதத்துறையிலும் கருத்துவேற்றுமைகளைக் காட்டும் இத்தகைய ஆராய்ச்சி நூல்கள் வரவேற்கத்தக்கவையேயொழிய ஒதுக்கவோ, ஒடுக்கவோ தக்கவையல்ல என்பது என்றுதான் இவர்களுடைய மூளைக்கு எட்டுமோ தெரியவில்லை. உண்மையில் நெஞ்சறிந்த

பொய்யாகவே இவர்களால் இந்தச் சமரசவாத₃ம் செய்யப்படு கிறது என்பது அடுத்த கேள்வி பதிலிலிருந்து விளங்கும்.

P. கிருஷ்ணஸ்வாமி, சென்னை-17.

*11. ரௌத்ரி வருஷம் ஆவணி, புரட்டாசி ஆகஸ்டு, செப்டம்பர் (1980) மாதத்திய ஸ்ரீகாமகோடி பிரதீபம் இதழ் பார்த்தேன். அதில்—''து₃ர்மதீனும் து₃ருக்தி:''—சைவத்திற்கு பிறகு தோன்றிய வைணவத்தின் முரட்டுத்தனமான செயல்களினால் புரையோடிய சிவத்வேஷத்தை அகற்றும் அருமருந்தாக ''ஆனந்தலஹரியை'' உலகுக்கு அளித்தார் அப்பய்யதீக்ஷிதர். வைஷ்ணவத்தின் சிவாபகர்ஷத்தினால் கலக்கமுற்ற மனதிற்கு சாதகம்போல் செயல்பட்டது ஆனந்தலஹரீ நூல்'' என்ற வாக்கியங்களும் மேலும் பல வைஷ்ணவ நிந்தைகளும் உள. சுதர்சனர் பதிலில் இதைச் சாடி உண்மையைத் தெரிவிக்கவேண்டுகிறேன்.*

நாய் குரைத்தால் மனிதன் திருப்பிக் குரைப்பதில்லை. வைஷ்ணவர்கள் என்றுமே தம்மை நிந்தித்தவர்களை பதிலுக்கு நிந்தித்ததில்லை. நாமும் அவ்வழியையே பின்பற்றி விஷயங்களுக்கு மாத்திரம் பதிலுரைப்போம். ''சைவத்திற்குப் பிறகு தோன்றியது வைஷ்ணவம்'' என்று கதைக்கிறது காமகோடி ப்ரதீ₃பம். பல வருஷங்களுக்கு முன் இந்தக் காமகோடிப் பத்திரிகைக்கு — வேத₃வேதா₃ந்தங்களிலிருந்து விஷ்ணுபரத்வத்தை ஆயிரம் பக்கங்களில் நிலைநாட்டும் நமது விஷ்ணு சித்தவிஜயத்தின் முதலிரண்டு பாகங்களை அனுப்பி 'இயன்றால் இதற்கு பதிலுரைக்கவும்' என்று கடிதமும் எழுதினோம். இதற்கு பதிலுரைக்க எவராலுமாகாது என்று உணர்ந்து, இப்பத்திரிகை அப்புஸ்தகங்களை நமக்கே திருப்பியனுப்பிவிட்டது. சமீபத்தில் உலகத் தமிழ் மாநாட்டில் நம்மால் வெளியிடப்பெற்று, இன்றளவும் எவரும் பதிலுரைக்கத் துணிவில்லாமலிருக்கும் 'சங்ககாலத் தமிழர் சமய'த்தில் வைணவமதமே வைதி₃கமதமாகக் கொடிகட்டிப்பறந்த சங்ககாலத்தில் சைவமும், அத்வைதமும் தோன்றவேயில்லை என்று எவரும் வாய்திறக்க இயலாதபடி நிலைநாட்டியிருக்கிறோம். 'சங்கரரும் வைணவமும்' என்னும் நூலில் ஆதிசங்கரரும் விஷ்ணுவையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகக்கொண்டவர் என்பதை நிலைநாட்டி எதிரிகளை மண்ணுண்ணச் செய்திருக்கிறோம். இவற்றுக்கெல்லாம் பதிலுரைக்கமுடியாமலிருப்பது இந்தக் காமகோடி ப்ரதீ₃பமாகிற

சிறிய பத்திரிகை மாத்திரமல்ல; தமிழ்நாட்டில் அசுரராக்ஷஸ பலமுள்ள பல பத்திரிகைகளை ஆட்சிபுரியும் காமகோடி பீடாதிபதியே இவற்றுக்கு பதிலுரைக்க முடியாமல் செய லிழந்து நிற்கிறார். அப்பயதீக்ஷிதரின் மோசடிகள் பலரால் பலநூல்களில் அம்பலப்படுத்தப்பட்டுள்ளன. அவரைக் கட்டிக் கொண்டு அழும் 'காமகோடி ப்ரதீபப் பத்திரிகையையும் நாம் பொருட்படுத்தாமல் விடுவதே நல்லது. காமகோடி பீடாதி பதிகளின் அந்தரங்க சிஷ்யர்களால் நடத்தப்படும் இப்பத்திரிகை யில் வெளிவந்திருக்குப் வைஷ்ணவ நிந்தைகளிலிருந்து, பீடாதி பதிகள் பேசும் சர்வமத சமரசவாதம் எத்தனை பொய்ம்மை யானது என்பது விளங்கும்.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*12. கலைமகள் ஜனவரி இதழில் வெளியான 'சில பாவங்க ளின் நியாயங்கள்' என்ற குறுநாவல் பல முஸ்லிம் அன்பர்களுக்கு வருத்தத்தை உண்டு பண்ணியதாக அறிவதால், தங்களது மனப்பூர்வமான வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்வதாக ஏப்ரல் கலைமகளில் வெளியான ஆசிரியரின் குறிப்பொன்று கூறுகிறது. ஆழ்வார்களின் மதத்தைத் திரித்துக்கூறி பிரேமா நந்தகுமார் எழுதிய மூன்று கதைகளை வெளியிட்டு, ஸுதர்சனர் பதிலையும் பெற்று, வைஷ்ணவ சமூகத்தையே புண்படுத்தி வருத்தத்தை உண்டாக்கியிருப்பதை உணர்ந்தபின்பும் இக் கலைமகள் ஏன் இன்னும் வருத்தம் தெரிவிக்கவில்லை?*

முஸ்லிம்களைப் புண்படுத்தினால் அவர்கள் கட்டுப்பாடாகக் கலைமகள் வாங்குவதை நிறுத்திவிடுவார்கள். மேலும் பல நடவடிக்கைகளையும் எடுப்பார்கள். நாடார்களைப்பற்றிச் சிறிது இழிவாக ஒரு வாக்கியம் வந்ததற்காக அந்த சமூகம் பெரிய கிளர்ச்சி செய்து, குமுதத்தில் வெளிவந்த சுஜாதாவின் ஒரு நாவலையே அரைகுறையாக நிறுத்தச் செய்துவிட்டது. இந்தக் கட்டுப்பாடு வைஷ்ணவ சமூகம் ஒன்றில்தான் கிடையாது என்பதை நம்நாட்டுப் பிரபல பத்திரிகைகளான குமுதம், கல்கி, விகடன், கலைமகள் முதலான வார மாத ஏடுகள் பல வும் உணர்ந்து, 'தூங்கினவன் தொடையில் திரித்தமட்டும் லாபம்' என்னும் வழக்கின்படி தொடர்ந்து வைஷ்ணவர்களைப் புண்படுத்திக்கொண்டே இருக்கின்றன. வைஷ்ணவ சமூகம் விழித்தெழுந்தாலொழிய இதற்கு விமோசனம் இல்லை.

மேஜர்தாசன், ஈரோடு. [13,14 கேள்விகள்]

*13. பழநியில் நடந்த பிராம்மணர்களின் முதல் மாநாடு பற்றித் தங்கள் கருத்தென்ன?*

பிராம்மணர்கள் தங்கள் லோகாயத உரிமைகளைப் பெறுவதற்குப் போராடத் தொடங்கிவிட்டார்கள் என்று விளங்குகிறது. சிறுபான்மையினரான அவர்கள்—பிராம்மண விரோதிகள் பெரும்பான்மையினராயிருக்கும் இத்தமிழ்நாட்டில் இவ் விஷயத்தில் வெற்றிபெற முடியுமா? என்பது ஒரு கேள்விக் குறியாகவே நிற்கிறது. நாம் அடிக்கடி எடுத்துக்காட்டி வருவதுபோல், அந்தணர்களின் அடிப்படைக் கொள்கையான தெய்வ நம்பிக்கையை வலியுறுத்துவதற்கு அவரவர் மதச் சின்னங்களை அணிந்துகொண்டு எப்போதும் காட்சியளிப்பார்களானால், அவர்களிடையே ஒற்றுமையும், துணிவும் வளரும்; பிறரும் அவர்களை மதிப்பார்கள். லோகாயத முன்னேற்றமும் தெய்வபலத்தால் ஏற்படும். பழநிமாநாட்டிற்குத் தலைமை வகித்த ப்ரஹ்மஸ்ரீ சிவராமகிருஷ்ண அய்யரவர்கள் "ப்ராஹ்மணன் தான் கைவிட்டுவிட்ட ஆன்மீக நெறியை மறுபடியும் கைக்கொள்ளுவதொன்றே அவன் கடைத்தேற வழியாகும்" என்று பேசியதை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம்.

***14. கதா காலட்சேபம் செய்துவருபவர்களில் தங்களை மிகவும் கவர்ந்தவர் யார்?***

(1) உபயவேதங்களையும், ஸ்தோத்ர ரஹஸ்யங்களையும் தம் சிங்கக் குரலில் தங்கு தடையின்றிப் பொழிந்து விளக்கும் ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, (2) ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யாதிகளில் ஒப்பற்ற புலமைபெற்று, அபாரமான நினைவுத்திறனோடு சொல்லமுதத்தைப் பொழிந்து, பெருவிருந்து படைக்கும் வாகம்ருத வர்ஷியான ஸ்ரீ உ. வே. K. வரதாசார்ய ஸ்வாமி, (3) ஆசார்யரான காரப்பங்காட்டுக் கருணைமுகிலை நினைவுபடுத்திக்கொண்டு, தெளிந்த நீரோடை போன்ற நடையில் ஸம்ப்ரதாயார்த்தங்களை அழகுற விளக்கும் ஸாரார்த்தச் சொல்லழகரான ஸ்ரீ உ.வே. ஸுதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி. (4) விஷ்ணு பரத்வத்தை வெளிப்படையாகச் சொல்லுவதற்கே பல ஸ்ரீ வைஷ்ணவ உபந்யாஸகர்களும் பயப்படும் இக்காலத்தில் அஞ்

சாமல் விஷ்ணுபரத்வத்தை நிலைநாட்டும் விஷ்ணுபரத்வ ஸ்தா₂பக தீ₄ர ஶிகா₂மணியான ஶ்ரீரங்கம் ஶ்ரீ உ. வே நரஸிம்மாசார்ய ஸ்வாமி, (5) நவரஸங்களும் ததும்பும்படியாகவும், பேதை பாமரரும் புரிந்துகொள்ளும்படியாகவும் ஸர்வஜநரஞ்ஜகமாக உரையாற்றி அனைவரையும் மகிழ்விக்கும் ஸர்வஜனரஞ்ஜகவாங் மணியான பாலபண்டிதமணி ஶ்ரீ உ. வே. திருமலாசார்ய ஸ்வாமி ஆகிய இவ்விருவரும் என்னை மிகவும் கவர்ந்தவர்கள். தேசிக ஸம்ப்ரதா₃யஸ்த₂ர்களில் முக்கூர் ஶ்ரீ உ. வே. லக்ஷ்மீ நரஸிம்மாசார்ய ஸ்வாமி, தூப்புல் லக்ஷ்மீ நரசிம்மன், ஶ்ரீ உ.வே. ஸந்தான கோபாலாசார்ய ஸ்வாமி, திருக்கள்ளம் ஶ்ரீ உ. வே. நரஸிம்ஹ ராகவாசார்ய ஸ்வாமி, ஶ்ரீ உ.வே வில்லிவலம் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி முதலான பலரும், தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யஸ்த₂ர்களிலும். ஶ்ரீரங்கம் ஶ்ரீ உ. வே. S ராமஸ்வாமி அய்யங்கார் (B.A.L.T.) ஸ்வாமி, ஶ்ரீ உ. வே. E. S. பூவராஹாசார்ய ஸ்வாமி, மதுரைப் பேராசிரியர் திரு. அரங்கராசன் முதலான பலரும் பிரபல உபந்யாஸகர்களாய் விளங்குகிறார்கள். ஆயினும் நாம் அவர்களது உபந்யாஸங்களை அதிகமாகக் கேட்டதில்லையாகையால் அவர்களின் சிறப்புகளை இங்கு எழுதவில்லை.

S. வரதராஜன், ஶ்ரீரங்கம்.

*15. விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் இழிவுபடுத்துவதற்காகக் காமகோடி பீடாதிபதியால் தூண்டப்பட்டு 12-4-81 விகடன் இதழ் முதல் பரணீதரன் தமிழ்நாட்டுச் சிவன் கோவில் தல புராணக் கதைகளை 'திருத்தலப் பெருமை' என்னும் தலைப்பில் தொடர்ந்து எழுதத் தொடங்கியுள்ளார். இதைத் தொடர்ந்து விமர்சிப்பதன்மூலம் உண்மைகளை விளக்கவேண்டுகிறேன்.*

பீடாதி₄பதிக்கும் ஸுதர்சனத்துக்கும் கடந்த 23 வருடங்களாக நடந்துவரும் போராட்டத்தில் இப்போது ஒரு முக்கியமான கட்டம் நடந்துவருகிறது. 23 வருடங்களுக்குமுன் 'விஷ்ணுவுக்குத் தமோகுணம் உண்டு' என்று பொதுஜனப் பத்திரிகைகள் அனைத்திலும் பிரசாரம்செய்து, நமது ஸாத்விக விஜயத்தை பதிலாகப்பெற்று, ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ ஸாத்விகபுராணங்களனைத்துமே விஷ்ணுபரத்வத்தையே நிலைநாட்டுகின்றன என்னும் அசைக்கமுடியாத உண்மையை உணர்ந்த, ஸாத்விகவிஜயத்திற்கு இன்றளவும் பதிலளிக்க [illegible] [illegible]யிலிருக்கிறார் பீடாதி₄பதி. அதனால் ஸ்தல

புராணங்களைக்கொண்டு விஷ்ணுவை இழிவுபடுத்தி, பாமரமக்களுக்கு விஷ்ணுத்வேஷம் உண்டாகும் முயற்சியைச் சில வருடங்களாகவே விகடன், இதயம் முதலான பத்திரிகைகள் மூலம் செய்துவருகிறார். இப்போது தமிழ்நாட்டில் மூலை முடுக்குகளிலுள்ள கோவில்களின் ஸ்தலபுராணங்களையெல்லாம் எழுதும்படியாக பரணீதரனைத் தூண்டிவிட்டு, 1937ல் வ. சு. சண்முகம்பிள்ளை வெளியிட்ட திருக்குடவாயிற்புராணத்தை எடுத்துக்கொடுத்திருக்கிறார்.

இந்த ஸ்தல புராணங்களின் வரலாற்றைச் சுருக்கமாக இங்கு சொல்லவேண்டியது அவசியமாகிறது. வேதங்களும், உபநிஷத்துக்களும், மநு முதலான ஸ்ம்ருதிகளும், ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் என்னும் இதிஹாஸங்களும், விஷ்ணுபுராணம் முதலான ஸாத்விக புராணங்களும் நம்நாட்டில் ஆயிரக்கணக்கான வருடங்களாக விஷ்ணுபரத்வத்தை நிலைநாட்டியுள்ளன. இதனாலேயே ஆதிசங்கரர் முதலான எல்லா வைதிக மதத் தலைவர்களும் இதை ஒப்புக்கொண்டிருந்தனர். சங்ககாலத் தமிழரும் இதை ஒருமனதாக ஏற்றிருந்தனர். விசிஷ்டாத்வைதிகளும் த்வைதிகளும் அத்வைதத்தைப் பலவாறு கண்டிக்கத் தொடங்கியவுடன், அத்வைதிகள் சைவர்களோடு சேர்ந்துகொண்டு, சில துர்விருஷங்களாக வைஷ்ணவத்துக்குப் பல இடையூறுகள் செய்ய முற்பட்டனர். அவைகளில் ஒன்றே இந்த ஸ்தலபுராணங்களின் தோற்றமாகும். இவைகளில் பெரும்பாலான கதைகள் அந்தந்த ஊரில் இருந்தவர்களால் தங்கள் ஊரிலுள்ள கோவிலுக்குப் பெருமையையுண்டாக்குவதற்காக இதிஹாஸ புராணக்கதைகளோடு ஸம்பந்தப்படுத்தி எழுதிவைக்கப்பட்டவையாகும். நம்நாட்டில் மிகவும் பரவியிருந்த இதிஹாஸபுராணக்கதைகளோடு ஸம்பந்தப்படுத்தினால் தான் பொதுமக்கள் நம்புவார்கள் என்று இப்படிச் செய்தார்கள். உதாரணமாக, விகடனில் எழுதப்பட்டிருக்கும் குடவாயிற் புராணத்தையே எடுத்துக்கொள்வோம். இதில் மஹாபாரதத்திலுள்ளதான 'கருடன் அம்ருத கலசம் கொண்டுவந்த கதை' பயன்படுத்திக்கொள்ளப்பட்டுள்ளது. மஹாபாரதத்தில் 'கருடன் அம்ருத கலசத்தை எடுத்துக்கொண்டு நேரே தன் சிற்றன்னையான கத்ருவிடம் வந்தான்'' என்று உள்ளது. இந்த

ஸ்தலபுராணத்தில் அதற்கு முரணாக — கருடனை ஓர் அசுரன் வம்புக்கிழுத்தான் என்றும், அவனோடு சண்டையிடுவதற்காக கருடன் அம்ருதகலசத்தைக் குடவாயிலில் ஒரு புற்றின்மேல் வைத்தான் என்றும், கருடன் அசுரனைக்கொன்றுவருவதற்குள் புற்றிலிருந்த சிவலிங்கம் அம்ருதகலசத்தை இழுத்துக்கொண்டு விட்டது என்றும், சிவனை முழுமுதல்வன் என்று துதித்து கருடன் அம்ருதகலசத்தைப்பெற்றான் என்றும், அதற்குப் பிறகே கத்ருவிடம் கொண்டுசேர்த்தான் என்றும் கதை புனையப்பெற்றுள்ளது. இக்கதைகளெல்லாம் எந்தப் புராணத்திலும் இருப்பவையல்ல. சில தலபுராணங்கள் வடமொழி அறிந்தவர்களால் வடமொழியிலும், சில தலபுராணங்கள் தமிழ்ப்புலவர்களால் தமிழிலும் சில நூறுவருஷங்களுக்குள் புனையப்பெற்றவை. இதிஹாஸ புராணக்கதைகளைத் திருடி, அவற்றுக்கு ஒவ்வாத பகுதிகளை அக்கதைகளோடு சேர்த்து, பாமர ஜனங்களை நம்பவைப்பதற்காகப் புனையப்பெற்றவை இவை. விகடன்போன்ற பத்திரிகைகளில் எழுதப்படும் மற்ற கற்பனைக் கதைகள் கற்பனைவளம் உள்ளவர்களால் எழுதப் படுபவையாகையாலே சுவையாயிருக்கும். கற்பனை வளமில் லாதவர்களால் பாமரர்களை ஏமாற்றுவதற்காக எழுதப்பட்டவை யாகையாலே இந்த ஸ்தலபுராணக் கதைகளில் எச்சுவையுமில்லை. செல்லாக்காசை செல்லவைப்பதுபோன்ற இந்த முயற்சியை, பகுத்தறிவு வாதங்கள் பெருகிநிற்கும் இந்த இருபதாவது நூற்றாண்டில் ஒரு பீடாதிபதி தூண்டிவிடுவதும், லக்ஷக்கணக் கான வாசகர்களையுடைய ஒரு பத்திரிகை இப்பொய்க்கதைகளை வெளியிடுவதும் நகைப்பிற்குரியதாயுள்ளது. அடுத்துவரும் பொய்க்கதைகளை மேல் கேள்விகளில் ஆராய்வோம்.

**K. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17. (16, 17 கேள்விகள்)**

*16. காமகோடியின் ஆசியுடன் வெளிவரும் 'இதயம்' பத்திரிகை தேவிதரிசனத்தில் (26-4-81 இதழில்) இராவணனை வெல்ல இராமன் தேவியை வழிபட்டான் என்று உள்ளதே; ப்ராசீனமான எந்த ராமாயணத்திலாவது இப்படி உள்ளதா?*

ப்ராசீனமான வால்மீகிராமாயணம் ஒன்றுதான் உள்ளதை உள்ளபடி சொல்லுவது. அதில் இல்லாததால் இது பொய்க் கதையே. ரகுவம்சம், கம்பராமாயணம் முதலான ஸுப்ர ஸித்தமான காவியங்களிலும் இக்கதை இல்லை.

*17. "நீளாதேவி என்பவர் யார்" என்னும் கேள்விக்கு விடையவன் பதிலில் "திருமால் தேவியர் மூவருள் ஒருவர்; அவர் நீர்நிலைகளுக்கெல்லாம் தலைவி என்பர்" என்று ஏப்ரல் '81 கலைமகளில் விடையவன் (கி வா ஜ) எழுதியுள்ளார். இது சரியா?*

ஸ்ரீ, பூ₄மி, நீளா எனப்படும் திருமாலின் ப்ரத₄ான தேவியர் மூவருள் நீளாதேவி ஒருவர் என்பது சரி. 'இவர் நீர்நிலைகளுக்குத் தலைவி' என்பதற்கு ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. "நீளாஸூக்தம்" என வழங்கப்படும் வேத₃ப்பகுதியில், இவளை விஷ்ணு பத்னியாகவும், உலகிற்கு ஈஶ்வரியாகவும் ஓதி, "க்₄ருத வதீ, பயஸ்வதீ" [நெய்யையும், பாலையும் உடையவள்] என்றும் ஓதிற்று வேத₃ம். இதை அடியொற்றியே திவ்யப்ரபந்தங்களும், சிலப்பதிகாரம் முதலான தமிழிலக்கியங்களும் இவளை ஆயர்மடமகளாய் அவதரித்தவளாகப் பேசின. ஆகையால், நெய், பால் முதலிய போகப்பொருள்களுக்கு அதி₄பதி இவள் என்பதே தகும்.

S. முரளி, அந்தநல்லூர். [18 to 21 கேள்விகள்]

*18. 14—6—81 கல்கியில் "சிவன் காமனையும் காலனையும் அழித்தவராகையால் அவரிடத்தில் போனால் நமக்குப் பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை" என்று காமகோடிப் பெரிய பீடாதிபதி கூறியிருப்பது பற்றிய உண்மையை விளக்கவேண்டுகிறேன்.*

காமனையும் காலனையும் அழிப்பது ஸம்ஹாரக் கடவுளான சிவனுக்கு ஓர் அரிய காரியமல்ல. இதிலிருந்து அவரிடம் செல்பவர்களுக்குப் பிறப்பு இறப்பு இல்லை என்று எப்படித் தேறும்? "காமன் அழிந்திருந்தபோது உலகில் அவனால் நடக்கும் பிறப்பு உண்டாகவில்லை. காலன் அழிந்திருந்தபோது உலகில் அவனால் விளையும் மரணம் நடக்கவில்லை" என்று வேண்டுமானால் தேறலாம். நமக்குப் பிறப்பு இறப்பு இல்லாமல் போகவேண்டுமானால், அதற்காக நாம் எவனை அடைகிறோமோ அவனுக்குப் பிறப்பு இறப்பு இல்லாமலிருக்கவேண்டும். ஶதபத₂ப்₃ராஹ்மணம் முதலான வேத₃ப₄ாக₃ங்களும், *"நாராயணாத் ப்₃ரஹ்மா ஜாயதே, நாராயணாத் ருத்₃ரோ ஜாயதே"* [நாராயணோபநிஷத்] [நாராயணனிடமிருந்து பிரம

னும் உருத்திரனும் உண்டாகிருர்கள்] "*ஏகோஹ வை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா நேஸாந:*" [மஹோபநிஷத்] [பிரளய காலத்தில் நாராயணன் ஒருவனே இருந்தான். பிரமனுமில்லை; சிவனுமில்லை] முதலான உபநிஷத்துக்களும் பிரமன், சிவன் முதலானவர்களுக்குப் பிறப்பு இறப்பு உண்டு என்றும், நாராயணன் ஒருவனுக்கே அவையிரண்டும் இல்லை என்றும் முழங்குகின்றன. அதனாலேயே புருஷஸூக்தமும் '*தமேவம் வித்₃வாந் அம்ருத இஹ ப₄வதி நாந்ய: பந்த₂ா: அயநாய வித்₃யதே*" [அந்தப் பரமபுருஷனை இப்படி அறிபவனே மோக்ஷமடைகிறான். மோக்ஷம் அடைய வேறுவழியில்லை] என்று மோக்ஷமடைவதற்காகப் பரமபுருஷனை உள்ளபடி அறிவது தவிர வேறு வழியில்லை என்று ஓதிற்று. '*மோக்ஷம் இச்சே₂த் ஜநார்த்த₃நாத்*" [மோக்ஷத்தை ஜநார்த்த₃னனிடமிருந்தே விரும்பவேண்டும்] என்று ரிஷிகளும் முழங்கினர்கள். இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னிருந்த சங்ககாலச் சான்றோர்களும் '*மாஅயோயே! மாஅயோயே! மறு பிறப்பு அறுக்கும் மாசில் சேவடி மணிதிகழ் உருபின் மாஅயோயே!*" [பரிபாடல் 3-1...3] "*நாறு இணர்த்துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறு பெறு துறக்கம்*" [பரிபாடல் 15-15, 16] என்று திருமாலே மோக்ஷமளிக்க வல்லவன்; வேறு எவனுமல்லன் என்று அந்வய வ்யதிரேகங்களாலே (உடன் பாட்டாலும் எதிர்மறையாலும்) இவ்விஷயத்தை அறுதியிட்டார்கள். வேதங்கள் "*தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம்*" என்று விஷ்ணுவின் ஸ்தா₂னத்தையே மேலான பரமபத₃ம் என்று பலவிடங்களில் முழங்குகின்றன. சிவலோகத்தை சிவனுடைய பரமபத₃ம் என ஓரிடத்தில்கூட வேதங்கள் ஓதவில்லை. சிவன் காமனை எரித்தானேயொழிய, பார்வதியிடம் காமவசப்பட்டு '*உமையொடு புணர்ந்து காமவதுவையுள் அமையாப் புணர்ச்சி அமைய*' [பரிபாடல் 5-28, 29] என்று பரிபாடலில் கூறியபடியே நீண்டகாலம் ஸ்த்ரீ ஸம்போ₄க₃த்தை அநுப₄வித்தான் என்றும், மோஹினி உருக்கொண்ட திருமாலைக்கண்டு மயங்கி, பின் தொடர்ந்து ஓடி, வீர்யம் விழப்பெற்ருன் என்றும் இதிஹாஸபுராணங்கள் பறைசாற்றுகின்றன. "ருத்₃*ரஸ்ய த்வேவ ஶிர உத்பிபேஷ*" [யஜுர்-ஆர 1-5] [உருத்திரனின் தலையையே உயர எறிந்தது] என்று யஜுர்வேத₃ம் ருத்₃ரனின்

தலை அறுந்த செய்தியையும் பேசிற்று. இப்படி வேத,ஶாஸ்த்ரங்கள் முழங்கும்போது 'சிவன் காமனை அழித்தான், காலனை அழித்தான்; ஆகையால் அவனையடைந்தால்தான் மோக்ஷம்'' என்று கூறுவது பாமரஜனங்களை மயக்க உதவலாம். வேத, ஶாஸ்த்ரங்களை அறிந்தவர்கள் இதை ஏற்கமாட்டார்கள்.

*19 15—2—81 'பாலஜோதிடம்' பக்கம் 4ல் 'ஆழ்வார்' என்னும் தலைப்பில் ''ஆழ்வார் என்பதற்கு நல்லயௌவனத்தோடு இருக்கும் நங்கை என்று அர்த்தம். ஆயிரம் வருஷங்களுக்கு முந்தின பழைய கோயில் கல்வெட்டுக்களிலே ஒரு ராஜா ஒரு ஸ்த்ரீயைக் கல்யாணம் பண்ணிக்கொண்டான் என்றால், இன்ன ராஜாவுக்கும். இன்ன ஆழ்வாருக்கும் கல்யாணம் நடந்தது என்று பொறிக்கப்பட்டிருக்கும். அதிலிருந்து நல்ல யௌவனத்தோடு இருக்கும் உத்தமலட்சணம் உடைய ஸ்த்ரீயைக் குறிக்க ஆழ்வார் என்று எழுதியிருக்கிறார்கள் என்று தெரிகிறது.'' என்று காமகோடிப் பெரிய பீடாதி,பதி கூறியதாக உள்ளது. இது சரியானதா ?*

'ஆழ்வார்' என்பதற்கு 'நல்ல யௌவனத்தோடு இருக்கும் நங்கை' என்று எந்த நிகண்டுவிலும், அகராதியிலும் பொருள் இல்லை. எம்பெருமானுடைய கு,ணங்களில் ஆழ்ந்திருப்பவர்களாகையாலே, நம்மாழ்வார் முதலானவர்களுக்கு 'ஆழ்வார்கள்' என்று பெயர் ஏற்பட்டது. அந்த ஆழ்வார்களிடம் ப,க்தியினாலே சில ஸ்த்ரீகள் ஆழ்வார் என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கலாம். அல்லது வேறு காரணங்களாலும் அவர்களுக்கு 'ஆழ்வார்' என்னும் அடைமொழி இடப்பட்டிருக்கலாம். ''ஆழ்வார் என்பதற்கு 'நல்ல யௌவனத்தோடு இருக்கும் நங்கை' என்று அர்த்தம்'' என்று பீடாதி,பதி எழுதியிருப்பதிலிருந்து அவருக்குத் தமிழறிவு போதாது என்று விளங்குகிறது. 'தீக்குறளை சென்றோதோம்' என்று ஆண்டாள் திருக்குறளை நிந்திக்கிறாள் என்று வைஷ்ணவ த்,வேஷத்தால் எழுதியபோதும், ஆத்திசூடியில் 'அறனை மறவேல்' என்றிருப்பதை 'அரனை மறவேல்' என்று சிவாபி,மானத்தால் மாற்றியபோதும் பீடாதி,பதியின் தமிழறிவு ஐயத்திற்கு இடமானதே என்று முன்னமே நிலைநாட்டப்பட்டிருக்கிறது.

*20. 5—6—81 தேதியுள்ள ஹிந்து பத்திரிகையில் பக்கம் 10ல் உள்ளதோர் ஆராய்ச்சிக் கட்டுரையில் ''An avatara of*

**of Vishnu—Though the Buddha is generally portrayed as an avatara of Vishnu in several puranas, it is only in the Bhagavata purana that the experts have come across a reference to Vrishabhanatha or Adinatha, the first of the Jain thirthankara, being described as the avatara of Vishnu"** *என்று எழுதப்பட்டுள்ளது. இதில் கூறியிருப்பதுபோல் விஷ்ணுவின் அவதாரமாக பாகவதத்தில் குறிக்கப்பட்ட வ்ருஷபதேவர் ஜைனதீர்த்தங்கரரா?*

பாகவதத்தில் 5-வது ஸ்கந்தத்தில் 3, 4, 5, 6 அத்தியாயங்களில் வ்ருஷபதேவரின் சரித்திரம் விளக்கப்பட்டுள்ளது. அவர் பரமவைதிகராகக் குறிக்கப்படுகிருரேயொழிய ஜைன மதத்தவராகக் குறிக்கப்படவில்லை. பெயரில் ஒற்றுமையை மாத்திரம் வைத்துக்கொண்டு செய்யப்பட்ட பொய்யான ஆராய்ச்சியாகும் இது.

*21. வர்ணுச்ரமதர்மங்களை இக்காலத்தில் சிறிதுகூட ஒழுங்காக அநுஷ்டிக்கமுடியவில்லையே? இதனுல் ஸ்ரீவைஷ்ணவனின் பேற்றுக்குத் தடையுண்டா?*

வர்ணுச்ரமதர்மங்களை இயன்றவரை அநுஷ்டிக்கவேண்டும் என்பது ஸ்ரீவைஷ்ணவ மதக்கொள்கை. ஆகையால் ஸந்த்யாவந்தனம் செய்வது, தர்ப்பணம் செய்வது, ச்ராத்தம் செய்வது முதலான அத்யாவச்யகமான ஆசாரங்களையாவது அநுஷ்டித்துக்கொண்டு 'எம்பெருமானே தஞ்சம்' என்ற உறுதியுடனிருக்கும் (ப்ராஹ்மண) ஸ்ரீவைஷ்ணவனுக்கும் பேற்றுக்குத் தடையில்லை.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*22 14—6—81 இரவு 9-30 மணிக்கு 'சங்ககாலத் தமிழர் வாழ்வியல்' என்னும் பொருள்பற்றிக் குன்றக்குடி அடிகளார் திருச்சி வாஞெலியில் பேசினர். அப்பேச்சை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

இப்பேச்சை நாமும் கேட்டோம். நமது 'சங்ககாலத் தமிழர் சமயம்' என்னும் நூல் இவருக்கும் நமது Press Foreman (தலைமைத் தொழிலாளி) D. முத்துவால் அனுப்பப் பெற்று, இதற்கு பதிலுரைக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்

டது. "நமது சகோதர மதத்தோடு சர்ச்சை வைத்துக் கொள்ள நாம் விரும்பவில்லை" என்று பொருள்பட இவர் பதில் எழுதிவிட்டார். நமது நூலுக்கு மறைமுகமாக ஏதாவது பதில் வருகிறதா என்று அறிந்துகொள்வதற்காக இவ்வுரை முழுவதையும் நாம் குறிக்கொண்டு கேட்டோம். சங்ககாலத் தமிழரின் சமய இயல் தவிர வாழ்வியலின் மற்ற பகுதிகளைப் பற்றி அடிகளார் அழகாகப் பேசினார். சமயஇயலுக்கு வரும் போது அந்தோ! நடுநிலைதவறித் தடுமாறி விட்டார். 'சங்ககாலத் தமிழர் தெய்வம் சிவம்' என்றார். எட்டுத்தொகையையும் பத்துப்பாட்டையும் படித்தால் 'சிவம்' என்னும் சொல்லையே அதில் காணமுடியவில்லை. மும்மூர்த்திகளில் ஒருவனை அழித்தற்கடவுளான உருத்திரனைப் பற்றியே சிலவிடங்களில் குறிப்பு வருகிறது. மிகப்பிற்காலத்தில் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவனாகச் சைவர்களால் உருவாக்கப்பெற்ற சிவனைப்பற்றிய பேச்சே சங்கப்பாடல்களில் இல்லை. "அழிக்கும் கடவுளான உருத்திரனும் அவனது அழிப்புத் தொழிலும் திருமாலே; அதாவது திருமாலுக்கு வசப்பட்டவையே" என்று "*மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ*" என்னும் அடியிலே முதற்பரிபாடலே முழங்குகின்றது. 'அவ்வுருத்திரனுக்குத் திரிபுரம் செற்ற புகழினை விளைத்தவன் ஆதிசேஷனே' என்று பரிபாடல் திரட்டின் முதற்பாடல் பேசுகின்றது. இவற்றையும், மற்றும் பரம்பொருளுக்கே உரிய பத்துவகையான பெருமைகளையும் திருமால் ஒருவனுக்கே சங்ககாலச் சான்றோர்கள் முழங்கியிருப்பதையும், வேறு எந்த தெய்வத்திற்கும் அப்பெருமைகளில் ஒன்றும் ஓரிடத்திற்கூடக் கூறப்படவில்லை என்பதையும் நமது 'சங்ககாலத் தமிழர் சமயம்' என்னும் நூலில் அசைக்கமுடியாதபடி நிலைநாட்டி ஆயிரக்கணக்கான தமிழறிஞர்களுக்குப் பிரசாரம் செய்திருக்கிறோம். அதுபற்றி 'தினமணி சுடர்' பத்திரிகையும் நடுநிலைநின்று விமர்சித்திருப்பதை உலகறியும். அந்நூல் இவருக்கும் அனுப்பப்பட்டுள்ளது. இந்நூலையே பார்த்ததாகக் காட்டிக்கொள்ளாமல் 'சங்க காலத் தமிழர் தெய்வம் சிவம்' என்று பேசியதோடு, 'சங்ககாலத்தில் சமயச் சண்டைகள் இல்லை. "*ஆலமும், கடம்பும், நல்யாற்று நடுவும், கால்வழக்கு அறுநிலைக் குன்றமும், பிறவும், அவ்வவை மே(வி)ய வேறு வேறு பெயரோய்!*" என்று நாலாம் பரிபாடலில்

'எல்லா தெய்வங்களும் ஒன்றே' என்று கூறியிருக்கிறது'' என்றும் கூசாமல் பேசுகிறார். இந்த நாலாம் பரிபாடல் திருமாலைப் பற்றியது. இதைப் பாடிய கடுவன்இளவெயினனாரே மூன்றும் பரிபாடலையும் பாடியவர். இப்பாடல்களில் ''எல்லா தேவர்களையும், எல்லாப் பொருள்களையும் படைத்தும், அந்தர்யாமியாய் நின்று அளித்தும், பிரளயகாலத்தில் அழித்தும் மற்றும் பல அருஞ்செயல்களைச் செய்தும், எல்லா உயிர்களுக்கும் உறவினனாய் நின்றும், மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடியுடையவனாகவும் விளங்கும் முழுமுதற்பொருள் திருமாலே'' என்று காட்டுகிறார் கடுவன் இளவெயினனார். ''*நின்னிற் சிறந்த நிறை கடவுளவை*'' என்னும் அடியிலே 'திருமாலிடத்திலேயே சிறப்பும் நிறைவுமுடைய கடவுள் தன்மை உள்ளது' என்று முழங்குகிறார். 'இப்பெருமைகளையெல்லாம் அந்தணர் அருமறை ஓதுகின்றது' என்றும் காட்டுகிறார். இப்படிக் காட்டிவிட்டு ''ஆலிலையில் வடதளசாயி என்னும் பெயரையும், கடம்பமரத்தில் கண்ணன் என்னும் பெயரையும். நல்யாற்று நடுவாகிய திருவரங்கத்திலே அரங்கன் என்னும் பெயரையும், தன்னை அடைந்தவர்களுடைய கால வழக்கை அழிக்கும் தன்மையுடைய திருமலையிலே வேங்கடவன் என்னும் பெயரையும், மற்றும் பற்பல திருக்கோயில்களில் பற்பல பெயர்களையுமுடையவனாகத் திருமால் எழுந்தருளியிருக்கும் பெருமையை 'ஆலமும் கடம்பும்' என்று தொடங்கிக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். இப்பாடலில் 'எல்லா தெய்வங்களும் ஒன்று என்று கூறுகிறார்' என்று கூறுவது ஆசிரியரின் கருத்துக்குச் சிறிதேனும் பொருந்துமோ? மேலும் 'வினை' என்னும் சொல் இக்காலத்திற்போலே 'நல்வினை, தீவினை' என்னும் பொருளில் வழங்கப்படாமல் 'செய்தொழில்' என்னும் பொருளிலேயே சங்ககாலத்தில் வழங்கப்பட்டுள்ளது என்றும் ஓரிடத்தில் குறிப்பிட்டார். ''*இருமை வினையும் இல ஏத்துமவை*'' [பரிபாடல் 13-48] [திருமாலை ஏத்துகிறவர்கள் இருவினைகளாகிற புண்ய பாபங்கள் அழியப்பெற்று மோக்ஷம் அடைவர்] என்று சங்க காலச் சான்றோர் கூறியிருப்பதை மறந்துவிட்டார்போலும். சங்ககாலத்தில் சமயச் சண்டைகள் இல்லை என்பது உண்மையே. அதற்குக் காரணம் — திருமால் ஒருவனையே பரம்பொருளாகவும், மற்ற தெய்வங்களனைவரையும் அவனுக்கு அடங்கித்

தொழில் புரிபவர்களாகவும் கூறும் முக்கோற்பகவரின் வைதிக மதமே அக்காலத்தில் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தமையும், சைவம் அத்வைதம் முதலானவை அக்காலத்தில் தோன்றியிருந்தமையுமேயாகும். ஆகையால் தாம் பின்பற்றும் சைவ மதத்தையும் சங்ககாலத் தமிழர் சமயமாக நிலைநாட்ட முடியாமல் சமரசவாதம் செய்து தடுமாறுகிறார் அடிகளார் என விளங்குகிறது.

S. வரதராஜன், ஸ்ரீரங்கம்.

*23. 15-வது கேள்வியில் குறிக்கப்பட்ட 'திருத்தலப் பெருமை' யின் 9-வது பகுதியில் (7—6—81 விகடன்) ஆலங்குடித் தல புராணத்தில் ஸ்ரீமஹாலக்ஷ்மி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை வழிபட்டு ஆறு பிள்ளைகளைப் பெற்றாள் என்றும், மஹாவிஷ்ணு ஆலங்குடிப் பெருமானின் புகழ் பாடினார் என்றும் குறித்திருப்பதாகப் பிதற்றப் பட்டுள்ளது. தக்க பதிலடி கொடுக்கவேண்டுகிறேன்.*

ஸ்தலபுராணங்கள் செத்த பாம்பைப் போன்றவை. அவற்றை அடிக்கவேண்டிய தேவையில்லை. அவை புளுகுணிப் புராணங்கள் என்பதை அனைவரும் அறிவர். விஷ்ணுவைத் தாழ்த்திப் பேசி, சிவனுக்குப் பெருமையை விளைப்பதற்காகப் புனையப்பெற்ற இப்புராணங்களில் பலவிடங்களில் சிவனுக்கும் பார்வதிக்கும் தாழ்வுகளே பறைசாற்றப்பட்டுள்ளன. உதாரணமாக "ஒரு நாள் கைலாசத்தில் பந்து விளையாடிக் கொண்டிருந்த பார்வதி தேவி, உயரே சென்ற பந்தைப் பிடிப்பதற்காகக் கையைத் தூக்கியபடி காத்திருக்க, சூரியன் தன்னைத்தான் நிற்கச் சொல்கிறாள் என்று நினைத்துத் தன் தேரை நிறுத்த, அதனால் உலக இயக்கம் தடைப்படுகிறது. இது குறித்து உலக மாந்தர் சிவபெருமானிடம் முறையிட, இதற்குக் காரணமான பார்வதியைப் பரமசிவன் கடிந்து சாபமிடுகிறார். மனைவி ஸ்தானத்தை இழந்த பார்வதி பூலோகம் சென்று காசியாரண்யத்தில் பிறந்து, தவமியற்றி மீண்டும் தம்மைக் கணவனாக அடையுமாறு பணிக்கிறார்". என்று இந்த விகடனிலேயே எழுதப்பட்டுள்ளது. பதரிகாச்ரமத்திலிருந்து தவமியற்றியவர்களாகப் புகழ் பெற்ற நரநாராயணர்கள் திருநறையூரிலிருந்ததாகப் புளுகி, அவர்களை துர்வாசர் பறவைகளாகும்படி சபித்ததாகவும், திருமால் சொக்கட்டான் தகராறில் லட்சுமிக்கு சாபம் கொடுத்ததாகவும் 21-6-81 விகடனில் புளுகுபுராணங்கள் அச்சிடப்பெற்றுள்ளன. இப்படி சிவன் பார்வதி முதலான தெய்வங்கள் ஒரு

வர்க்கொருவர் சாபம் கொடுப்பதாகவும், அவர்களைக் குறித்து மற்றவர்கள் சாபம் கொடுப்பதாகவும் எழுதிய கதைகளை லக்ஷக்கணக்கான பாமர ஜனங்கள் படிக்கும் பத்திரிகைகளில் வெளியிடுவது அந்த தெய்வங்களுக்குப் பெருமையாகுமா என்பதை அந்தோ! விகடன் ஆராயவில்லையே! கழகக்காரர் களும், கிறிஸ்தவர்களும் இத்தகைய கதைகளைப் பார்த்துச் சிரிக்கிறார்களே. இந்தக் கதைகளில்தானா 'இந்து' மதம் அடங்கி யிருக்கிறது? "வேதாந்தக் கொள்கைகளிலேயே 'இந்து' மதத் தின் பெருமைகள் அடங்கி நிற்கின்றனவேயொழிய இத்தகைய பொய்க் கதைகளில் அல்ல" என்பது என்றுதான் இவர்களு டைய மூளைக்கு எட்டுமோ தெரியவில்லை.

S. வேங்கடம், சமயபுரம்.

*24. ஆனிமாதம் ஸ்ரீரங்கநாதபாதுகாவில் 'திருப்பிரிதியும் திருமங்கையாழ்வாரும்' என்னும் தலைப்பிலுள்ள ஸ்ரீமதாண்டவன் அருள்மொழியில் "ப்ரஹ்மாவின் ஸந்ததியாகிய இராவணனையும் இந்திரஜித்தையும் கொன்ற தோஷத்திற்குப் பரிஹாரமாக இராமன் திருக்கண்டங்கடிநகரிலும், லக்ஷ்மணன் லக்ஷ்மண ஜூலாவிலும் தபஸ் செய்து தோஷபரிஹாரம் செய்துகொண்ட தாக அவ்வூர் ஸ்தலபுராணம் கூறுகிறது" என்று ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி ஸாதித்துள்ளார். கொடியவனை இராவணனுக்கு தண்டனை வழங்கியதால் இராமனுக்கு தோஷம் உண்டாகுமா என்பதை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

ராமன் க்ஷத்ரியகுலத்திலே அவதரித்தவன், தவறுசெய்த வர்களை தண்டிப்பது க்ஷத்ரியதர்மம். தவறு செய்தவர்களிலே முன்னணியில் நிற்பவன் இராவணன். லோகமாதாவிடமும் பாகவதோத்தமர்களான பல ரிஷிகளிடமும் அபசாரப்பட்ட ராவணனுக்கும் இந்த்ரஜித்துக்கும் ப்ராஹ்மண்யம் உள்ள தென்று கூறுவதும் சரியல்ல. இப்படிக் கூறுவதிலிருந்தே இந்த ஸ்தலபுராணங்கள் பிற்காலத்தில் புனையப்பெற்ற அபத்தக் களஞ்சியங்கள் என்பதை அறிவாளிகள் அறுதியிடலாம். அறிவாளிகளில் தலைசிறந்த ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமியும் இதை இசைவார் என்பதில் ஐயமில்லை. நிற்க; திருப்பிரிதி விஷயமாக அடியேனது நிர்ணயத்தை இக்கட்டுரையில் ஏற்றுக்கொண்ட மைக்கு ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிக்கு க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*25. நான்காவது சதகம் 97-வது கேள்வி – பதிலின் தொடர்ச்சி.*

"(1) ப்₃ரஹ்மஸ்வரூபத்துக்கு *ஶப்₃த₃*ாதி₃கு₃ணங்கள் உண்டு. (2) வேத₃*ஶப்₃த₃*ங்கள் ப்₃ரஹ்மஸ்வரூபத்தில் என்றுமே அடங்கியிருக்கின்றன. அதனாலேயே வேத₃ம் நித்யம் எனப்படுகிறது" என்று ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ரௌத்ரி புரட்டாசி, ஐப்பசி இதழ்களில் 'அருள்மொழி'யில் வெளிவந்ததுபற்றி, கடந்த ஒன்பது மாதங்களாக உப₄யகலையிலுமுள்ள பற்பல வித்₃வான்களைக் கருத்துரைக்குப்படி நேரில் கேட்டேன். அனைவருமே "(1) ப்₃ரஹ்மஸ்வரூபத்தில் *ஶப்₃த₃*ாதி₃கு₃ணங்கள் கிடையாது. *(2)* வேத₃நித்யத்வமாவது ஆநுபூர்வீநித்யத்வமேயொழிய *ஶப்₃த₃*நித்யத்வமன்று." என்பதே ஸ்ரீபா₄ஷ்யகாரர், நடாதூரம்மாள், *ஶ்*ருதப்ரகா*ஶி*காசார்யர், பெரியவாச்சான்பிள்ளை பிள்ளைலோகாசார்யர், ஸ்ரீவேதாந்ததே₃*ஶி*கர், மணவாளமாமுனிகள் முதலான ஸகலபூர்வாசார்யர்களுடைய ஏககண்ட₂மான அபி₄ப்ராயம் என்று ஒருமிடறாகச் சொன்னார்கள். ஏற்கனவே ஸம்ப்ரதா₃யபே₄த₃த்தால் நலிவுற்றிருக்கும் வைஷ்ணவம் மேலும் நலிவடையுமாகையாலே தங்கள் கருத்துக்களை எழுதிக்கொடுக்க இயலாது, தங்கள் பெயரையும் வெளிப்படுத்தவேண்டாம் என்று கூறிவிட்டார்கள்.

ஸ்ரீபா₄ஷ்யகாரர் *'இயத₃ாமநநாத்'* [ப்₃ரஹ்மஸூத்ரம் 3-3-24] என்னும் ஸூத்ர ஸ்ரீபா₄ஷ்யத்தில் *'ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ:'* [சா₂ந் 3-14-4] [பரம்பொருள் எல்லா க₃ந்த₄ங்களையும் உடையது; எல்லா ரஸங்களையும் உடையது] என்னும் வேத₃வாக்கியத்தை ப்ரமாணமாகக்காட்டி, ப்₃ரஹ்மத்திற்கு க₃ந்த₄த்தையும் ரஸத்தையும் கு₃ணங்களாகக் குறித்திருப்பதுகொண்டு இந்த வாத₃ம் எழுந்துள்ளது. இவ்விடத்தில் ஸ்ரீபா₄ஷ்யகாரர் க₃ந்த₄ம், ரஸம் ஆகியவை ப்₃ரஹ்மத்தின் ஸ்வரூபகு₃ணங்களா அல்லது விக்₃ரஹகு₃ணங்களா என்பதைத் தெளிவுபடுத்தாமையாலேயே இந்த வாத₃ம் எழ இடமேற்பட்டது. இதுபற்றி ஸ்ரீபா₄ஷ்யகாரருடைய மற்ற க்₃ரந்த₂ங்களை ஸேவித்தால், ஸ்ரீபா₄ஷ்யகாரரின் திருவுள்ளம் தெளிவாக விளங்குகிறது. கீ₃தா பா₄ஷ்யத்தின் தொடக்கத்தில் *"ஸ்வாபா₄விகாநவதி₄காதிஶய ஜ்ஞாந ப₃லைஶ்வர்ய வீர்ய ஶக்தி*

*தேஜ: ப்ரப்₄ருத்யஸங்க்₂யேய கல்யாணகு₃ணக₃ண மஹோத₃தி₄:*'' என்று தி₃வ்யாத்மகு₃ணங்களை அருளிச்செய்யும்போது ஜ்ஞானம், ப₃லம் முதலானவற்றையே தி₃வ்யாத்மகு₃ணங்களாகக் குறித்தாரேயொழிய ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃களைக் குறிக்கவில்லை. அடுத்தபடி ''*ஸ்வாபி₄மதாநுரூபைகரூபாசிந்த்ய தி₃வ்யாத்₃பு₄த நித்ய நிரவத்₃ய நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்த₃ர்ய ஸௌக₃ந்த்₄ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்₃யநந்த கு₃ணநிதி₄ தி₃வ்ய ரூப:*' என்று தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹகு₃ணங்களை அருளிச்செய்யும்போது 'ஔஜ்ஜ்வல்ய' என்று ஒளியையும், '*ஸௌக₃ந்த்₄ய*' என்று க₃ந்த₄த்தையும் ரூபகு₃ணமாக அருளிச்செய்திருக்கிறார். *ஶரணாக₃தி* க₃த்₃யத்திலும் ''*ஸ்வாபி₄மதாநுரூபைகரூபாசிந்த்ய தி₃வ்யாத்₃பு₄த நித்ய நிரவத்₃ய நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்த₃ர்ய ஸௌக₃ந்த்₄ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்₃யநந்த கு₃ணநிதி₄ தி₃வ்யரூப!*'' என்று தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹகு₃ணங்களை அருளிச்செய்யும்போது இவற்றை ரூபகு₃ணமாக அருளிச்செய்திருக்கிறார். அடுத்தபடி ''*ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶய ஜ்ஞாந ப₃லைஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜஸ் ஸௌஶீல்ய வாத்ஸல்ய மார்த₃வார்ஜவ ஸௌஹார்த₃ ஸாம்ய காருண்ய மாது₄ர்ய கா₃ம்பீ₄ர்யௌதா₃ர்ய சாதுர்ய ஸ்தை₂ர்ய தை₄ர்ய ஶௌர்ய பராக்ரம ஸத்யகாம ஸத்யஸங்கல்ப க்ருதித்வ க்ருதஜ்ஞதாத்₃யஸங்க்₂யேய கல்யாணகு₃ணக₃ணௌக₄மஹார்ணவ!*'' என்று தி₃வ்யாத்மகு₃ணங்களை அருளிச்செய்யும்போது ஜ்ஞானம், ப₃லம், ஸௌஶீல்யம் முதலானவற்றையே தி₃வ்யாத்மகு₃ணங்களாகக் குறித்தாரேயொழிய ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃களைக் குறிக்கவில்லை. ஸ்ரீரங்க₃க₃த்₃யத்திலும் ''*ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶய ஜ்ஞாந ப₃லைஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜஸ் ஸௌஶீல்ய வாத்ஸல்ய மார்த₃வார்ஜவ ஸௌஹார்த₃ ஸாம்ய காருண்ய மாது₄ர்ய கா₃ம்பீ₄ர்யௌதா₃ர்ய சாதுர்ய ஸ்தை₂ர்ய தை₄ர்ய ஶௌர்ய பராக்ரம ஸத்யகாம ஸத்யஸங்கல்ப க்ருதித்வ க்ருதஜ்ஞதாத்₃யஸங்க்₂யேய கல்யாணகு₃ணக₃ணௌக₄மஹார்ணவம்*'' என்று தி₃வ்யாத்மகு₃ணங்களைச்சொல்லும்போது ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃களை ஸ்பர்ஶிக்கவில்லை. ஸ்ரீவைகுண்ட₂க₃த்₃யத்திலும் ''*ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶய ஜ்ஞாந ப₃லைஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜ: ப்ரப்₄ருத்யஸங்க்₂யேய கல்யாணகு₃ணக₃ணௌக₄மஹார்ணவம்*'' என்று ஜ்ஞானப₃லைஶ்வர்யாதி₃ கு₃ணங்களின் கோவையில் ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃

களைச் சேர்த்து அருளிச்செய்யவில்லை. இப்படி ஸ்ரீபாஷ்ய காரரின் க்ரந்தங்களில் திவ்யாத்மஸ்வரூபகுணங்களை அடுக்கு மிடங்களிலெல்லாம் *ஶப்தஸ்பர்ஶாதி*களைச் சொல்லாமலிருப் பதையும், திவ்யமங்கள விக்ரஹகுணங்களை அடுக்குமிடத்தி லேயே திவ்யாலாபமாகிற *ஶப்த*த்தையும், அதி*ஶீ*தல ஸ்பர்*ஶ*த்தையும், அதிமனோஹரரூபத்தையும், ஸௌகந்த்யத்தை யும் அருளிச்செய்திருப்பதையும் காணலாம். இதனாலேயே '*இயதாமனநாத்*' என்னும் ஸூத்ரத்தின் *ஶ்*ருதப்ரகா*ஶி*கையில் '*ஸர்வகந்த: என்னும் ஶ்ருதி திவ்யமங்களவிக்ரஹகுணத்தைக் கூறுவது*' என்று ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான ஸுத*ர்ஶ*ன பட்டர் அருளிச்செய்திருக்கிறார். இவர் ஒருவர் மாத்திரமன்று; தே*ஶி*கன் முதலான ஸகலபூர்வாசார்யர்களும் திவ்யாத்ம ஸ்வரூபம் *ஶப்த*ஸ்பர்*ஶா*திகளற்றது என்றும், திவ்யமங்கள விக்ரஹமே அப்ராக்ருதமான *ஶப்த*ஸ்பர்*ஶா*திகளை உடையது என்றும், ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் ப்ராக்ருத*ஶப்த*ஸ்பர்*ஶா*திகளை உடையவை என்றும் பலவிடங்களில் முழங்கியிருக்கிறார்கள். உதாரணமாக ஸ்ரீதே*ஶி*கன் தத்வமுக்தாகலாபத்தில் '*கஸ்தூரீ*' என்று தொடங்கும் 879-வது *ஶ்*லோகத்தில் "*ஶப்தாதயோऽமீ த்ரிகுணததிதரத்ரவ்யநிஷ்டா குணா: ஸ்யு:*" [இந்த *ஶப்*தம் முதலான குணங்கள் ஸத்வரஜஸ் தமோ குணங்களாகிற முக்குணங்களையுடைய ப்ரக்ருதி ப்ராக்ருதங்களிலும், அதைக் காட்டிலும் சிறப்புற்றதான *ஶு*த்தஸத்வத்ரவ்யத்திலுமே இருப்பவை] என்று அருளிச்செய்து, "*ததிதரத்ரவ்யம்— த்ரிகுணத்ரவ்யாதிகம் நித்யவிபூதித்ரவ்யம்*" [ததிதரத்ரவ்ய மாவது — த்ரிகுணத்ரவ்யமாகிற ப்ரக்ருதி ப்ராக்ருதங்களைக் காட்டிலும் மேலானதான நித்யவிபூதித்ரவ்யம்] என்று தாமே ஸர்வார்த்தஸித்தியில் வ்யாக்யானம் செய்தருளினார். இதி லிருந்து *ஶப்*தாதிகுணங்கள் ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்கும், நித்யவிபூதித்ரவ்யத்துக்குமே உள்ளவை என்பதும், ஜீவன், ஈ*ஶ்*வரன், தர்மபூதஜ்ஞானம், காலம் என்னும் நாலு த்ரவ்யங்க ளுக்கும் *ஶப்*தாதிகுணங்கள் இல்லை என்பதுமே தே*ஶி*கன் திருவுள்ளம் என்று தெளிவாக விளங்குகிறது. தேசிகன் முதலான இப்பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்கு ப்ரதிவாதம் செய்பவர் மதிப்பளிக்க இசையாமையாலே, ஸ்ரீஸூக்தி ப்ரத*ர்ஶ*னத்தை இத்துடன் நிறுத்திக்கொள்கிறோம்.

இந்தப் பூர்வாசார்யர்களனைவர்க்கும் மூலப்ரமாணமான ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் எம்பெருமானுடைய திருமேனியே நீலமணி போலவும், கார்முகில்போலவும் திருநிறத்தையுடையது என்றும், அதிஶீதல ஸ்பர்ஶத்தையுடையது என்றும் எல்லையற்ற க₃ந்த₄த்தையுடையது என்றும் முழங்குகின்றனவேயொழிய தி₃வ்யாத்மஸ்வரூபம் இன்ன நிறத்தையுடையது, இன்ன ஸ்பர்ஶத்தையுடையது, இன்ன க₃ந்த₄த்தையுடையது என்று ஓரிடத்தில் கூட குறிப்பிடவில்லை. ஜீவாத்மஸ்வரூபவிஷயத்திலும் இப்படியே காண்கிறோம். ஆகையால், "தி₃வ்யாத்மஸ்வரூபத்துக்கு தி₃வ்யமங்கள விக்₃ரஹத்துக்குப்போலே ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃கள் கு₃ணமாயுள்ளன; ஆசார்யன் ஶிஷ்யனுக்கு வேத₃த்தைக் கற்பிக்கும்போது, ஆசார்யன் உச்சரிக்கும் வேத₃ஶப்₃த₃ம் ஶிஷ்யனுடைய ஆத்மஸ்வரூபத்தில், இசைத்தட்டில் பதிவது போலே பதிகிறது." முதலான வாத₃ங்கள் எடுத்துக் கழிக்கவும் தகுதியற்றவை என விளங்குகிறது.

இனி, "ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃கள் இருந்தால்தானே ஜீவாத்ம பரமாத்மஸ்வரூபங்களை அநுப₄விக்க முடியும்" என்னும் வாத₃த்தை ஆராய்வோம். நாம் ஒவ்வொருவரும் அவரவரது ஆத்மஸ்வரூபத்தை இவ்வுலகிலேயே 'அஹம் அஹம்' (நான் நான்) என்று நாமே உணர்ந்து அநுப₄விக்கிறோமேயொழிய ஶப்₃த₃ஸ்பர்ஶங்களால் எவரும் அநுப₄விப்பதில்லை. ஶ்ருதி ஸ்ம்ருதிகளும் 'ஜ்ஞாநாநந்த₃முடையது' என்று ஜீவபரஸ்வரூபங்களுக்கு லக்ஷணம் கூறுகின்றனவேயொழிய ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃களுடையது என லக்ஷணம் கூறுவதில்லை. ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃கள் இருந்தால்தான் ஒன்றை அநுப₄விக்கமுடியும் என்று கூறப் புகுந்தால், அனைவரும் அநுப₄விக்கும் காலத்துக்கும் ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃கள் உண்டென்று கூறவேண்டிவரும். ஜீவபரர்களின் த₄ர்மபூ₄தஜ்ஞானத்துக்கும் ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃கள் உண்டென்று கூறவேண்டிவரும். எம்பெருமானுடைய ஸ்வரூபநிரூபககு₃ணங்களான ஸத்யத்வம், ஜ்ஞாநத்வம், அநந்தத்வம், ஆநந்த₃த்வம், அமலத்வம் முதலானவற்றிற்கும், நிரூபிதஸ்வரூப விஶேஷணங்களான ஸௌஶீல்யம் முதலானவற்றிற்கும் ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃கள் உண்டென்று கூறவேண்டிவரும். "ப்₃ரஹ்மஸ்வரூபமும், ஜீவ

ஸ்வரூபமும், த₄ர்மபூ₄தஜ்ஞானமும் ஸ்வயம்ப்ரகாஶம் [(ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம் போன்ற எதையும் எதிர்பாராமல்) தானே பிரகாஶிப்பது] என்னும் நம்முடைய ஸம்ப்ரதா₃யத்தின் ப்ரதா₄ன ப்ரதிதந்த்ரத்தையே (முக்கியமான கொள்கையையே) கைவிட வேண்டிவரும். ஆகையால் ''ஜீவாத்மபரமாத்ம ஸ்வரூபங்கள் ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃களையுடையவை''என்று நினைப்பதற்கு இடமே யில்லை என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

இனி வேத₃நித்யத்வம் பற்றிய பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தை ஆராய்வோம். முற்கூறியபடி வேத₃ஶப்₃த₃ங்கள் என்றுமே பரமாத்ம ஸ்வரூபத்தில் சேர்ந்துள்ளன என்று சொல்லுவதற்கு இடமேயில்லை; மற்ற ஶப்₃த₃ங்கள்போலே வேத₃ஶப்₃த₃ங்களும் உச்சரித்தவுடனே அழிந்துவிடுகின்றன என்பதை ப்ரத்யக்ஷமாகக் காண்கிறோம். ஆனால், வேத₃ம் நித்யம் என்றும், அபௌருஷேயம் என்றும் ஶாஸ்த்ரங்கள் முழங்குகின்றன. இதன் கருத்து என்ன என்பதை நமது பூர்வாசார்யர்கள் ஆராய்ந்து பின்வருமாறு நிஷ்கர்ஷித்தார்கள். அதாவது—வேத₃மந்த்ரங்களில் இன்ன பத₃த்திற்குப் பிறகு தான் இன்ன பத₃ம் வரவேண்டும் முதலிய நியமம் எல்லாக் கல்பங்களிலும் ஒருபடிப்பட்டதாயுள்ளது. உதாரணமாக 'இஷே த்வா என்று தொடங்கும் யஜுர்வேத₃மந்த்ரத்தில் எந்தக் கல்பத்திலும் 'இஷே' என்னும் பத₃த்திற்குப் பிறகுதான் 'த்வா' என்னும் பத₃ம் வரும். 'த்வா இஷே' என்று ஒருபோதும் மாறி வரவே வராது. வேத₃மந்த்ரங்கள் அனைத்திலும் உள்ள ஒவ்வொரு அக்ஷரபத₃வாக்யங்களுக்கும் இப்படி பௌர்வாபர்யநியமம் (முன்னும் பின்னுமாயிருக்கும் நியமம்) உண்டு. இதுவே 'ஆநுபூர்வீநித்யத்வம்' (வேதா₃க்ஷரங்களின் அமைப்பில் நித்யத்வம்) என்று வழங்கப்படுகிறது. இப்படிப்பட்ட வேதா₃க்ஷரங்களின் அமைப்பு (ஆநுபூர்வீ) ஸர்வேஶ்வரனால் கூட உண்டாக்கப்பட்டதில்லை. இதுவே வேத₃த்திற்கு அபௌருஷேயத்வம் என்று கூறப்படுகிறது. இவ்வமைப்பு இன்ன காலத்தில் ஏற்பட்டது என்றோ, இன்ன காலத்தில் அழியும் என்றோ நினைக்கவும் இடமில்லை. இதுவே வேத₃த்திற்கு நித்யத்வம் எனப்படுகிறது. இந்த வேத₃த்தின் அமைப்பை எப்போதும் நினைவில் கொண்டிருக்கும் எம்பெருமான் ப்₃ரஹ்மாவை ஸ்ருஷ்டித்

தவுடன் தன் நினைவிலுள்ள ஆநுபூர்வியின்படியே வேதத்தைப் பிரமனுக்கு உபதேசிக்கிறான். பிரமன் தொடங்கி இன்றளவும் ஆசார்ய சிஷ்ய க்ரமத்தில், அமைப்பு மாறாமல் வேதம் ஓதி ஓதுவிக்கப்பட்டு வருகிறது. இதையே திருமங்கையாழ்வாரும் "நான் மறை ஓதி ஓதுவித்து ஆதியாய் வரும் அந்தணாளர்" [பெரியதிரு 3-5-6] என்று அருளிச் செய்தார்.

இவ்வளவையும் திருவுள்ளம் பற்றியே ஸ்ரீபாஷ்யகாரர் ப்ரஹ்மஸூத்ரம் 1-3-29 பாஷ்யத்தில் "*ஏததேவ ச வேதஸ்யாபௌருஷேயத்வம், நித்யத்வம் ச—யத் பூர்வபூர்வோச்சாரணக்ரமஜநித ஸம்ஸ்காரேண தமேவ க்ரமவிசேஷம் ஸ்ம்ருத்வா தேநைவ க்ரமேண உச்சார்யமாணத்வம்; ததஸ்மாஸு ஸர்வேச்வரேऽபி ஸமாநம்| இயாம்ஸ்து விசேஷ:—ஸம்ஸ்காராநபேக்ஷமேவ ஸ்வயமேவாநுஸந்தத்தே புருஷோத்தம:||*" [வேதத்துக்கு அபௌருஷேயத்வமும் நித்யத்வமும் இவ்வளவேயாகும். அதாவது—ஆசார்யன் உச்சரிக்கும் க்ரமத்தை (அக்ஷரங்களின் வரிசையை)க் கேட்டதால் உண்டாகும் ஸம்ஸ்காரத்தினால் அந்த க்ரமத்தை அப்படியே நினைவுகூர்ந்து அதே க்ரமத்தில் (சிஷ்யனால்) உச்சரிக்கப்படுவதாயிருக்கையேயாகும். இது நமக்கும் ஸர்வேச்வரனுக்கும் பொதுவாகும். ஸர்வேச்வரனுக்கு ஒரு சிறப்பு என்னவென்றால் ஸம்ஸ்காரத்தை எதிர்பாராமலே தானே வேதாக்ஷரங்களின் அமைப்பைப் புருஷோத்தமன் அநுஸந்திக்கிறான் என்பதேயாகும்.] என்று அருளிச்செய்தார். ஸ்ரீதேசிகனும் தத்வமுக்தாகலாபத்தில் "*சப்தாநித்யத்வதோऽபி*" என்று தொடங்கும் 386-வது ச்லோகத்தில் "*தஸ்மாத் நித்யைகரூபக்ரமநியமவசாத் நித்யபாவ: ச்ருதீநாம்*" [ஆகையால் எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் அக்ஷரக்ரமங்களின் நியதியினாலேயே வேதங்களுக்கு நித்யத்வம் சொல்லப்படுகிறது] என்று இவ்விஷயத்தை மிகத் தெளிவாக அருளிச் செய்து, ஸர்வார்த்தஸித்தியிலும் தாமே விரிவாக விளக்கினார். ஆகையால் எம்பெருமானார், தேசிகன் முதலான பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்கு மதிப்பளிப்பவர் எவரும் இவ்விஷயத்தை ஒப்புக்கொண்டே தீரவேண்டும்.

ஸாராஸார விவேகமறிந்தவர்களும், மாத்ஸர்யம் அற்றவர்களும், ப்ரமாணபரதந்த்ரர்களுமான பெரியோர்கள் இக்காலத்திலும் உளர் என்னும் காரணத்தாலேயே நாம் இவ்வளவும் எழுதினோம்.

S. முரளி, அந்தணல்லூர்.

*26. ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் அருள்மொழியில் காமகோடி பீடாதிபதிகள் இருவரையும் 'யதிராஜர்கள்' என்று வர்ணித்திருப்பது பொருந்துமா?*

வைஷ்ணவத்துக்குத் தீங்கிழைப்பதையே பிறவிப்பயனாகக் கொண்டிருப்பவரையும், ஸ்ரீபாஷ்யத்தை விஷபாஷ்யம் என்று வர்ணித்திருப்பவரையும் 'யதிராஜர்' என்று வர்ணித்திருப்பது ஒரு சிறிதும் பொருந்தாது. ஆயினும் "காரியமாகவேண்டுமாகில் எதன் காலை வேண்டுமானாலும் பிடிக்கலாம்" என்கிற நியாயத்தின்படி, பெரியபெருமாள் ராஜகோபுரத்தின் மூன்றுவது நிலை நிறைவடைவதற்காக இந்த வர்ணனம் செய்யப்பட்டது என்று கொள்ளலாம்.

(கொத்தட்டை) பண்டாரி சௌரிராஜய்யங்கார், ஸ்ரீரங்கம்.
(27, 28 கேள்விகள்)

*27. ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா துர்மதி வைகாசி இதழில் "'சீர்மிகுந்த ஸ்ரீரங்கத்தில் ஸம்ப்ரோக்ஷண வைபவம்' என்னும் கட்டுரையில் "அர்ச்சக ஸ்வாமிகளும் அதிவிலக்ஷணமாகத் தம் தாம் திருமேனிகளில் வடகலை த்வாதசோர்த்வ புண்ட்ரங்களை அணிந்து அணியரங்கனுக்கே அணிசெய்யும் வகையில் இருந்தனர்" என்று எழுதப்பட்டுள்ளது. ஸம்ப்ரோக்ஷணத்தின்போது அர்ச்சகர்கள் த்வாதசோர்த்வபுண்ட்ரங்களை அணிந்து வந்தார்கள் என்பது உண்மையா?*

ஸ்ரீரங்கத்தில் அர்ச்சகர்கள் கைங்கர்யம் செய்யும்போது நான்கு புண்ட்ரங்களுக்குமேல் அணியும் வழக்கமில்லை, வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ன அநிருத்தர்களாகிற நான்கு வ்யூஹத்திருநாமங்களையே அணியும் வழக்கமே இவர்களுக்கு உண்டு. மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களைப்போலே கேசவாதிகளான பன்னிரண்டு வ்யூஹாந்தரத் திருநாமங்களைக்

கைங்கர்யத்தின்போது இவர்கள் அணிவதில்லை. இதையறியாத கட்டுரையாளர் உத்ஸாஹமிகுதியாலே நான்கைப் பன்னிரண்டாக்கிவிட்டார் என்று விளங்குகிறது.

*28. ஸ்ரீமதழகியசிங்கர் ஶிஷ்யர்களான கோவை லக்ஷ்மீ மில்ஸ்காரர்கள் வெளியிட்டிருக்கும் ஒரு காலண்டரில் "26—3—81 அன்று ஸ்ரீரங்க விமான ஸம்ப்ரோக்ஷணத்தை ஸ்ரீமதழகியசிங்கர் செய்தார்' என்று பொய்யாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. இதற்குப் பரிஹாரம் என்ன ?*

இவ்விஷயத்தை— 8—7—81 அன்று நடைபெற்ற ஸ்ரீரங்கம் கோயில திருப்பணிக் கமிட்டிக் கடைசிக் கூட்டத்தில அக் கமிட்டியின அங்கத்தினரான நாம் கமிட்டியாருடைய கவனத்திற்குக் கொண்டுவந்தோம். அறநிலைய ஆணையரும், கோயில் நிர்வாக அதிகாரியும் 'தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்கிறோம்' என்று உறுதி கூறினார்கள். அதன்படி தேவஸ்தான நிர்வாகிகள் லக்ஷ்மீ மில்ஸ் அன்பர்களுக்கு 'இது தவறு' என்று எழுதி, தவறுக்கு வருத்தம் தெரிவிக்கும்படியும், கைவசமுள்ள காலண்டர்களில் இவ்வாக்கியத்தை அடிக்கும்படியும் செய்யவேண்டும். ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவிலும் 'இது தவறு' என்று வெளியிட்டால் தான் ஸ்ரீமதழகியசிங்கர்பேரில் அபவாதம் ஏற்படாமலிருக்கும்.

S. திருவேங்கடம், ஸ்ரீரங்கம்.

*29. தலைசிறந்த தமிழ்ப்புலவர் என்று பெயர் பெற்று விளங்கும் கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன்—மே மாதம் 'ஸப்தகிரியில் 'வெள்ளியான் கரியான் மணிநிறவண்ணன்' என்னும் பாசுரத்தில் திருமங்கையாழ்வார் 'திருவேங்கடமுடையானைச் சிவனாகவும் அறிவாளிகள் கூறி வணங்குவார்கள்' என்று கூறியிருப்பதாக எழுதியிருக்கும் அவப்பொருளை மறுத்தெழுத வேண்டுகிறேன்.*

இதை மறுத்து 'மணிநிறவண்ணன் மாதவனே' என்னும் கட்டுரையை எழுதியனுப்பினோம். அது ஜூலை ஸப்தகிரியில் வெளியிடப்பட்டுள்ளது. ஸுதர்சனர் பதில் ஐந்தாவது சதகத்தின் அநுபந்தமாகவும், ஸுதர்சனம் 404 இதழிலும் அக் கட்டுரை இணைக்கப்படுகிறது.

*30. இந்த சதகம் 25 முதல் 28 ஈருக உள்ள கேள்விகளின் தொடர்ச்சி.*

ஆவணி ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ஸ்ரீஅழகியசிங்கரின் அருள் மொழியில் ஸ்ரீமதழகியசிங்கர் தம்மிடம் கேள்வி கேட்பவர்கள் பலருக்கு *"இவைகளை எல்லாம் வைஷ்ணவ ஸுதர்ஶந பத்ரிகைக்கு எழுதிக்கேளுங்கள். உங்களுக்கு தாக்ஷிண்யமில்லாமல் ஸரியான பதில் சொல்லுவார்'* என்று சொல்லியனுப்பிவிட்டதாக அநுக்ரஹித்திருக்கிறார். ஸ்ரீமதழகியசிங்கருடைய ஔதார்ய குணம்போலே இந்த நேர்மைக்குணமும் குன்றிலிட்ட விளக்காக என்றும் பிரகாஶிக்கும். அருள்மொழியில் பலர் கேட்டிருப்பதாகக் கொடுத்திருக்கும் கேள்விகளின் ஸாரத்தை அடுத்த கேள்வியாகக் கொடுத்து யதாமதி பதில் விண்ணப்பிக்கிறேன்.

*31. (i) சமீபத்தில் மீனாட்சிபுரம் முதலான இடங்களில் ஹரிஜனங்கள் இஸ்லாமியர்களாக மதம் மாறியதை முன்னிட்டு நடந்த இந்து ஒற்றுமை மகாநாடு, கூட்டங்கள், பத்திரிகைச் செய்திகளில் சில மடாதிபதிகளும், சில பெரிய ஆசார்யர்களும், சில பெரிய வித்வான்களும் — நம் இந்துக்களுக்குள்ளே ஜாதிமத வித்தியாசங்கள் எதுவும் கிடையாதென்றும், எல்லா ஆத்மாக்களும் சமமானவர்கள் என்றும், ஹரிஜனங்கள் என்று இழிவுபடுத்தக்கூடாது என்றும், எல்லாவிதத்திலும் அவர்களோடு சமமாகப் பழகவேண்டும் என்றும் பேசியிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் முன்னோர்களை மூடர்கள் என்று நினைக்கிறார்களா? அமெரிக்கர்கள், ரஷ்யர்கள் முதலான மற்ற தேசத்தவர்களையும் நம் சகோதரர்களைப் போலத்தானே நினைக்கவேண்டும். பூலோகத்தில் பிறந்த ஸகலவிதமான மனிதர்களும் ஒரே ஜாதியர்கள்தான் என்று இவர்கள் ஏன் சொல்லக்கூடாது? யானை, சிங்கம் முதலான விலங்குகளின் ஆத்மாவும் நம் ஆத்மாவைப் போன்றது என்று இவர்கள் நினைக்கிறார்களா? அல்லது வேறுபட்டது என்று நினைக்கிறார்களா? சாவுதீட்டு, பிரசவத்தீட்டு, மாதவிலக்குத்தீட்டு முதலானவற்றையும் மூடத்தனம் என்று நினைக்கிறார்களா? தீண்டாமையைப்பற்றி ஶாஸ்த்ரங்களில் சொல்லவேயில்லை என்று சொல்லுகிறார்களே அது உண்மையா? அல்லது ஶாஸ்த்ரங்களையே ஒத்துக்கொள்ளவேண்டாம் என்பது அவர்கள் அபிப்ராயமா?*

(ii) *இந்தியாவிலேயே ஸ்ரீராமன் காலம் முதல்கொண்டு துலுக்கர்கள் இருப்பதாகவும், ராமபட்டாபிஷேகத்துக்கு அவர்களை வரவழைத்து தசரதர் ஆலோசனை செய்ததாகவும் ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. அவர்களை மடாதிபதிகள் ஏன் இப்பொழுது விலக்குகிறார்கள்? அவர்களையும் இந்துக்களாகவே தானே நினைக்கவேண்டும்.*

"இந்துமதம்" என்பது ஒரு மதமேயல்ல. பல மதங்கள், கருத்துக்களின் கூட்டமே 'இந்து மதம்' என வழங்கப்படுகிறது. "ஜாதி உண்டு, மதம் உண்டு, வேதத்தில் சொன்னபடி ஒழுகினால்தான் இம்மையிலும் மறுமையிலும் நன்மை உண்டு" என்று கூறுகிறவனும் தன்னை 'இந்து' என்று சொல்லிக் கொள்ளுகிறான். "ஜாதிமதங்கள் எதுவும் கிடையாது; எம்மதமும் சம்மதமே; ஏதோ ஓர் கடவுள் இருக்கிறது; நமக்குப் பல பிறவிகள் உண்டு; அதற்குக் காரணம் கர்மம்; திருமால், சிவன், முருகன், காளியாயி, மாரியாயி, குளுமாயி, மூகாம்பிகை, ராஜராஜேச்வரி, கருமாரியம்மன், கமுகாண்டி, ஐயனார், பூவாடைக்காரி, முத்தாலம்மன், பிடாரி, முத்தால்-ரவுத்தன், வயிரவன், மதுரைவீரன், கறுப்பு, காட்டேரி முதலான பெயர்களில் உள்ள எந்தக் கடவுளையாவது கும்பிட்டுக் கொண்டிருந்தால்போதும்" என்று கூறுகிறவனும் தன்னை இந்து என்று சொல்லிக்கொள்கிறான். கோவிலுக்குப்போகிறவனும் இந்துதான்; "கோவிலுக்கு அறிவிற்குறைந்தவர்களே போகவேண்டும்; அறிவாளிகளுக்கு மக்கள் சேவை செய்வதே மகேசன் சேவை. அவர்கள் தம் உள்ளத்திலேயே வழிபாடு செய்யலாம்" என்று கூறுகிறவனும் இந்துதான். சைவனும் இந்துதான்; வைணவனும் இந்துதான்; 'உலகம் பொய், குணமற்ற ப்ரஹ்மமே நான்' எனும் அத்வைதியும் இந்துதான்; "உலகம் உண்மையே; அதை சரீரமாகக்கொண்ட நாரணனுக்கு நாம் அனைவரும் அடிமை" எனும் விசிஷ்டாத்வைதியும் இந்துதான்; ப்ரஹ்மமும் நாமும் அடியோடு வெவ்வேறு எனும் த்வைதியும் இந்துதான்; சட்டப்படி வைதிகனும், அவைதிகர்களான பௌத்தரும், ஜைனரும், இந்துப் பெற்றோர்களுக்குப் பிறந்த நாஸ்திகனுங்கூட இந்துதான். இந்த நிலை இந்த நூற்றாண்டின் முற்பாதியில் சுதந்திரப் போராட்ட காலத்திலிருந்து

தோன்றிவிட்டது. பெரும்பாலான இந்து மக்களுக்கு வேதம் சாஸ்திரங்களைப்பற்றி எதுவும் தெரியாது; தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அக்கறையுமில்லை. வேதசாஸ்திரங்களைப் படித்தவர்களுக்குள்ளும் அதற்குப் பொருள்கொள்வதில் ஆயிரக்கணக்கான கருத்துவேற்றுமைகள். இந்நிலையில், கடவுட் கொள்கையை ஒட்டி சைவம், வைஷ்ணவம் எனும் இரு பிரிவாகவும், Philosophy எனப்படும் தத்துவக் கொள்கைகளை ஒட்டி அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம் எனும் மூன்று பிரிவாகவும் ளர்ந்திருக்கவேண்டிய வைதிகமதம் ஆயிரக்கணக்கான சாதிசமயப் பிரிவுகளும், கருத்துவேற்றுமைகளும் நிறைந்த குழப்பவாதிகளின் கூட்டமாக வளர்ந்துவிட்டது. இதனால் இவர்களை மதம் மாற்றுவது மிக எளிதாகி விடுகிறது.

ஹரிஜனங்கள் இந்தக் கூட்டத்தின் கீழ்மட்டத்தில் இருப்பவர்கள். பெரும்பாலும் ஏழைகள்; இழிதொழில்கள் செய்பவர்கள். ஆங்காங்கு உயர்ஜாதி இந்துக்களால் துன்புறுத்தப்படுபவர்கள். இவர்களைப் பணத்தாசை காட்டி முஸ்லிம்கள் மதம் மாற்றுகின்றனர். இவ்விழிநிலையிலிருந்து உயர்ந்து பணக்காரர்களாகி விடலாம் என்று ஹரிஜனங்களும் கூட்டம்கூட்டமாக மதம் மாறி வருகின்றனர். இந்நாட்டில் படிப்படியாக முஸ்லிம்களின் எண்ணிக்கையை உயர்த்தி இதை ஓர் இஸ்லாமிய நாடாக்கி விடலாம் என்பது இஸ்லாமியர்களின் கனவு. இதுவே இன்று நடைபெறும் மதமாற்றங்களின் அடிப்படை.

இந்நிலையில் "இந்துமதத்தில் ஜாதி வித்தியாசமே கிடையாது; தீண்டாமையே கிடையாது" என்று பிரசாரம் செய்து ஹரிஜனங்களுடைய சேரிக்குச் சென்று, சமபந்தி போஜனம் முதலானவற்றைச் செய்தால்தான் இம்மதமாற்றங்களைத் தடுத்து நிறுத்தமுடியும் என்னும் எண்ணத்தாலேயே மடாதிபதிகள் முதலானோரும் 'இந்து மதத்தில் சாதிமத வேற்றுமையே கிடையாது; தீண்டாமையே கிடையாது' என்று பிரசாரம் செய்துவருகிறார்கள். தனியாகச் சென்று அவர்களைக் கேட்டால், "ஆத்மாக்களுக்குள் வேற்றுமையில்லை என்னும் கருத்திலே அப்படிச் சொன்னோம்; பரமபக்தர்களாகிவிட்டால் ஹரிஜனங்களும் நந்தனாரைப்போலவோ, திருப்பாணாழ்வாரைப்போலவோ உயர்ந்து விடலாம் என்னும் கருத்திலே அப்படிச் சொன்னோம்"

என்றுதான் கூறுவார்கள், இதிலும் சைவம், வைஷ்ணவம் தென்கலை, வடகலை முதலான பிரிவினர்களின் பதில்களும் நடைமுறைகளும் வெவ்வேறாகத்தான் இருக்கும். ஆக, அரிஜன மதமாற்றத்தைத் தடுத்து நிறுத்துவதற்காகச் செய்யப்படும் பிரசாரமாகக் கொண்டு இதற்கு முக்கியத்துவம் அளிக்காமலிருப்பதே வைதிகர்கள் செய்யக்கூடியது.

ஆனால், பணத்தாசை முதலான லௌகிக காரணங்களால் நடைபெறும் இந்த மதமாற்றம் இதனாலெல்லாம் நிற்கப்போவதில்லை. அரசு தலையிட்டு ஹரிஜனங்களின் நிலையை உயர்த்தி, வெளிநாட்டுப் பணம் விநியோகிக்கப்படுவதைக் கண்காணித்து. கூட்டமாக மதம் மாறுவதைத் தடுக்கச் சட்டம் இயற்றினால் தான் நம் நாட்டில் இந்துக்களின் மதமாற்றத்தின் வேகம் தடுக்கப்படும். சைவம், வைஷ்ணவம், அத்வைதம் முதலான பிரிவுகளைச் சேர்ந்த மடாதிபதிகளும், மதத்தலைவர்களும் சகிப்புத் தன்மையுடன் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்து, அந்தந்தப் பிரிவினரிடையே மத ப்ரசாரத்தை மிகமிகச் சிறப்பாகச் செய்தால் மதமாற்றங்கள் படிப்படியாக மறையும். இதைச் செய்வதைவிட்டு ''இந்துக்களிடையே சாதிமத வேற்றுமை கிடையாது; தீண்டாமை கிடையாது'' என்னும் அரை உண்மையை எவர் கூச்சலிட்டாலும், எத்தனை சமபந்தி போஜனங்கள் நடந்தாலும் மதமாற்றங்கள் நிற்கப்போவதில்லை. அரசியல்வாதிகளும், மதத்தலைவர்களும் நேர்மையோடும். சுயநலமில்லாமலும் தீவிரமாகச் செயல் புரிந்தால்தான் நம் நாடு அடுத்த நூற்றாண்டில் இஸ்லாமிய நாடாக மாறாமலிருக்கும்.

(ii) ஸ்ரீராமன் காலம் முதற்கொண்டு துலுக்கர்கள் இருப்பதாகக் கூறுவது சரியல்ல. முகமதுநபி பிறந்து இஸ்லாமிய மதத்தை ஸ்தாபித்தது கி.பி. 6-வது நூற்றாண்டிற்குப் பிறகேயாகும். கிறிஸ்து பிறந்து கிறிஸ்தவ மதத்தை ஸ்தாபித்த பின்பு இப்போது சுமார் 1900 வருஷங்களே ஆகின்றன. ஆகையால் ராமன் காலத்தில் இஸ்லாமியர்களுமில்லை; கிறிஸ்தவர்களுமில்லை. கிரீக் (Greek), லாடின் (Latin) முதலான பாஷைகளைப் பேசிவந்த யவனர்கள் இருந்திருக்கலாம். உலகம் முழுவதையும் ஸ்ரீராமரே ஆண்டபடியால் ராமநாமத்தின் அடையாளங்கள் உலகெங்கும் பரவியிருக்கின்றன என்றும்,

ரோமாபுரி என்பது ராமனின் பெயரால் ஏற்பட்ட நகரமே என்றும், ராம்ஸே, ரஹீம் முதலான வெளிநாட்டுப் பெயர்கள் ராமநாமத்தைக் குறிப்பவையே என்றும், ராமத்யானமே ரம்ஜான் நோன்பு ஆயிற்று என்றும் பற்பல ஆதாரங்களைக் காட்டி P. N. ஓக் M. A., LLB என்பவர் எழுதியுள்ள விரிவான கட்டுரை 15—8—81 "ஹிந்து மறுமலர்ச்சி' பத்திரிகையில் 'உலகத்தையே ஆண்ட ஸ்ரீராமர்' என்ற தலைப்பில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. "M. ராமசாமி, 162-B, முதல் அக்ரஹாரம், சேலம்" என்னும் ஆசிரியர் விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். இதுபோலவே ஈசனை கிருஷ்ணனே 'ஜீஸஸ் க்ரைஸ்ட்' என வழங்கப்பட்டான் என்று கிருஷ்ண சரித்திரத்திற்கும், கிறிஸ்து சரித்திரத்திற்கும் பல ஒற்றுமைகளைக் காட்டி ஷீரோ முதலான பல ஆராய்ச்சியாளர்களால் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆனால் இதையெல்லாம் இஸ்லாமியர்களும் கிறிஸ்தவர்களும் ஒருபோதும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆகையால் அவர்களை இந்துக்களாக எவரும் நினைக்கவே இயலாது; இந்த நாடு இஸ்லாமிய நாடாக மாறிவிட்டால் அதற்குப்பின் வைதிகர்கள் எவரும் இங்கு வாழ்வதே அரிதாகிவிடும். இதற்கு பாகிஸ்தான் முதலான நாடுகளே சான்று.

*32. 28-வது கேள்வியின் தொடர்ச்சி.*

ஸ்ரீரங்கம் கோவில் நிர்வாக அதிகாரி திரு வி.கே.வேலுசாமி அவர்களிடமிருந்து இதுபற்றி 4—8—81 தேதியிட்ட கடிதம் ஒன்று நமக்கு வந்தது. அதில் கோவை-37, லக்ஷ்மீ மில்ஸ் கம்பெனியின் மானேஜிங் டைரக்டரான திரு K. சுந்தரம் அவர்கள் இதுபற்றி நிர்வாக அதிகாரிக்கு எழுதியிருந்த ஆங்கிலக் கடிதத்தின் நகல் நமது பார்வைக்காக இணைக்கப்பட்டிருந்தது. அக்கடிதத்தில்—"His Holiness Performed Samprokshanam for 'Pranavakara Vimanam' on 26th March 1981"என்று லக்ஷ்மீ மில்ஸ் ஸ்ரீரங்கநாதர் காலண்டரின் பின்புறம் அச்சிட்டிருந்த வாக்கியத்திற்கு "in the presence of His Holiness" (ஸ்ரீமதழகியசிங்கர் முன்னிலையில் விமான ஸம்ப்ரோக்ஷணம் நடந்தது) என்றுதான் பொருள் என எழுதப்பட்டிருந்தது; ஆங்கிலமறிந்தவர்கள் எவரும் 'performed'என்னும் வார்த்தைக்கு 'செய்

தார்'என்று பொருள் கொள்ளுவார்களேயொழிய 'முன்னிலையில் நடந்தது' என்று பொருள் கொள்ளமாட்டார்கள். பொய்யாக எழுதி அச்சிட்டதை மறைக்கப் பார்க்கும் இச்செயல்—ஒரு பொருளைத் திருடியவன் கையும் களவுமாகப் பிடிபடும்போது 'பத்திரமாக வைத்திருந்து உரியவரிடம் கொடுப்பதற்காக இதை எடுத்தேன்' என்று சொல்லுவது போல் இருக்கிறது. "திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி. ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜ ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமி முதலான ஆயிரக்கணக்கானவர்கள் முன்னிலையில் நடந்த விமான ஸம்ப்ரோக்ஷணத்தை ஸ்ரீமதழகிபசிங்கர் முன்னிலையில் நடந்தது என்று அவர் ஒருவரை மாத்திரம் குறிப்பிட்டு எழுதுவதும் தவறுதான்" என்று திருப்பணிக் கமிட்டியின் கடைசிக் கூட்டத்தில் கோயில்தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபையின் கார்யதரிசி ஸ்ரீ உ. வே. திருமலை ஐயங்கார் ஸ்வாமி இங்கு கூறியதும் நினைவு கூரத்தக்கது. விமான ஸம்ப்ரோக்ஷணத்தில் கலந்துகொண்ட ஒவ்வொருவரைப் பற்றியும் "so and so performed the Vimana Samprokshanam" என்று விளம்பரம் வெளியிட்டு,அதற்கு'முன்னிலையில்' என்றுதான் பொருள் என்று அடம்பிடித்தால் எவ்வளவு விசித்திரமாயிருக்கும் என்பதை ஆலோசித்தால் லக்ஷ்மீ மில்ஸ் திரு K. சுந்தரம் அவர்களின் வாதம் எத்தனை அபத்தமானது என்று விளங்கும்.

S. கோவிந்தராஜன், சென்னை-94.

*33. சென்னை அடையாறு அஷ்டலக்ஷ்மி கோவிலில் சமீபத்தில் விநாயகர் ஸந்நிதி ஒன்று பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். ஸம்ப்ரோக்ஷணம் ஜூலை கடைசியில் சென்னை TV-யிலும் காட்டப்பட்டது. விநாயகருக்கு வடகலைத் திருமண் சாத்தி வடகலை அர்ச்சகரே ஆராதனம் செய்கிறார். "இந்த விநாயகரை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸேவிக்கலாம். இவர் வலம்புரி விநாயகர்" என்று அர்ச்சகர் கூறுகிறார்; இது சரியா?*

வைஷ்ணவ ஆகமங்களில், விநாயகர் ஸந்நிதியைத் தனியாக விஷ்ணு கோவில்களில் ப்ரதிஷ்டை செய்யலாம் என்று எங்கும் கூறவில்லை. சில விஷ்ணு கோவில்களில் யானை முகத்தோடு பரிவார தேவதையாகக் காணப்படுபவர் ஸேனை முதலியார் என்னும் விஷ்வக்ஸேனருக்கு தளபதியான கஜானனர் என்னும் நித்யஸூரியே ஆவர். இவரை விநாயகர் என்று வழங்குவதில்லை. இவருக்குத் தனி அர்ச்சனையும் கிடையாது. சிவன் கோவில்களிலும், பிள்ளையார் கோவில்களிலுமே வலம்புரி விநாயகர், இடம்புரிவிநாயகர் என்று இருவிதமாக உருவங்கள் அமைத்துப் பூஜை செய்கிறார்கள். காமகோடி பீடாதிபதியின் ஆலோசனையின் பேரில் லக்ஷ்மீ மில்ஸ்காரர்கள் முதலான பலரிட

யிருந்து லக்ஷக்கணக்கான ரூபாய்கள் நன்கொடை வாங்கி, விமானத்தில் ஆதிசங்கரர் முதலான பல உருவங்களமைத்து, மேலே ஸ்ரீமதழகியசிங்கரையும், அவருக்குத் தெரியாமல் கீழே சமயபுரம் ஸ்வாமிகள் என்ற சைவரையும் கொண்டு முக்கூர் ஸ்ரீநிவாஸவரதாசார்யரால் ப்ரதிஷ்டை செய்விக்கப்பெற்ற அஷ்டலக்ஷ்மீ கோவில் எந்த ஆகமத்தின் கீழும் வராத ஒரு கலப்படக் கோவிலேயாகும். பரம ஏழையாயிருந்த முக்கூர் ஸ்ரீநிவாஸவரதர் இக்கோவிலினால் பெரும் பணக்காரரானார். இதற்கு ஆலோசனை சொன்ன காமகோடி பீடாதிபதியின் சித்திரத்தை இக்கோவிலில் வைத்து வணங்கிவந்தார். 'தார்மிக ஹிந்து' ஆசிரியர் ஜகந்நாதாசார்ய ஸ்வாமி இது பற்றிப் பெரிய அபவாதத்தைக் கிளப்பிவிட்டவுடன், பீடாதிபதியின் நியமனத்தின்பேரில் அந்தச் சித்திரத்தைக் கோவிலைவிட்டு எடுத்தார். இக்கோவில் தமது சொந்தக்கோவிலே என்று அறநிலைய இலாகாவுடன் பல வருஷங்கள் வழக்காடி வந்தார். 'லக்ஷாதிபதி ஆனது போராது, மேலும் பணம் சம்பாதிக்கவேண்டும்' என்னும் எண்ணத்தாலே, சைவர்கள் முதலான எல்லாப் பிரிவினரையும் இக்கோவிலுக்கு இழுப்பதற்காக இப்போது இதில் விநாயகர் கோவிலும், குருவாயூரப்பன் கோவிலும், ஆஞ்சநேயர் கோவிலும் தனியாகக் கட்டப்பட்டுள்ளன. ஆனால் விநாயகர் வந்த முஹூர்த்தம் இவர் தொடுத்த வழக்கு இவருக்கு பாதகமாகி, 'இக்கோவில் இவருக்கு ஏகதேசபாத்யமல்ல, அறநிலைய இலாகாவின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதே' என்று தீர்ப்பாகிவிட்டது. ஒருவருடைய பணத்தாசை காரணமாக, ஆகமவிதிகளுக்குப் புறம்பாகக் கட்டி, ப்ரதிஷ்டை செய்விக்கப்பெற்று, வழிபாடுகள் நடத்திவரும் இக்கோவிலில் உண்மையான வைஷ்ணவர்கள் எவரும் வழிபடவே கூடாது. வலம்புரியோ, இடம்புரியோ விநாயகர் என்னும் பெயருள்ள ஒரு தெய்வத்தை உண்மை வைஷ்ணவர்கள் என்றும் வணங்க மாட்டார்கள்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*34. அப்பட்டமான பொய் என்று தெரிந்தும், 'மதங்களெல்லாம் ஒன்றுதான்' என்று காமகோடி சங்கராசார்யர் இருவரும் இடைவிடாமல் பத்திரிகைகளில் பிரசாரம் செய்து வருகிறார்கள். 23—8—81 கல்கியில் பெரியபீடாதிபதி 'மதமாற்றமும் மேம்பாலமும்' என்னும் தலைப்பில் "நதியின் மேம்பாலத்தில் எல்லா வளைவுகளும் ஒரே அளவாகக் கட்டப்பட்டதாயிருந்தபோதிலும், ஒவ்வொரு வளைவுக்கும் கிட்டத்தில் இருப்பவனுக்கு அந்த வளைவே பெரிதாகவும், மற்றவை சிறிதாகவும் தெரிவதுபோல் அந்தந்த மதஸ்தர்களும் தங்கள் மதமே பெரிது என்று கூறு*

கிறார்கள் ' என்று எழுதுகிறார். 21—8—81 ஹிந்து பத்திரிகையில்—காஞ்சி காமகோடி சிறிய பீடாதிபதி ஹரிஜனங்களுக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் பூஜாவிதிகளைச் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்யப்போவதாகச் செய்தி வந்துள்ளது. எல்லாக் கோவில்களுக்கும் எல்லா ஜாதியினரையும் அர்ச்சகர்களாக்கி, ஜாதி வித்தியாசத்தை ஒழிப்பதற்கும் காமகோடி பீடாதிபதி பாடுபடப்போகிறாரா?

ஜாதி வேற்றுமையில்லாமல் அர்ச்சகர் நியமனம் பற்றிச் சிறிய பீடாதிபதியின் கருத்து என்ன என்பது ஹிந்து பத்திரிகையிலிருந்து விளங்கவில்லை. ஜுலை 81 அமுதசுரபியில் சிறிய பீடாதிபதி 'ஆனந்தசாகரம்' என்னும் தலைப்பில் '' கடலில் சிறிய படகுகள் குறைவான தூரமுள்ள இடங்களுக்கும். கப்பல்கள் தொலைவில் உள்ள இடங்களுக்கும் அழைத்துச் செல்வதுபோல் இந்து சமயத்தில் உள்ள சிறு கர்மாக்கள் கைலாச-வைகுண்டத்திற்கும், பெரும் சாதனைகள் மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்கும் நம்மை அழைத்துச் செல்கின்றன'' என்று எழுதியிருக்கிறார். இப்படி சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் மோக்ஷம் கிடையாது என்றும், அத்வைதிகளான தங்களுக்கே மோக்ஷம் உண்டு என்றும் வலியுறுத்துவதன் மூலம் 'எல்லா மதங்களும் ஒன்று' என்று தாமும், பெரிய பீடாதிபதியும் பிரசாரம் செய்வது பொய்யானது என்று காட்டிக் கொண்டிருக்கிறார். ஸுதர்சனம் 405,406 இதழ்த் தலையங்கங்களிலும் 'காமகோடி பீடாதிபதி மதங்கள் ஒன்று என்று பேசுவது ஜனங்களை ஏமாற்றுவதற்கே' என்று நிலைநாட்டப்பட்டுள்ளது. இவை ஸுதர்சனர் பதில் இந்த சதகத்திற்கு அநுபந்தமாகவும் இணைக்கப்பட்டுள்ளன.'ஜாதி மத வேற்றுமை கிடையாது'என்னும் பிரசாரம் பொய்யை அடிப்படையாகக் கொண்டதாகையால், இதனால் ஜாதிமத வேற்றுமைகளை அழிக்கவே முடியாது.

S. வேங்கடம், சமயபுரம்.

35. 'நம் திருமணமுறை நம்மைத் தலைகுனிய வைப்பது' என்று கலைஞர் கருணாநிதி மணவிழா ஒன்றில் பேசி, முரசொலியில் அச்சிட்டிருப்பது 2—8—81 இதயத்தில் அச்சிடப்பட்டு, அதுபற்றிய கருத்துக்கள் வரவேற்கப்பட்டுள்ளன. தங்கள் கருத்தைத் தெரிவிக்கவேண்டுகிறேன்.

எனது கருத்தை 'இதயம்' ஆசிரியருக்கும் எழுதியனுப்பியிருக்கிறேன். ஆவணி ஸுதர்சனத்தில் (405) ஒரு கட்டுரையாகவும் அச்சிட்டிருக்கிறேன். ஸுதர்சனர் பதில் இந்த சதகத்திற்கு அநுபந்தமாகவும் அக்கட்டுரை இணைக்கப்பட்டுள்ளது.

[காஞ்சீ மஹாவித்வான் P.B. அண்ணங்கராசார்ய ஸ்வாமியை சென்னை-5 T. ராமஸ்வாமி அய்யங்கார் கேட்ட கேள்வி ஸ்வாமியால் நமக்கு அனுப்பப்பெற்றது.]

*36. குமுதத்தில் பகீரதன் — தமிழர்கள் செய்ததுதான் ஸம்ஸ்க்ருத மொழி என்றும், "தொல்காப்பியத்தின் சில தத்துவங்களின் நுட்பங்களை விளக்கித் தமிழறிஞர்கள் தாங்கள் புதிதாக உருவாக்கிய வடமொழியில்—சமஸ்கிருதத்தில்—எழுதியது ரிக்வேதம்" என்றும் எழுதியிருக்கிறார். இதில் உண்மையிருக்கக் கூடுமா ?*

இவ்விரண்டு விஷயங்கள் பற்றியும் ஆதாரங்களை விளக்கச் சொல்லியும், தொல்காப்பியத்தில் பல இடைச்செருகல் செய்யுட்கள் இருக்கின்றன என்று (பகீரதன்) எழுதியதை விளக்கச் சொல்லியும் கி. மகாலிங்கம் என்னும் இயற்பெயருடைய பகீரதனுக்கு [50,7-வது குறுக்குத்தெரு, ஷெணாய்நகர், சென்னை-600030] 9—9—81 அன்று கடிதம் எழுதினோம். 'தொல்காப்பியக் கருத்துக்களைத் தமிழர்கள் விளக்கியெழுதியதே ரிக்வேதம்' என்று எழுதியதை ஒப்புக்கொண்ட ஸம்ஸ்க்ருத அறிஞர்கள் யார் என்றும் கேட்டிருந்தோம். இன்று (23-9-81)வரை இதற்கு யாதொரு பதிலும் இல்லை. இதிலிருந்து பகீரதன் எழுதியவை ப்ரஹ்மாண்டப் புளுகுகள் என்று விளங்குகிறது. ரிக்₃வேத₃ம் பற்பல தெய்வங்களின் பெருமைகளைப் பல ஸூக்தங்களில் விளக்குவது. தொல்காப்பியம் தமிழ் இலக்கணத்தையும், களவியல் கற்பியல் முதலான தமிழர் பண்பாட்டையும் விளக்குவது. தொல்காப்பியம் பலவிடங்களில் வடமொழி மறைகளைக் குறிப்பிடுகிறது. ரிக்₃வேத₃த்தில் எடுக்கப்பட்ட கடவுளர்களில் திருமால், இந்திரன், வருணன் என்னும் தெய்வங்களையே தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. நவீன ஆராய்ச்சியாளர் அனைவருமே உலகத்திலுள்ள இலக்கியங்கள் அனைத்திலும் ரிக்₃வேத₃மே முற்பட்டது என்று முடிவுகட்டியிருக்கிறார்கள். சங்கரர், ராமாநுஜர் முதலான மதாசார்யர்கள் அனைவரும் வேத₃ங்கள் அநாதி₃ என்றும் அவற்றுக்குக் கால நிர்ணயம் செய்ய இயலாது என்றும் கூறியிருக்கிறார்கள். தொல்காப்பியம் சுமார் 2500 வருடங்களுக்கு முன் இயற்றப் பெற்றது என்றே பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள் முடிவு கட்டியிருக்கிறார்கள். இவர்கள் அனைவரைக் காட்டிலும் தம்மை மேதாவியாகத் தாமே நினைத்துக்கொண்டு, எந்த

ஆதாரமும் இல்லாமல் பகீரதனும், அவர் நண்பர் சுந்தரராஜனும் மனம் போனபடி ஆராய்ச்சி செய்வதை நடுநிலை நிற்கும் அறிஞர்கள் எவரும் ஏற்கமாட்டார்கள். இத்தகைய அண்டப் புளுகு ஆராய்ச்சிக்குக் குமுதம் விளம்பரங்கொடுத்தது மிகவும் அருவருக்கத்தக்கது.

S. T. ரங்கராஜன், கோவை-1, S. சந்தானம், கோவை-10,
இரா. ஸ்ரீநிவாஸ தேசிகன், விழுப்புரம்.

*37. ஆகஸ்ட் '81 ஸப்தகிரி இதழில் 'கோள்கள் கூறும் கண்ணன் கதை' என்னும் தலைப்புள்ள கட்டுரையில் 12-வது பாராவில் கிருஷ்ணன் உபமன்யு முனிவரிடம் சிவதீக்ஷை பெற்றதாக மகாபாரதம் கூறுவதாக எழுதப்பெற்றுள்ளது. இதையும் இதுபோல் பல விஷ்ணுவிரோதக் கட்டுரைகள் ஸப்தகிரியில் வெளிவருவதையும் கண்டித்து (S. T. ரங்கராஜனால்) திருமலை நிர்வாக அதிகாரி ஸ்ரீ P. V. R. K. பிரஸாத் IAS அவர்களுக்கு 16—8—81ல் கடிதம் எழுதப்பெற்றுள்ளது. மகாபாரதத்தில் இப்படி உள்ளதா என்பதை விளக்கவேண்டுகிறோம்.*

புலவர் மணி சித்தாந்தவித்தகர், முரு. பழ. இரத்தினம் செட்டியார்,
4281, கீழ இரண்டாம்வீதி, புதுக்கோட்டை.

*38. வைணவ சமயத்தில் மிக உறைப்பொடுநின்று தாங்கள் பதில் எழுதுவது எனக்கு உவகை அளிக்கிறது. அவரவரும் அவரவர் சமயத்தில் அழுந்தி நிற்கவேண்டும் என்பது என் கொள்கையாகும். பாரதம் அநுசாஸன பர்வத்தில் கிருஷ்ணர் சிவஸஹஸ்ரநாமத்தை உபமந்யு முனிவரிடத்தே உபதேசம்பெற்று, தர்மபுத்ரருக்கு உபதேசிப்பதாகக் கூறியிருப்பதால், பாரத காலத்தில் சைவசமயம் மேலோங்கியிருந்ததென்று விளங்குகிறது. இப்படியிருக்க, நீங்கள் சங்ககாலத்தில் சைவசமயம் இல்லை என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?*

இவ்விரண்டு கேள்விகளும் மஹாபாரதத்தில் அச்சிடப்பட்டிருக்கும் உபமந்யூபாக்யானத்தைப் பற்றியவையாகையால் இவற்றுக்குச் சேர்த்து பதிலளிக்கிறோம். 1910-ம் வருஷம் கும்பகோணம் வைதிகவர்த்தினீ முத்ராக்ஷரசாலையில் பதிப்பிக்கப்பெற்ற பாரதம் அநுசாஸநபர்வம் க்ரந்தலிபிப் பதிப்பில் சிவஸஹஸ்ரநாமத்தை உள்ளடக்கிய உபமந்யூபாக்யானம் 22 அத்தியாயங்களையும் 'ப்ரக்ஷிப்த அத்யாயம்' என்னும் தலைப்பில் அச்சிட்டு 576-வது பக்கத்தின் கீழே அடிக்குறிப்பில் 'இந்த

அத்தியாயங்கள் இடைச் செருகல்களே' என்பதை நிலைநாட்ட அசைக்கமுடியாத ஆறு காரணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றை ஸுதர்சனர் பதில்கள்—மூன்றாவது சதகம் 56-வது கேள்வி பதிலில் விரிவாக விளக்கியிருக்கிறோம். அன்பர் இரத்தினம் செட்டியாருக்கும் அதை நகல் எடுத்து அனுப்பி யிருக்கிறோம். மஹாபாரதத்தில் ஆயிரக்கணக்கான இடங்களில் திருமாலே பிரமன், சிவன் முதலான எல்லா தெய்வங்களையும் படைத்து அளித்து அழிக்கும் முழுமுதற்பொருள் என்று முழங் கப்பட்டிருப்பதை எடுத்துக்காட்டி, நமது விஷ்ணுசித்தவிஜ யத்தின் அடுத்த பாகத்தில் உபமந்யூபாக்யானத்தின் பொய்ம் மையை ப்ரதிபக்ஷிகள் வாய்திறக்கவொண்ணாதபடி நிலைநாட்டப் போகிறோம். சங்கநூல்களில் சிவபரத்வக்கொள்கை இல்லாததி லிருந்தே சங்ககாலத்திலிருந்த மஹாபாரதச் சுவடிகளில் இந்த உபமந்யூபாக்யானம் இருந்திருக்கமுடியாது என்பதை நடு நிலையாளர்கள் நன்கு உணரலாம்.

ஸப்தகிரியை நடத்துகிறவர்கள் "*தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யம் அதிதைவதம்*" [ஜிதந்தே] [தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் பொதுவான தெய்வமாயிருப்பது எம்பெருமா னின் திருவடி] "பொதுநின்ற பொன்னங்கழல்" [மூன்-திருவ 88] எனப்பட்ட எம்பெருமான் திருவடியைப்போலவே, விசிஷ்டாத் வைத ஸ்ரீவைஷ்ணவத்துக்கும், சைவத்துக்கும், சர்வமதசமரச உருவெடுத்த அத்வைதத்திற்கும் பொதுவானவர்களாயிருக்கிறார் கள். அதனால் சைவர், வைஷ்ணவர், சமரசவாதிகள் ஆகிய எவர் எந்த மதக்கட்டுரையை எழுதியனுப்பினாலும் திருவேங் கடத் திருமாலின் பெருமைக்குக் குறை வருகின்றதே என்ப தையும் ஆராயாமல் அதை அப்படியே வெளியிட்டுவிடுகிறார்கள். அத்தகைய கட்டுரைகள் சிலவற்றுக்கு யாம் மறுப்புக் கட்டுரை எழுதியனுப்பியிருக்கிறோம். அவற்றில் 'மணிநிற வண்ணன் மாதவனே', 'இராவணன் கொடியவனே' என்னும் கட்டுரைகளை ஸப்தகிரியில் வெளியிட்டிருக்கிறார்கள். அவற் றையும், மேலும் ஸப்தகிரியில் வரக்கூடிய நமது மறுப்புக் கட்டுரைகளையும் ஸுதர்சனர் பதிலில் அனுபந்தமாக இணைக் கிறோம். இதே ரீதியில் மறுப்புக் கட்டுரைகளையும், எம்பெரு மானுடைய பரத்வத்தை நிலைநாட்டும் கட்டுரைகளையும் ஸ்ரீவைஷ்ணவர்கள் எளிய நடையில் எழுதியனுப்பினால் ஸப்த கிரியில் அவற்றையும் அவசியம் வெளியிடுவார்கள். அன்பர்களை அதைச் செய்யும்படி கேட்டுக்கொள்கிறோம்.

தாசரதி ஸ்வாமி, காஞ்சீபுரம். [நேரில் சொன்னது]

*39. காஞ்சீதேவப்பெருமாள் கோயிலிலுள்ள கஜானனர் ஸந்நிதியில் கமிஷனர் உத்தண்டராமப்பிள்ளை காலத்தில் அவருடைய அதிகாரபலத்தாலே கஜானனரின் நெற்றியிலிருந்த திருமண் காப்பு திலகமாக மாற்றப்பட்டது. இப்போது சமீபகாலமாக காமகோடி பெரிய பீடாதிபதியின் தூண்டுதலினால் அவருடைய ஶிஷ்யர்கள் பலர் கோஷ்டியாக இருந்துகொண்டு சதுர்த்தி தோறும் கல்பிதமான கணபத்யுபநிஷத்தையும், மற்றும் பல விநாயக ஸ்தோத்ரங்களையும் சொல்லி வருகிறார்கள். நானும், ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியின் பேரன் ராஜஸிம்ஹனும் ஆட்சேபித்தும் அதிகாரிகள் அவர்கள் கையிலிருக்கையாலே இவ்வடாதசெயலைத் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். இதை வைணவவுலகிற்கு வெளிப்படுத்தி, தக்க பரிஹாரம் உரைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.*

பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் — பரமபதத்தில் எம்பெருமானுடைய சேனைத்தலைவரான விஷ்வக்ஸேனரின் ப₄டர்களாக ஸிம்ஹமுக₂ரும், க₃ஜமுக₂ரும் குறிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம் பூர்வஶதகத்தில் *"வித₃த₄து ஸுக₂ம் விஷ்வக்ஸேநஸ்ய தே ப்ரத₂மே ப₄டா: கரிமுக₂ஜயத்ஸேநௌ காலாஹ்வஸிம்ஹமுகௌ₂ ச ந:"* [52] [விஷ்வக்ஸேனரின் முக்கியமான ஸேனாவீரர்களான க₃ஜானனர், ஜயத்ஸேநர், காலாஹ்வர், ஸிம்ஹமுக₂ர் என்னும் நால்வரும் நமக்கு ஸுக₂த்தை அளிப்பார்களாக] என்று ப₄ட்டர் யானைமுகத்தையும், சிங்கமுகத்தையும் உடைய இந்த நித்யஸூரிகளை எடுத்திருப்பதைக் காணலாம். இந்த க₃ஜமுக₂ரே பல விஷ்ணு கோவில்களில் பரிவார தே₃வதையாகக் காட்சியளிக்கிறார். சைவர்கள் இவரைத் தங்களது பிள்ளையாராகவே நினைக்கிறார்கள். ஆனால் ஆராய்ச்சியாளர்கள் ஏழாவது நூற்றாண்டுக்குப் பிறகுதான் தமிழகத்தில் விநாயகர் வழிபாடு ஏற்பட்டது என்று பல காரணங்களைக்கொண்டு கூறுகிறார்கள். சங்க இலக்கியங்களில் முருகனைப்பற்றிப் பல பாடல்கள் இருக்கும்போது, முருகனுக்கும் மூத்தவனாகச் சைவர்களால் கூறப்படும் விநாயகரைப் பற்றி ஒரு துணுக்குக் குறிப்புகூட இல்லை. நாயன்மார்களுக்கு முற்பட்ட எந்தத் தமிழ் இலக்கிய நூலிலும் விநாயகரைப்பற்றி ஒரு துணுக்குக் கூட இல்லை. ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களிலும் பிள்ளையாரைப் பற்றிய தெளிவான

குறிப்பு எதுவுமில்லை. இதையெல்லாம் பார்க்கும்போது பிள்ளையாரைப் பற்றி இதிஹாஸ புராணங்களில் வரும் குறிப்புகளும் ஏழாவது நூற்றுண்டுக்குப் பிறகு சேர்க்கப்பட்டவையோ என்னும் வலிதான சந்தேகம் எழுகிறது. காமகோடி பீடாதிபதியின் சீடரான மணியன் நடத்தும் இதயம் பத்திரிகையில் சென்ற மாத இதழ் ஒன்றில் "விநாயகர் தமிழ்நாட்டில் வணங்கப்படத் தொடங்கியது, கி.பி. 7-ம் நூற்றுண்டில்தான் (நரசிம்ம பல்லவர் ஆட்சிகாலத்தில்தான்) என்றும்—தமிழகத்தில் விநாயகர் வழிபாடு பரவலாகியது பௌத்த மதத்தின் க்ஷீணதசைக்குப் பின்னர் தான் என்றும் கூறப்படுகிறது...அதாவது, முன்பு அரசமரத்தடி எல்லாம் புத்த சின்னங்களாக இருந்ததென்றும்—பௌத்த மதம் வலுவிழந்ததும், அவற்றின் அடியில் விநாயகரை வைத்துத் தமிழக மக்கள் வழிபடத் தொடங்கினர் என்றும் சொல்லப்படுகிறது." என்று எழுதப்பட்டுள்ளது. இதிலிருந்து வைஷ்ணவத்தில் பரிவார தேவதையாயிருந்த கஜமுகரை சைவம் ஸ்வீகரித்துக் கொண்டுவிட்டது என்று விளங்குகிறது. காஞ்சியில் விஷ்ணு கோவிலில் கஜானனருக்குத் திருமண்காப்பை நீக்கியது அதிகார வர்க்கத்தின் அடாத செயல். விஷ்ணு கோவிலிலுள்ள கஜானனர் ஸந்நிதியில் காமகோடி பெரிய பீடாதிபதி தம் *ஶிஷ்யர்களைக்கொண்டு* கணபதிஸ்தோத்ரத்தைச் சொல்ல வைப்பது மிகவும் அடாத செயல். காஞ்சீபுரத்திலுள்ள தென்கலை வடகலை எனும் இருசாராரும் இதைத் தடுப்பதற்கு *ஶ*க்தியற்றவர்களாயிருப்பது நமது தன்மானத்திற்கே இழுக்காகும். தாசரதி ஸ்வாமி போன்றவர்கள் மனம் வைத்தால் இதைத் தடுப்பதற்கு நீதிமன்றங்களில் வழக்குத் தொடுத்துத் தடை உத்தரவு வாங்கலாம். காஞ்சீபுரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்களிடையே போராடுவதில் இனியாவது ஊற்றம் கொள்ளாமல், தென்கலை வடகலை என்னும் இரு சாராரும் ஒன்று சேர்ந்து இந்தப் பொது எதிரியோடு நீதிமன்றங்களில் போராடினால் அது வைஷ்ணவத்திற்கு விடிவுகாலமாகும். இந்த அறப்போராட்டத்தில் வெற்றி நமக்கு நிச்சயம்.
V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*40. சொற்பொருட்பிழைகள் மலிந்துகிடக்கும் ஸ்ரீரங்கநாத பாதுகா பத்திரிகையில் துர்மதி புரட்டாசி இதழில் "சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்" எனும் கட்டுரையில் தேசிகனுடைய பெருமையை விளக்குவது எனும் வியாஜத்தில் தென்னுசார்ய தூஷணம் வெளிவந்திருப்பதைப் பார்த்தீர்களா? . .*

பார்த்தேன். பல வருடங்களுக்கு முன் கலிபுருஷனின் உருவமான ஒருவர் விண்ணுளாரிலும் சீரியரான தென்னுசார்யர்களைக் கலிபுருஷன் என்று பாதுகையில் எழுதி துவேஷ விஷத்தைக் கக்கியபோது ஸுதர்சனத்திடம் தினவடங்க பதில் பெற்றது பாதுகை. அப்போது ஸ்ரீமத₃ாண்டவனாச்ரமத்தின் ஸ்ரீகார்யமாயிருந்த சித்ரகூடம் விஜயராகவாசார்யஸ்வாமி "ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமியின் பார்வைக்கு வராமலே சென்னையிலுள்ளவர்களால் இக்கட்டுரை வெளியிடப்பட்டுவிட்டது; இனி இத்தகைய கட்டுரை வராது" என்று மிகுந்த நிர்வேத₃த்துடன் தெரிவித்தார். இப்போது ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமதாண்டவன் எழுந்தருளியிருக்கும்போது அவரது மேற்பார்வையில் அச்சிடப்பெற்று வெளிவரும் பாதுகையில் அதே தூஷணங்கள் தென்னுசார்யர்களின்மேல் பொழியப் பெற்றிருப்பது மிகவும் அருவருக்கத்தக்கது. இக்கட்டுரையை எழுதியிருக்கும் அம்மையார் ஸம்ப்ரத₃ாயத்தில் அக்கிலிபிக்கிலி ஞானமுடையவர் என்பது— "முரபி₄து₃ரஸி" என்னும் பட்டர் அருளிய ஸ்ரீகு₃ணரத்னகோச ஸ்ரீஸூக்தியை முகுந்தமாலா ஸ்ரீஸூக்தியாக எடுத்திருப்பதிலிருந்தும், ஸ்ரீதேசிகனின் "ஆர்த்தோபச்ச₂ந்த₃நம் க₃த்₃யம் ப₄ாஷ்யம் து பராஞ்ஜநம்" எனும் ச்லோகத்தில் ப₄ாஷ்யசப்₃த₃ம் கீ₃தாப₄ாஷ்யத்தைக் குறிப்பது என உணராமல் ஸ்ரீப₄ாஷ்யத்தைக் குறிப்பதாக மருண்டிருப்பதிலிருந்தும், "பரதத்வ நிர்த்தாரணத்துக்கு விசேஷணமானவள்" என்று பிராட்டியைக் குறித்திருப்பதிலிருந்தும், மற்றும் பல சொற்பொருட் பிழைகள் இக்கட்டுரையில் காணப்படுவதிலிருந்தும் விளங்கும். இத்தகைய கட்டுரை ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமியின் நேர் மேற்பார்வையில் நடக்கும் பாதுகையில் எப்படி அநுமதிக்கப் பெற்றதென்று நமக்கு விளங்கவில்லை. ஸ்ரீமதாண்டவன் அருள்மொழியில் பெருமாளுக்கும், இளையபெருமாளுக்கும் ராவணராவணிகளின் வத₄த்தினால் தோ₃ஷம் ஏற்பட்டுப் பரிஹாரம் செய்ததாக எழுதியிருப்பது ஸ்ரீவைஷ்ணவ பத்திரிகையில் வெளிவரத்தகாதது என்பதை 24-வது கேள்வியின் பதிலில் உணர்த்தினோம். இம்மாத அருள்மொழியில் பதரிகாச்ரமத்திற்கு வடமேற்கே உள்ளது ஸாளக்ராமம் என்று எழுதியிருப்பதும் தவறு. ஸாளக்ராமக்ஷேத்ரமுள்ள நேபாளம் பதரியின் தென்கிழக்கேயுள்ளது என்பதை இந்திய தேசப்படத்தைப் பார்க்கும் எவரும் உணரலாம். "கா. ஸ்ரீ ஸ்ரீ" முதலானவர்களைக்கொண்டு ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவை சொற்பிழையில்லாமல்

வெளியிடுவதுபோல் தக்கவர்களைக்கொண்டு அச்சுத் தாள்களைத் திருத்திப் பத்திரிகை வெளியிட்டால்தான் இத்தகைய அபத்தங்கள் இல்லாமல் பத்திரிகை வெளிவரும் என்பதை நாம் ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமியிடம் நேரில் பலமுறை உணர்த்தியும் பயனில்லை. சொற்பொருட்பிழைகளைத் தவிர்க்கமுடியாவிடினும், பூர்வாசார்யர்களை அவர்களுடைய காலதூசிக்கும் ஒவ்வாதவர்கள் தூஷிப்பதையாவது ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமி தவிர்க்கவேண்டும். இல்லாவிடில் ஏற்கனவே நலிந்துகிடக்கும் வைணவம் ஸம்ப்ரதாயச் சண்டைகளால் மேலும் நலிவுறும்.

பெயர் வெளியிட விரும்பாத ஓர் அன்பர்.

*41. 'சமயச் சார்பற்ற அரசால்'' நடத்தப்படும் சென்னைப் பல்கலைக் "கழகமும்" (திராவிடர் கழகத்துடன் சேர்ந்து கொண்டு) நமது சமயத்திற்குத் தீமை செய்து வருகிறது. இந்த வருஷம் I B.A./B.Sc. தமிழ்ச் செய்யுள் பாடத்திட்டத்தில் ''இராவண காவியம்'' என்ற நாஸ்திக நூலின் செய்யுட்கள் சிலவற்றைப் பரீட்சைக்குப் பாடமாக வைத்திருக்கிறது. '''இராவண காவியம், புரட்சிக் கவிஞரின் புதுக் கவிதைபோல் புதிய தமிழகத்தின் ஓவியம். இதனுடைய நோக்கம் முன்னுள்ள ஏடுகளின் மூலம் ஏற்பட்டுள்ள கேடுகளைக் களைந்து இந்நாள் நினைவுக்கேற்ப, அவற்றினை ஆராய்ந்து புது உருவாக்கித் தருவது' என்று பேரறிஞர் அண்ணு இந்நூலை அறிமுகப்படுத்துகிறுர்.''—என்று இராவண காவியம் பற்றித் தமிழ் மாணவர்களுக்கு விளக்கம் தருகிறது சென்னைப் பல்கலைக் கழகம். சென்னைப் பல்கலைக் "கழகத்தின்" இந்த விஷமச் செயலைக் களைந்தெறிய என்ன வழி?*

நாஸ்திகர்கள் அரசாளும்போது இத்தகைய செயல்கள் நடப்பது குறித்து நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. நமது தமிழகப் பல்கலைக் கழகங்களில் சைவர்களின் ஆதிக்கத்தால் வைஷ்ணவத்திற்கு விரோதமான பல செயல்கள் நடந்து வருவதை நமது ஸுதர்சனத்திலேயே பல வருடங்களாகப் பல முறை எடுத்துக் காட்டி வருகிறேம். இப்போது நாஸ்திகர்களின் ஆதிக்கம் பல்கலைக் கழகங்களில் பரவிவிட்டது என விளங்குகிறது. ஆஸ்திகர்கள் தங்கள் பலத்தை உணர்ந்து, கிளர்ச்சியின் மூலமும், நீதிமன்றங்களில் வழக்குத் தொடுப்பதன் மூலமும் போராடினுல்தான் அரசாங்கம் நமது உணர்ச்சி

களுக்கு மதிப்புக்கொடுக்கும். ஆஸ்திகர்கள் ஊமையராய்ச் செவிடர்களாய் வாழும் வரையில் இத்தகைய அநீதிகள் நடந்து கொண்டேதான் இருக்கும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*42. 35-வது கேள்வியின்பதிலில் குறிக்கப்பெற்ற "சங்க நூல்களும் கருணாநிதியும்" எனும் தங்கள் கட்டுரை தமிழ்நாட்டில் எத்தகைய வரவேற்பைப் பெற்றது ?*

இதன் சுருக்கம் "இதயம்" பத்திரிகையின் 13—9—81 இதழில் வெளியிடப்பெற்று லக்ஷக்கணக்கானவர்களுக்குப் பரவியது. கீ₃தாசார்யன் பத்திரிகையின் புரட்டாசி இதழில் இக் கட்டுரை அப்படியே வெளியிடப்பெற்று ஆயிரக்கணக்கான ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பரவியது. ஏராளமானவர்கள் நேரிலும், கடிதம் மூலமும் இக்கட்டுரையைப் பாராட்டியுள்ளனர். நமது கட்டுரையும், "சங்ககாலத் தமிழர் சமயம்" எனும் நமது நூலும் கலைஞர் கருணாநிதிக்கு அனுப்பப்பெற்றது. "அரசியல் கண்ணோக்கோடு பாராமல், இலக்கியக் கண்கொண்டு இவற்றை ஆராயவேண்டும்" என்று கடிதமும் அவருக்கு எழுதப்பெற்றது. இன்று (23—9—81) வரை அவரிடமிருந்து யாதொரு பதிலும் வரவில்லை. வந்தால் விமர்சிப்போம்.

K. நாராயணன், திருச்சி-17.

*43. 27—9—81 "தாய்" இதழில் காமகோடி சிறிய பீடாதிபதி கீதைபற்றிய பேச்சில் "கிருஷ்ணபகவான் 'கடவுளைக் கும்பிடு' என்று கூறுகிறாரே தவிர 'என்னைக் கும்பிடு' என்று கூறவில்லை' என்று கூறுகிறார். இது சரியா ?*

"*மாம் நமஸ்குரு*" [கீ₃தை 9-34; 18-65] [என்னைக் கும்பிடு] என்று கீ₃தையில் கண்ணன் அர்ஜுனனை நோக்கி இருமுறை கூறியிருக்கிறான். தன்னையே கடவுளாகப் பலமுறை கூறியிருக்கிறான். இப்படியிருக்க இதற்கு நேர்முரணாக எழுதும் இவருக்கு கீ₃தையே தெரியாதென விளங்குகிறது. இவருக்கு ராமாயணமே தெரியாது என்பது ஸுதர்சனர் கேள்வி பதிலில் [2-44, 3-19] விளக்கப்பெற்றது. நம்நாட்டு நிர்வாணப்படப் பத்திரிகைகள் இத்தகையவரை ஜக₃த்₃கு₃ருவாகவும், நடமாடும் தெய்வமாகவும் ஆக்குவதைக் கண்டு யாருக்கும் வெட்கமில்லை.

S. K. ராமராஜன், சென்னை-4.

*44. சமீபத்தில் 'நஜன்' (நடராஜன்) என்பவர் வெளியிட்ட 'ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்கள் வைபவம்' எனும் நூலின் முகவுரையில் அக்நிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாச்சாரியர் 'ஸ்ரீராமாநுஜர் வேறு ஸ்ரீப₄ாஷ்யக்காரர் வேறு' என்று எழுதியிருக்கிறார். இக்கருத்தையும், இந்நூலையும் விமர்சிக்க வேண்டுகிறேன்.*

அக்நிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாசார்யர் ஓர் ஆஸ்திக வேஷம் பூண்ட நாஸ்திகர் என்பதும், வைஷ்ணவத்திடமும், வைஷ்ணவ ஆசார்யர்களிடமும், குறிப்பாகத் தென்கலை ஆசார்யர்களிடமும் த்₃வேஷமுடையவர் என்பதும் அவருடைய 'வரலாற்றில் பிறந்த வைணவம்' எனும் நூலில் மிகத் தெளிவாக விளங்கி நிற்கிறது. தென்கலை வடகலை என்னும் வகுப்பு வேற்றுமையில்லாமல் இன்று வைஷ்ணவ சமூஹத்திலுள்ள பெரும்பாலான ப்ரபல வித்₃வான்கள் இவ்விஷயத்தைத் தெளிவுபடுத்தி அவரைக் கண்டித்திருக்கிறார்கள். "அக்நிஹோத்ரியும் வைணவமும்" [விலை ரூ. 8-75] எனும் நமது வெளியீட்டில் இதைக் காணலாம். இவருடைய இத்தன்மையை அறியாதவராகையாலே 'நஜன்' இவரை ஓர் ஆராய்ச்சியாளர் என்று நினைத்து, இவரது இந்த அபத்தமான கருத்தையுடைய முகவுரையை வெளியிட்டுவிட்டார். "ராமாநுஜர் ஜாதிக்கு அப்பாலுள்ள வைஷ்ணவத்தை உருவாக்கித் தானும் அதைப் பின்பற்றி ப்ரசாரம் செய்தார்" என்று இவர் எழுதுவது பரம அபத்தம். பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களும், கு₃ருபரம்பரை நூல்களும் "வர்ணாச்ரம த₄ர்மத்தைக் காட்டிலும் வைஷ்ணவத்வத்திற்கு ஸ்ரீராமாநுஜர் ஏற்றமளித்தார்" என்று கூறுகின்றனவேயொழிய, 'ஸ்ரீராமாநுஜர் வர்ணாச்ரமத₄ர்மத்தை உடைத்தார்' என்றோ, 'அதற்கு அப்பாற்பட்ட வைஷ்ணவத்தை உருவாக்கித் தானும் அதைப் பின்பற்றி ப்ரசாரம் செய்தார்' என்றோ எங்கும் கூறவில்லை. ஆகையால் இவர் 'குருபரம்பரை ராமாநுஜர் வேறு, ஸ்ரீபாஷ்யகாரர் வேறு' என்று எழுதுவது பரம அபத்தம். "ஸ்ரீரங்க ஆலய கர்ப்பக்ருஹத்தில் தமிழ்ப் பாடலைப் பாராயணம் பண்ணக்கூடாது. ஸ்ரீரங்கநாதனுக்காக ஏற்பட்ட

திருப்பள்ளியெழுச்சி இன்னும் ஸ்ரீரங்கநாதன் காதில் விழுந்த தில்லை" என்று இவர் எழுதுவது ப்ரஹ்மாண்டப்புளுகு. மார்கழி முழுவதும் கர்ப்பக்ருஹத்தில் அரையர்கள் திருப்பள்ளியெழுச்சி ஸேவிப்பதையும், ஸம்ப்ரோக்ஷண காலங்களில் அத்யாபகர்கள் அனைவரும் திவ்யப்ரபந்தப் பாடல்களை ஸேவிப்பதையும் காதிருந்தும் கேளாத செவிடராகி விட்டார்போலும். ஸ்ரீராமாநுஜர் காலம் முதற்கொண்டு அவருடைய *ஶி*ஷ்யப்ர*ஶி*ஷ்யர்கள் நூற்றுக்கணக்கான நூல்களில் 'ஸ்ரீராமாநுஜரே ஸ்ரீபாஷ்யகாரர்' என்று ஆயிரக்கணக்கான இடங்களில் காட்டியிருக்கிறார்கள். கூரத்தாழ்வான், பட்டர், பெரியவாச்சான் பிள்ளை, தேசிகன் முதலான ஸகல பூர்வாசார்யர்களின் கருத்துக்கும் முரணான ஓர் அபத்தமான கருத்தை வெளியிடுவதற்கு இவருக்கு எத்தகுதியும் இல்லை என்பதை உணராமல், இந்த அபத்த ஆராய்ச்சியை வெளியிட்டதை மறுத்து நஜனுக்கு நாம் கடிதம் எழுதினோம். 9-10-81 தேதியிட்ட தம் கடிதத்தில் 'நஜன்' "இரண்டாம் பதிப்பு வெளிவரும்போது 'அக்னிஹோத்திரம் வெளியிட்ட கருத்து சுத்த அபத்தம்' என்று நிச்சயமாக வெளியிடுகிறோம்" என்று எழுதியிருக்கிறார். நஜனின் நேர்மையைப் பாராட்டுகிறோம். அவருக்கு 'அக்னிஹோத்ரியும் வைணவமும்' என்னும் நூல் அனுப்பப்பட்டது. நிற்க; நஜனின் நூலைப்பற்றிச் சுருக்கமாக விமர்சிக்கிறோம். வைணவநூல்களில் நேரிடையான பரிசயமில்லாமையால், வைஷ்ணவவித்வான்கள் சிலரிடமும், அக்னிஹோத்ரியையும், முக்கூர் ஸ்ரீநிவாஸவரதரையும் போன்று வைஷ்ணவத்தை அரைகுறையாக அறிந்தவர் சிலரிடமும் கேட்டு, இவர் இந்நூலை எழுதியிருக்கிறார். இதனால் இந்நூலில் பல தவறான விஷயங்களும், முன்னுக்குப்பின் முரணான சில விஷயங்களும் இடம் பெற்றுவிட்டன. சில உதாரணங்கள் — பக்கம் 10ல் 'பக்தர்' என்பது 'பத்தர்' என்றிருக்கவேண்டும். 'முக்தர்—*மோக்ஷவழியை நாடுபவர்*' என்பது தவறு. 'முக்தி அடைந்தவர்' என்றிருக்க வேண்டும். பக்கம் 18ல் 'வி*ஶி*ஷ்டம்—வி*ஶே*ஷம்' என்றிருப்பது 'வி*ஶி*ஷ்டம்—வி*ஶே*ஷத்தோடு கூடியது' என்றிருக்கவேண்டும். பக்கம் 33ல் 'ஸ்தோத்ரரத்னத்தை அருளியவர் நாதமுனிகள்' என்று தவறாகவும், 35ல் 'ஆளவந்தார் அருளியது' என்று சரி

யாகவும் உள்ளது. பக்கம் 36ல் 'ராமாநுஜரின் ஆசார்யர்கள்' என்ற தலைப்பில் திருவரங்கப் பெருமாளரையரை எழுதாது திருக்கச்சிநம்பியை எழுதியது தவறு. பக்கம் 35ல் 'குருகைக் காவலப்பன் பரமபதமடைந்தபின் அவர் தரையில் எழுதி வைத்ததைப் பார்த்து ஆளவந்தார் யோகம் கற்றார்' என்றிருப்பது குருபரம்பரைக்கு முரணானது. பக்கம் 37-ல் 'தீயிற் பொலிகின்ற' என்ற திருப்பல்லாண்டுப் பாசுரம் பரம அபத்தமாக அச்சிடப்பெற்றுள்ளது. பக்கம் 24-ல் பெரியவாச்சான் பிள்ளையை வேதாந்த தேசிகரின் ஶிஷ்யராகக் குறிப்பிட்டிருப்பது பரம அபத்தம். பெரியவாச்சான்பிள்ளை வேதாந்த தேசிகருக்கு முற்பட்டவர். பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை வேதாந்த தேசிகர் தமது நூல்களில் பலவிடங்களில் எடுத்திருக்கிறார். ராமாநுஜருடைய ஶிஷ்யராக நடாதூரம்மாளை எடுத்திருப்பதும் தவறு. இவர் ராமாநுஜருடைய ஶிஷ்யரான ஸ்ரீவிஷ்ணுசித்தர் எனும் எங்களாழ்வானின் ஶிஷ்யர். இத்தகைய பிழைகள் மேலும் பல உள. தென்கலை வடகலைக் கருத்துக்களை விளக்குவதிலும் பல குழப்பங்கள் இந்நூலில் உள்ளன. தகுந்த ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களிடம் கையெழுத்துப் பிரதியைக் காட்டி, அவர்களைக்கொண்டு ப்ருபும் திருத்தச்செய்து, அடுத்த பதிப்பு வெளிவந்தால் இந்நூல் மிகவும் பயனுடையதாயிருக்கும். இந்நூல் கிடைக்குமிடம்: "பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600004" விலை ரூ. 8.

V. ஸ்ரீநிவாஸன் ஸ்ரீரங்கம்.

*45. மணியன் நாட்டின் ஒழுக்கத்தை உருக்குலைக்கக்கூடிய ரஜனீஷின் கொள்கையை ஆதரித்திருப்பதைக் கண்டித்துத் தாங்கள் எழுதிய பகிரங்கக் கடிதத்திற்கு ஏதேனும் பதில் வந்ததா ?*

ஒரு மாதமாகியும் எந்த பதிலும் இல்லை. 'செக்ஸ்' (பாலுணர்வு) பத்திரிகையை நடத்துபவரிடமிருந்து இவ்விஷயத்தில் நேர்மையான பதிலை எதிர்பார்ப்பதற்குமில்லை. 'தினமணி கதிர்', 'சாவி' முதலான சில பத்திரிகைகளுக்கும் அனுப்பி, இது பற்றி மதத்தலைவர்களின் கருத்துக்களைப் பெற்று வெளியிடும்படி கேட்டுக்கொண்டோம். அவர்களிடமிருந்தும்

யாதொரு பதிலும் இல்லை. மணியனுக்கு ஆசார்யரான காம கோடி பீடாதிபதிக்குச் சென்ற மாதம் (செப்டம்பர்-81) எழுதிய பகிரங்கக் கடிதத்திலும் அவரைத் திருத்தும்படி கேட்டுக்கொண்டிருந்தோம். அதற்கும் பயனில்லை. இவ்விஷயத்தைப் பற்றி, பல மதத்தலைவர்களின் கருத்துக்களை வெளியிட்டால், தாம் ஆதரிக்கும் சாக்த மதத்திலும் சைவ மதத்திலுமுள்ள மகாரபஞ்சகம், லிங்கம்—ஆவுடையார் தத்துவம் முதலானவைகள் பற்றிய பல உண்மைகள் வெளியாகி, ஊர் சிரிக்கும்படியாகிவிடும் என்று காமகோடியும்,பிரபல பத்திரிகையாளர்களும் அஞ்சுகின்றனர் போலும்! இதிலிருந்து உபநிஷத்துக்கள், ஸ்ரீராமாயணம், திருக்குறள் ஆகியவற்றால் நிலை நிறுத்தப்பட்ட ஒழுக்கநிலை வைஷ்ணவ மதம் ஒன்றிலேயே வலியுறுத்தப்பட்டு இன்றளவும் பின்பற்றப்படுகிறது என்றும், சைவம் சாக்தம் முதலானவற்றில் ஒழுக்க நிலை முக்கியமாகக் கொள்ளப்படவில்லை என்றும் விளங்குகிறது. இந்த பகிரங்கக் கடிதங்களை ஸுதர்சனர் பதில் ஐந்தாவது சதகத்திற்கு அநுபந்தமாக இணைத்துள்ளோம்.

46—55 கேள்விகள்

*குறிப்பு:—* ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா பத்திரிகையில் [துர்மதி புரட்டாசி இதழ்] ஸ்ரீ அழகியசிங்கர் அருள்மொழியில் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களைக் குறித்துச் சில ப்ரச்னங்கள் கேட்கப்பட்டுள்ளன. அவற்றுக்கு யதாமதி பதில் விண்ணப்பிக்கப்படுகிறது. ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலான புராணங்களில் உள்ளபடி இங்கு பதில்கள் எழுதப்படுகின்றன. பூமண்டலத்திலுள்ளதாகப் புராணங்களில் கூறப்படும் ஏழு த்வீபம், சமுத்திரங்கள், மஹாமேரு முதலானவை இப்போதுள்ள பூமியில் காணப்படாமையாலும், புராணங்களில் சொன்னபடி பூமி தட்டையாயிராமல் உருண்டையாயிருக்கிறது என்று கண்டுபிடிக்கப்பட்டுவிட்டபடியாலும், புராணங்களிலுள்ள மற்றும் பல விஷயங்கள் தூரத்ருஷ்டிக்கண்ணாடி முதலானவைகளைக்கொண்டு விஞ்ஞானிகள் ப்ரத்யக்ஷமாகக் கண்ட உண்மைகளுக்கு முரணாயிருக்கிறபடியாலும், 'ப்ரத்யக்ஷத்துக்கு முரணாக சாஸ்த்ரம் சொல்லாது. அப்படிச் சொன்னால் அது ஏதோ ஒரு கருத்தில் சொல்லப்பட்டது'

என்பது வேதாந்திகளின் ஸித்தாந்தமாகையாலும், 'புராணங்களில் சொல்லப்பட்ட பல விஷயங்களை ரிஷிகள் தங்களுக்கு எட்டிய வரையில் கூறினார்கள்' என்றே கொள்ளவேண்டியிருக்கிறது. ரிஷிகள் வர்ணித்திருப்பதைக் காட்டிலும் அதி விசித்திரமாக எம்பெருமானுடைய விபூதி இருக்கிறது என்று விஞ்ஞான உண்மைகளிலிருந்து அறிகிறோம். தமது முயற்சியால் அடைந்த ஜ்ஞானத்தை உடைய ரிஷிகளுக்கும், அவன் தன்னைக் காட்டக் கண்ட ஆழ்வார்களுக்கும் பரமாணுவுக்கும், பர்வதத்துக்கும் உள்ள வித்தியாசம் உண்டு என்று பெரிய வாச்சான்பிள்ளை போன்ற மஹாசார்யர்கள் அருளியிருக்கிறார்கள். ஆழ்வார்கள் ரிஷிகளைப்போலே விஞ்ஞானிகள் கண்ட உண்மைகளுக்கு முரணாக எதையும் கூறவில்லை என்பதையும் காண்கிறோம். பூமியிலிருந்து முதலில் சூரியனும், அதற்கப்பால் சந்திரனும் உள்ளதாக ரிஷிகள் கூறியிருப்பதைப்போலல்லாமல், "மேலைத்தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித் தாரகையின் புறம் தடவி" [திருநெடுந்தாண்டகம் 5] என்று திருமங்கையாழ்வார் விஞ்ஞான உண்மைப்படி பூமிக்குமேலே சந்திரனும், அதற்கு மேலே சூரியனும், அதற்குமேலே நக்ஷத்திரங்களும் இருப்பதாகப் பாடியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இனி கேள்விகளுக்கு யதாமதி பதில் விண்ணப்பிப்போம்.

*46. பகவான் படைத்த ப்ரஹ்மாண்டங்கள் எத்தனை?*

**"அண்ட₃ாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச।**
**ஈத்₃ருஶாநாம் தத₂ா தத்ர கோடிகோடிஶதாநி ச॥**
[வி-பு 2-7-27]

[அந்தப் பிரகிருதியில், ஆயிரம் அண்ட₃ங்களுடைய ஆயிரங்களும், பதினாயிரங்களும், இப்படிப்பட்ட அண்ட₃ங்களுடைய அனேகம் கோடிகளும் (இருக்கின்றன.)] என்கிறபடியே அண்ட₃ங்கள் கணக்கற்றவையாகும்.

*47. பகவான் பிரளய காலத்தில் எல்லா அண்டங்களையும் ஒரே காலத்தில் அழித்து, படைக்கும்போதும், ஒரே ஸமயத்தில் எல்லா அண்டங்களையும் படைக்கிறாரா?*

"ஏககாலேந ஸ்ருஜ்யந்தே ஸம்ஹ்ரியந்தே ச பூர்வவத்" [வி-பு 1-3-17] [ஒரே காலத்தில் எல்லாப் பொருள்களும்

ஸ்ருஷ்டியின்போது ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன. ஒரே காலத்தில் ஸம்ஹரிக்கவும் படுகின்றன] என்றும், "ந க்ரமேண விவ்ருத்₃தி₄ம் தத் ஜலபு₃த்₃பு₃த₃வத் ஸமம்" [வி-பு 1-2-55] [அண்டம் படிப்படியாக வளர்வதில்லை. நீர்க்குமிழிகள்போலே ஒரே காலத்திலே உண்டாகிறது] என்றும் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் கூறியபடி, அண்டங்களும் அண்டங்களிலுள்ள பொருள்களும் ஒரே காலத்திலேயே உண்டாகின்றன.

*48 இந்த அண்டத்தில் இருப்பதுபோல் ஒவ்வோர் அண்டத்திலும் பதினலு லோகங்கள் ஏழு துவீபம் ஸமுத்திரங்கள் க்ஷீராப்தி எல்லாம் இருக்கின்றனவா இல்லையா?*

எல்லா அண்டங்களும் ஏகரீதியாக இருப்பதாகத்தான் புராணங்களில் கூறப்பட்டுள்ளது. ஆனல் இந்த அண்டத்தில் பூமியில் ஏழு த்வீபங்கள், ஏழு ஸமுத்திரங்கள் முதலியவை புராணங்களில் கூறப்பட்டதுபோல் காணப்படவில்லை. மற்றும் பல விஞ்ஞான உண்மைகளுக்கு முரணுகப் புராணங்களில் பல விஷயங்கள் வர்ணிக்கப்பட்டுள்ளன. ரிஷிகள் தங்களுக்கு எட்டிய வரையில் உபாஸனத்தின் பொருட்டு அண்டத்தை இப்படி வர்ணித்திருக்கிருர்கள் என்றே கொள்ளவேண்டியிருக்கிறது. அல்லது வேருெரு அண்டத்தில் இப்படியிருப்பது ரிஷிகளுடைய காட்சிக்கு இலக்காகி அதை அவர்கள் வர்ணித்திருப்பதாகவும் கொள்ளலாம். அப்போது அண்டங்கள் ஒன்று போலிராமல் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருக்கின்றன என்று கொள்ளவேண்டிவருகிறது. இதிஹாஸ புராணங்களில் பரஸ்பர விரோதங்களைப் போக்குவதற்குக் கல்பபேதக பரிஹாரம் சொல்லுவதுபோலே இவ்வண்ணம் அண்டபேதக பரிஹாரம் சொல்லி ரிஷிகளுடைய வாக்கியங்களை ப்ரமாணமாகக் கொள்ளலாம்.

*49. இந்த அண்டத்தில் பிரம்மா முதலான தேவதைகள் இருப்பது போல் எல்லா அண்டங்களிலும் இருக்கிருர்களா? இவ்வுலகத்திலுள்ள தேவலோகம் கைலாஸம் முதலிய ஆனந்தத்தை அநுபவிக்கக் கூடிய இடங்களும் அந்த அண்டங்களிலும் உண்டா இல்லையா? இந்த அண்டத்தில் ப்ரம்மதேவன் ஸ்ருஷ்டிகர்த்தாவாக இருந்து நம்மையெல்லாம் ஸ்ருஷ்டித்ததுபோல் அந்த அந்த*

*அண்டங்களிலும் பிரம்மா இருக்கிறாரா? இல்லையா? அதைப் போல் ஸம்ஹாரகர்த்தாவான பரமசிவன் ஒவ்வோர் அண்டத்திலும் தனித்தனியாக இருக்கிறாரா இல்லையா? அப்படி இருந்தால் எத்தனை கோடி பிரம்மா? எத்தனை கோடி பரமசிவன்?*

அண்டங்கள் கணக்கற்றவையாகையாலே ப்ரஹ்மா, சிவன் முதலான அதிகாரி புருஷர்களும் கணக்கற்றவர்கள் என்றும், ஒவ்வொரு அண்டத்திற்கும் தனித்தனியாக ஒவ்வொருவர் உள்ளனர் என்றும் கொள்ளவேண்டும். தேவதைகள் ஒவ்வொரு அண்டத்திற்கும் ஒவ்வொருவர் தனித்தனியாக இருப்பதால் அவர்களுடைய வாஸஸ்தானங்களும் ஒவ்வொரு அண்டத்திற்கும் தனித்தனியாக இருப்பதாகவே கொள்ள வேண்டும். "கங்காயா: ஸிகதா தாரா யதா வர்ஷதி வாஸவே | ஶக்யா கணயிதும் லோகே ந வ்யதீதா: பிதாமஹா: ||" [இந்திரன் மழைத்தாரைகளைப் பொழியும்போது அந்த தாரைகளும், கங்கையின் மணல்களும் எப்படி எண்ண முடியாதவையோ, அப்படியே இதுவரை இருந்த ப்ரஹ்மாக்களையும் எண்ண முடியாது] என்னும் ப்ரமாணம் பிரமன் முதலான அதிகாரி புருஷர்கள் கணக்கற்றவர்கள் என்று காட்டுகிறது.

*50. இந்த அண்டத்தில் நாராயணன் இருப்பதுபோல் ஒவ்வோர் அண்டத்திலும் ஒவ்வொரு நாராயணன் இருக்கிறானா? அல்லது ஒரே நாராயணன்தானா? இந்த அண்டத்திலுள்ள நாம் பகவானை ஆச்ரயித்து ஸ்ரீவைகுண்டத்தை அடைகிறதாகச் சொல்லுகிறோமே. அப்படியே அனேககோடி பிரம்மாண்டங்களிலும் உள்ள மனுஷ்யர்கள் பகவானை ஆச்ரயித்து ஸ்ரீவைகுண்டத்தை அடைகிறார்கள் என்றால், கடைசிகாலத்தில் அர்ச்சிராதி மார்க்கமாக ஸ்ரீவைகுண்டத்திற்குப் போகிறோமே. அந்த அர்ச்சிராதி மார்க்கம் அந்த அண்டங்களிலும் உண்டா இல்லையா? இல்லை என்றால் அவர்கள் எந்த மார்க்கமாக மோக்ஷத்திற்குப் போகிறார்கள்? அமானவன் என்கிற வித்யுத்புருஷன் ஒவ்வோர் அண்டத்திலும் வெவ்வேறாக இருக்கிறானா? அல்லது ஒருவனே எல்லா அண்டங்களிலும் உள்ள அர்ச்சிராதி மார்க்கங்களில் கலந்து கொள்ளுகிறானா?*

பரமாத்மாவான நாராயணன் எல்லா அண்டங்களுக்கும் அப்பாற்பட்ட அப்ராக்ருதமான பரமபதத்தில் பரரூபமான

பரவாஸுதேவரூபத்தோடு எழுந்தருளியிருக்கிறன். ஒவ்வொரு அண்டத்திலும் க்ஷீராப்திநாதன் முதலான வியூஹ ரூபங்களோடும், ராமன் கிருஷ்ணன் முதலான விபவரூபங்களோடும், அந்தர்யாமியாகவும், அர்ச்சாரூபமாகவும் தனித் தனியே எழுந்தருளியிருக்கிறன் என்றே கொள்ளவேண்டும். உபநிஷத்தில் சொல்லப்பட்ட அர்ச்சிராதி மார்க்கம் ஒவ்வொரு அண்டத்திற்கும் தனித்தனியாக இருப்பதாகவே கொள்ள வேணும். ஒவ்வொரு அண்டத்திலும் மனிதர்களும், தேவர்களும், திர்யக்குகளுங்கூட பக்தி ப்ரபத்திகளாலோ, ஆசார்ய அபிமானத்தாலோ மோக்ஷம் அடைகிறர்கள் என்றே கொள்ள வேணும். "தத்புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்₃ரஹ்ம க₃மயதி" என்று உபநிஷத்து அமாநவபுருஷனை ஏகவசனத்திலேயே எடுத்து, அர்ச்சிராதிமார்க்கத்தால் வருகிறவர்களை ப்ரஹ்மத்தை அடைவிப்பதாகக் கூறியிருப்பதால் ஓர் அமாநவபுருஷனே உளனென்று கொள்ளவேண்டும். அவன் பல ரூபங்களை எடுத்துக்கொள்ளக் கூடியவனேயன்றே.

*51. பஞ்சீகரண, த்ரிவ்ருத்கரணத்தை பகவான் அண்டத்தை ஸ்ருஷ்டிப்பதற்கு முன் பண்ணுகிறனே, ஒவ்வோர் அண்டத்திற்கும் தனித்தனியாகப் பண்ணுகிறனு? ஒன்றகவே பண்ணுகிறனு? 'तदैक्षत बहु स्यां प्रजायेय' (தத் ஐக்ஷத ப₃ஹு ஸ்யாம் ப்ரஜாயேய) என்று ஸங்கல்பம் பண்ணுவது ஒவ்வோர் அண்டத்திற்கும் தனித்தனியாகப் பல பண்ணினனு? அல்லது ஒரே தடவைதான் ஸங்கல்பித்தானு?*

எல்லா அண்டங்களையும் ஒரே காலத்தில் ஸ்ருஷ்டித்தது போலே ஸ்ருஷ்டி ஸங்கல்பத்தையும் ஒரு முறையே செய்து, பஞ்சீகரண, த்ரிவ்ருத்கரணத்தை ஒன்றகப் பண்ணுவதாகவே கொள்ளவேண்டும்.

*52. எல்லா அண்டங்களுக்கும் வேதம் என்பது ஒன்றே தானு? அல்லது வெவ்வேறு வேதங்களா?*

"அநந்தா வை வேதா₃:" என்று கூறியிருக்கையாலே கணக்கற்ற வேதங்களின் ஒவ்வொரு சாகைகளும், ஒவ்வொரு பகுதிகளும் ஒவ்வொரு அண்டத்தில் ப்ரசாரத்தில் இருக்கக் கூடும்.

*53 இவ்வுலகில் உள்ள எல்லா மதங்களும் அவ்விடங்களிலும் இருக்கின்றனவா? இவ்விதமே எல்லா மதாசார்யர்களும் இருக்கிறார்களா?*

மதாசார்யர்கள் அதிகாரி புருஷர்கள் அல்லராகையால் ஒவ்வொரு அண்டத்தில் மதங்களும், மதாசார்யர்களும் விசித்திர விசித்திரமாக இருக்கக்கூடும். திவ்யப்ரபந்தத்திற்கு வேத ஸாம்யம் கொள்ளும் பக்ஷத்தில், அவையும், ஆழ்வார்களும், அவர்களை அடியொற்றிய ஆசார்யர்களும் ஒவ்வொரு அண்டத்திலும் இருக்கக்கூடும்.

*54. இவ்வுலகில் இருப்பதுபோல எல்லா அண்டங்களிலும் பெருமாள்கோயில் சிவன்கோயில் முதலான கோயில்கள் நிறைந்திருக்கின்றனவா இல்லையா?*

ஒவ்வொரு அண்டத்தின் சில பகுதிகளிலாவது பெருமாள் கோவில், சிவன் கோவில் முதலானவை இருக்கவேண்டும். இஸ்லாம், கிறிஸ்தவம் முதலான மற்ற மதக் கோவில்களும் இருக்கக் கூடும். மதிவிகற்பால் பிணங்கும் வேறு மதங்களுமிருக்கலாம்.

*55. க்ஷீராப்திநாதன் ஒருவன்தானா? ஒவ்வோர் அண்டத்திலும் க்ஷீராப்தியில் சயனித்துக்கொண்டிருக்கிறானா?*

"ஸமுத்₃ரேந்தம்......நாராயணம்" "யம் அந்த:ஸமுத்₃ரே கவயோ வயந்தி" "அம்ப₄ஸ்யபாரே" என்று உபநிஷத்து அண்டத்துக்குள்ளே இருப்பதாக க்ஷீராப்தியைப் படிக்கையாலே ஒவ்வொரு அண்டத்திலும் வ்யூஹமூர்த்தியான க்ஷீராப்திநாதன் தனித்தனியே இருப்பதாகவே கொள்ளவேண்டும்.

"நாரணன் மாயையை அறிபவர் யாரே" "யாருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்" "யஸ்யாமதம் தஸ்ய மதம்" என்று எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிகளை அளவிட்டு அறிய முடியாது என்று உபய வேதங்களும் முழங்குகையாலே, ஒவ்வொரு அண்டத்திலும் எத்தனையோ விசித்திரங்கள் இருக்கலாம். அவற்றையெல்லாம் நாம் பரமபதம் சென்ற பிறகு தான் உணரமுடியும். உபய வேதங்கள், அவற்றுக்கும் ப்ரத்யக்ஷத்திற்கும் முரணல்லாத *ஶா*ஸ்த்ரங்கள் ஆகிய ப்ரமாணங்களைக் கொண்டு இந்த பதில்கள் எழுதப்பட்டன. வித்வத்வரிஷ்டர்கள் இவற்றை நடுநிலைநின்று ஆராய்ந்து தம் நிஷ்கர்ஷங்களைத் தெரிவிக்கலாம்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

56. *ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா துர்மதி ஐப்பசி இதழில் ஸ்ரீஅழகிய சிங்கர் அருள்மொழியில் தாம் முந்திய இதழில் கேட்ட கேள்விகளுக்குத் தாமே பதிலுரைத்திருப்பதை விமர்சித்து, 'நிர்த்தா₃க்ஷிண்யமாக சரியான' பதிலைச் சொல்லப் பிரார்த்திக்கிறேன்.*

அழகியசிங்கர் பதிலில் பெரும்பாலான பகுதிகள் *ஶா*ஸ்த்ர ஸம்மதமாகவும், ஸ்ரீப₄ாஷ்யகார ஸ்ரீவேதா₃ந்ததே₃*ஶி*காதி₃பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்திற்குப் பொருந்தியவையாயுமிருந்தபோதிலும், சில விஷயங்கள் *ஶா*ஸ்த்ரவிருத்₃த₄மாகவும், பூர்வாசார்யர்கள் திருவுள்ளத்திற்கு மாறுபட்டும் உள்ளன. (1) "வேத₃*ஶ*ப்₃த₃ம் ப₄க₃வத்ஸ்வரூபத்திலும், ஜீவர்களின் ஸ்வரூபத்திலும் ஒட்டிக் கொண்டிருக்கிறது. ப்ரளயகாலத்தில் எல்லாம் அழியும்போது ஜீவர்களை வேதம் விட்டுவிடுகிறது" என்று எழுதியிருக்கிறார். இது ஸ்ரீப₄ாஷ்யகார ஸ்ரீதே₃*ஶி*கஸ்ரீஸூக்திவிருத்₃த₄ம் என்று 25-வது கேள்வியின் பதிலிலேயே காட்டியிருக்கிறோம். (2) "அண்டங்களிற்குள்ளிருக்கும் அவதார விஷ்ணுக்களுக்குத் தான் கைகால் முதலானவற்றோடு கூடிய திருமேனி உண்டு; நாராயணன் என்கிற பரப்ரஹ்மத்திற்குக் கைகால் முதலியன (திருமேனி) இல்லை. ஏனென்றால், அவன் அனேக கோடிப் பிரம்மாண்டங்களுக்கும், அவற்றிலுள்ள ஸகல ஜகத்துக்களுக்கும் உபாதாநகாரணமாகவும் இருந்துகொண்டு தன்னைத் தானே ஜகத்தாகவும் ஸ்ருஷ்டிக்கிறபடியால், ஸர்வ ஜகத்தும் பிரளய காலத்தில், பேர் உருவங்கள் எல்லாம் அழிந்து, "இதம் ஸ்தேவ ஆஸீத்" என்று சொல்லியிருக்கிற இடத்தில் அந்த 'ஸத்'என்கிற வஸ்துவிற்கு எப்படிக் கர சரணாதிகள் இல்லையோ, அப்படியே "एको ह वै नारायण आसीत्, न ब्रह्मा नेशानः" (*ஏகோ ஹ வை நாராயண ஆஸீத். ந ப்ரஹ்மா ந ஈஶாந:*) என்று சொல்லி, 'அந்த நாராயணனிடத்திலிருந்து ஸமஸ்த ஜகத்தும் உண்டாயிற்று' என்று சொல்லியிருக்கிறபடியால், ஸத்சப்த வாச்யமான ப்ரஹ்மத்திற்குப்போல் நாராயண *ஶ*ப்தத்திற்கு அர்த்தமான பரப்ரஹ்மத்திற்கும் கைகால்களோடு கூடின திருமேனி கிடையாது" என்று எழுதியிருக்கிறார். இது ஸகல ப்ரமாணங்களுக்கும், ஸகலபூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் முரணானது. எம்பெருமானுடைய ஐந்துவகையான ரூபங்களில் பரரூபம் — வ்யூஹம், விப₄வம், அந்தர்யாமி, அர்ச்சை எனும் மற்ற எல்லாவகை ரூபங்களுக்கும் மூலமானது. *"ஸவ்யம்*

*பாத₃ம் ப்ரஸார்ய*" என்னும் ஶ்லோகத்தில் காட்டியபடி திருக்கைகள், திருவடிகள், தி₃வ்யாயுத₄ங்கள் முதலானவற்றோடு கூடியவனாகப் பரமபத₃த்தில் ஸ்ரீமந்நாராயணன் எழுந்தருளியிருக்கும் இருப்பே பரரூபமாகும் என்று ஸகலஶாஸ்த்ரங்களும், ஸகலபூர்வாசார்யர்களும் ஏககண்ட₂மாக முழங்கியிருக்கிறார்கள். "*அமிதௌஜா: பர்யங்க:; தஸ்மிந் ப்₃ரஹ்ம ஆஸ்தே*" [அளவற்ற ப₃லத்தையுடைய ஆதிஶேஷன் படுக்கையாயிருக்கிறான். அதில் பரமாத்மா *வீற்றிருக்கிறார்*.] என்றது கௌஷீதகி உபனிஷத். "விண்மீது *இருப்பாய்*, மலைமேல் *நிற்பாய்*, கடல் *சேர்ப்பாய்*......" [திருவாய் 6-9-5] "வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல" [திருவாய் 4-5-1] 'நிற்பதும் ஓர் வெற்பகத்து இருப்பும் *விண்* கிடப்பதும் நற்பெருந்திரைக் கடலுள்" [திருச்சந்த 65] என்று ஆழ்வார்களும் பரமபத₃த்தில் ஸ்ரீமந்நாராயணன் வீற்றிருந்த திருக்கோலத்தில் திருமேனியோடு எழுந்தருளியிருக்கிறான் என்று காட்டினார்கள். "*மூர்த்தம் ப்₃ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யத₃த்யத்₃பு₄தம்*" [சது:ஶ்லோகீ 4] என்று சது:ஶ்லோகியிலும், ஸ்தோத்ரரத்னத்தில் "தயா ஸஹ ஆஸீநம் அநந்தபோ₄கி₃நி" [ஸ்தோ-ர 39] [அப்பிராட்டியோடுகூடத் திருவநந்தாழ்வான்மேல் *வீற்றிருப்பவனை*] முதலான பல ஶ்லோகங்களிலும் ஆளவந்தார் இந்தப் பரவாஸுதே₃வனின் திருமேனியை அத்யத்₃பு₄தமாக வர்ணித்திருக்கிறார். எம்பெருமானாரும் தமது ஸ்ரீவைகுண்ட₂க₃த்₃யத்தில் இத்திருமேனியை அத்யாஶ்சர்யமாக வர்ணித்திருக்கிறார். இவ்விடங்களுக்கு வியாக்கியானம் செய்த பெரியவாச்சான்பிள்ளை, தே₃ஶிகன் முதலான பூர்வாசார்யர்கள் அனைவரும் பல ஶாஸ்த்ர ப்ரமாணங்களைக் காட்டிப் பரமபத₃த்தில் ஸ்ரீமந்நாராயணன் திருமேனியோடு கூடவே எழுந்தருளியிருக்கிறான் என நிலைநாட்டியிருக்கிறார்கள். மேலும், ஸச்ச₂ப்₃த₃வாச்யமான ப்₃ரஹ்மம் வேறு, நாராயணஶப்₃த₃வாச்யமான பரப்₃ரஹ்மம் வேறு என்று எழுதியிருப்பதும் ஸகலஶாஸ்த்ரங்களுக்கும், ஸகலபூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் முரணானது. ஸச்ச₂ப்₃த₃வாச்யமான ப்₃ரஹ்மம் நாராயணஶப்₃த₃த்தினால் சொல்லப்படுபவனே என்று ஸகலபூர்வாசார்யர்களும் ஸாமாந்யவிஶேஷ ந்யாயத்தைக்கொண்டு நிர்ணயித்திருக்கிறார்கள். இவ்வண்ணமாக ஸகலஜக₃த்திற்கும் நிமித்தோபாதா₃ந ஸஹகாரி ரூபமான மூவகைக்காரணமாகவும் ஆகும் ஸூக்ஷ்மசேதநாசேதந விஶிஷ்டனான எம்பெருமானுடைய அவயவங்களற்ற தி₃வ்யாத்ம

ஸ்வரூபத்திற்கு உள்ள எண்ணிறந்த ரூபங்களுக்கெல்லாம் மூலமாக விளங்குவது பரமபதத்திலுள்ள பரவாஸுதேவத் திருமேனி என்பது ஸகலப்ரமாணஸித்தம். இவ்விஷயத்தை எந்த ப்ரமாணமும் காட்டாமல் ஸ்ரீ அழகியசிங்கர் மறுத்திருப்பது குறித்து நாம் சந்தித்த வித்வான்கள் அனைவரும் ( உபய ஸம்ப்ரதாயஸ்தர்களும் ) மிகுந்த மனவருத்தத்தைத் தெரி விக்கிறார்கள். இத்தகைய விஷயங்களை அருள்மொழியில் எழுதா திருக்கும்படி அழகியசிங்கரை அடிபணிந்து வேண்டுகிறோம்.

R. இராதாரமணன், ஹிந்து முன்னணிக் கழகக் காரியதரிசி,
மந்தவெளி, சென்னை.

57. 'தமிழ் பழங்கலை இயக்கம்' என்று திரு மீ பா. சோம சுந்தரம் தலைமையில் ஒரு புது இலாகாவைத் தமிழக அரசு நிறுவு கிறது. திரு மீ. பா. சோமு சென்னை வானொலியில் இருந்தபோது அந்த நிறுவனத்தை ஓதுவார்களின் குடும்ப சொத்து ஆக்கி, காலை 'வந்தனை செய்வோம்' நிகழ்ச்சியில் 4or5 சைவப் பாடல்க ளுக்கு ஒரே ஒரு வைணவப் பாடல் பாடவைத்தார். தமிழ்மணம், இசை அமுதம், பக்திப்பாடல், நந்தாவிளக்கு, மாதர் உலகம் இன்ன பிற நிகழ்ச்சிகளில் அறவே வைணவப் பாடல்கள் பாடப் படாமல் பாடகர்களைச் சைவப்பாடல்களையே பாட வற்புறுத்தினார். வைணவப் பாடல் பாடும் வித்வான்களைக் குரல் பொருத்தமில்லை என்று விலக்கி அவமானம் செய்து, தமிழ்மொழி எழுத்துக்களையும் சரியாக உச்சரிக்கத் தெரியாதவர்களுக்கு வானொலி நிகழ்ச்சி களில் இடம் கொடுத்தார். இப்பேர்ப்பட்டவர் பண்டைத் தமிழ் இயக்க இலாகாவின் தலைவர் ஆனால் வைணவத்திற்குப் பலவிதத்தி லும் தீங்கு இழைப்பது திண்ணம். எனவே இதை உடனே தடுக்க ஆவனசெய்து ஒரு இயக்கம் உருவாக்கக்கோருகிறேன்.

'நம்மாழ்வாரின் பக்திநெறி' 'முதல்மூவர்' என்னும் ராஜாஜி யின் நூல்களை எழுதுவதற்குத் துணையாயிருந்து, மதவிஷ யங்கள் அவ்வளவாகத் தெரியாத திரு. ராஜாஜி அவர்களைக் கொண்டு ஆழ்வார்களையே சமரசவாதியாக்கமுயன்றவர் மீ. பா. சோமு. நமது மறுப்புக்கட்டுரையால் ராஜாஜி அவர்கள் உண் மையை உணர்ந்து, தமக்கு அவ்வளவாக மதவிஷயங்கள் தெரியாது என்று கடிதம் எழுதினார். ஸுதர்சனத்திலும் இது வெளியிடப்பட்டது. இவருக்குக் கொடுக்கப்படும் பதவிகள் வைணவத்திற்குத் தீங்கிழைக்கவே பயன்படும் என்பதும் வெளிப்படை. சிறுபான்மையினரான வைஷ்ணவர்களுக்கு மாநில அரசில் நியாயம் கிடைக்காது. இத்தகையவர்கள் தீங் கிழைக்கும்போதெல்லாம் வைஷ்ணவர்கள் பலர் தந்தி, மகஜர்கள் மூலம் மத்திய அரசு அதிகாரிகளுக்கு அவற்றைக்குறித்து ஆக்ஷேபம் தெரிவித்துவந்தால் பரிஹாரம் கிடைக்கலாம்.

V. ஸ்ரீனிவாஸன், ஸ்ரீரங்கம்.

*58 துர்மதி கார்த்திகை ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் ஸ்ரீ அழகிய சிங்கரின் அருள்மொழியிலும், ஸம்பாதகரின் குறிப்பிலும் 56-வது கேள்வி பதிலை விமர்சித்து எழுதியிருப்பவற்றை விமர்சிக்கப் பிரார்த்திக்கிறேன்.*

ப்ரியா ஐப்பசி அருள்மொழியில் "ஸச்சப்தவாச்யமான ப்ரஹ்மத்துக்குப்போலே நாராயணசப்தத்திற்கு அர்த்தமான பரப்ரஹ்மத்திற்கும் கை கால்களோடு கூடின திருமேனி கிடையாது" என்று எழுதப்பட்டிருந்தது. இது தவறு என்றும், 'ஸச்சப்தவாச்யனும், நாராயணசப்தவாச்யனும் ஒருவனே' என்றும் நாம் 56-வது கேள்வி பதிலில் எழுதியிருந்தோம். இதை அருள்மொழியிலோ, ஸம்பாதகரின் குறிப்பிலோ மறுக்கவில்லை. நேர்மாறாக, "ஸச்சப்தவாச்யன் நாராயணன்" என்று அழகியசிங்கரும் ஸம்பாதகரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். "எம்பெருமானுடைய திருமேனி ஸ்ருஷ்டி முதலான கார்யங்களுக்கு உறுப்பல்ல" என்னும் அனைவருமிசைந்த விஷயத்தை விளக்க, *"விகரணத்வாந்நேதி சேத் தது₃க்தம்"* என்னும் ஸூத்ரத்தின் விளக்கம் ஸம்பாதகரால் விரிவாகச் செய்யப்பட்டுள்ளது. இவ்விளக்கத்திற்கு ப்ரஸக்தியேயில்லையே. இதை யார் மறுத்தார்கள்? "ஸச்சப்தவாச்யன் ப்ரஹ்மம்; நாராயணசப்தவாச்யன் பரப்ரஹ்மம்; இவனுக்குப்போலே அவனுக்கும் கைகால் கிடையாது" என்று எழுதியதையல்லவோ நாம் மறுத்தோம். 'ஸச்சப்தவாச்யன் நாராயணன்' என்று எழுதி இதை ஒப்புக்கொண்டபின்பு, நாம் "விஷயங்களை சரிவரப் புரிந்துகொள்ளாமல்" எழுதுவதாக அருள்மொழியில் எழுதுவதும், "இவ்விஷயத்தை நன்கு பராமர்சிக்காமல் ஆக்ஷேபித்து ஏதேதோ எழுதியிருப்பதாக" ஸம்பாதகர் எழுதுவதும் எப்படிப் பொருந்தும்? "பகவத்ஸ்வரூபத்துக்குக் கைகால் முதலானவை கிடையாது" என்று எளிதாக எழுதியிருக்க வேண்டிய விஷயத்தை, "ஸச்சப்தவாச்யமான ப்ரஹ்மத்திற்குப் போலே, நாராயண சப்தவாச்யமான பரப்ரஹ்மத்திற்கும் கைகால் கிடையாது" என்று குழப்பி எழுதிவிட்டு, அக்குழப்பத்தை நம்மேல் ஏற்றிடுவது முறையல்ல. "(அண்டங்களுக்குள்ளிருக்கும்) விஷ்ணுக்கள்தாம் பிரம்மா சிவன்

இவர்களைப்போல் கைகால் முதலியவற்றுடன் கூடினவர்கள். சங்கசக்ரகதாபாணிகளாக இருக்கிறார்கள். நாராயணன் என்கிற பரப்ரஹ்மத்திற்குக் கைகால் முதலியன (திருமேனி) இல்லை'' என்று அழகியசிங்கர் எழுதியிருப்பதைப் படிப்பவர்கள் அண்டத்திற்கு மேலேயிருக்கும் நாராயணனுக்குத் திருமேனியில்லை என்றுதானே புரிந்துகொள்வார்கள்! ''ஸ்ருஷ்டிக்கும்போது நாராயணனுக்குக் கரசரணாதிகள் இல்லை'' என்று ஸம்பாதகர் கார்த்திகையிதழில் எழுதுகிறார். இதை ''நாராயணன் ஸ்ருஷ்டிக்கும்போது அவனுடைய திருமேனியிலுள்ள கைகால் முதலானவை ஸ்ருஷ்டிக்கு உறுப்பாவதில்லை'' என்று எழுதினால் தெளிவாயிருக்கும். நிற்க; ''நேரில் வந்தால், அவர்கள் மனத்தில் நன்றாகப் படும்படி சொல்ல ஸித்தமாக இருக்கிறேன்'' என்று அழகியசிங்கர் ஸாதிக்கிறார். நேரில் வந்தபோது நாம் காட்டிய தேசிக ஸ்ரீஸூக்திகளையும் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். ஏற்கனவே ஸம்ப்ரதாயம் இரண்டாகப் பிரிந்து பல சண்டைகளுக்குக் காரணமாகி வருகிறது. அழகியசிங்கரைப் போன்ற ஸ்தானத்திலிருப்பவர்கள், பூர்வாசார்யர்கள் அனைவரது ஸ்ரீஸூக்திகளுக்கும் முரணான அர்த்தங்களைச் சொல்லத் தொடங்கினால் வைணவமதம் சின்னபின்னமாகிவிடுமே என்று பயந்தே நாம் இவ்விஷயத்தை அடக்கத்தோடு எடுத்துக்காட்டி, இத்தகைய விஷயங்களை எழுதாதிருக்கும்படி அழகியசிங்கரைப் பிரார்த்தித்தோம். அழகியசிங்கர் எழுதுவதுபோல் அவருக்குத் தடைவிதிக்கவில்லை. அவருக்குத் தடைவிதிக்க அடியேனுக்கு சக்தியுமில்லை. நிற்க. ஸச்சூட்டுதவாச்யனும் நாராயணனும் ஒன்றே என்றும், பரமபதத்தில் திருமேனி உண்டு என்றும் இப்போது தெளிவாக எழுதியதற்கு நன்றி செலுத்துகிறேன்.

ஸ்ரீ. மாதவன், ஸ்ரீவிஷ்ணுபக்த ஸேவா ஸமாஜம்,
மேலக்கொட்டையூர், கும்பகோணம்.

*59. 15—11—81 நாளிட்ட கல்கி இதழில் 'அன்றாட வாழ்க்கையில் அத்வைதம்' என்ற தலைப்பில் காமகோடி புதிய பீடாதிபதி சொல்லியிருக்கும் விளக்கத்தில் அத்வைத சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை. இதோடு நில்லாமல் கடைசியில் ''அம்பாளும் ஈசுவரனும் உலகரக்ஷகர்கள்'' என்றும் முடித்திருக்கிறார். இதுபற்றிய என் அபிப்ராயங்களை 'கல்கிக்கு' அனுப்பி*

புள்ளேன். அதன் நகலையும் இதோ உங்களுக்குத் தெரியப் படுத்துகிறேன்.

''அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு. தங்களது 15-11-81 இதழில் உள்ள சங்கராச்சாரியாரின் அருள்வாக்கைப் படித்தேன். உண்மையில் அதில் கூறப்பட்டிருப்பது அத்வைதக் கொள்கை யாகாது. ஏனென்றால் அத்வைதப்படி நடக்கவேண்டுமென்றால் பிறர்பொருள்களை நம்பொருள்போல் பாவிக்கவும், அதே சமயத்தில் நம் பொருள்களை மற்றவர் உபயோகிக்கவும் உரிமை கொடுக்கவேண்டும். அப்படியல்லாது, மற்றவன் நன்றாயிருந்தால் நாமும் நன்றாயிருக்கிறோம் என்று எண்ணவேண்டும் என்பதானது, மனத்தளவிலேயே நடக்கும். செயலளவில் சரிப்பட்டு வராது. மற்றும் இங்கு கூறியிருக்கும் கருத்து அத்வைதத்திற்குப் பொருத்தமானதாக இல்லை. ஏதோ அத்வைதத்தைச் சொல்ல வேண்டும் என்று காரணத்திற்காகச் சொல்லப்பட்டுள்ளதைப்போல் தெரிகிறது. ஒரு சந்தேகம். ஆதிசங்கரர் தாம் போதித்த கொள்கையில் அத்வைதத்தை போதித்தாரேயொழிய, சைவத்தை போதிக்கவில்லை. அப்படியிருக்கும்போது, ''நாராயண ஸ்ம்ருதி'' என்று கையொப்பமிடும் சங்கராசாரியார், ''ஸ்ரீமந் நாராயணனை'' விட்டுவிட்டு சிவனுக்குப் பரத்வம் சொல்கிறாரே, இது எந்த அத்வைதத்தில் இருக்கிறது என்பதை அவரையே விளக்கச் சொன்னால் நன்றாயிருக்கும். விசிஷ்டாத்வைதம், அத்வைதம், த்வைதம் மூன்றும் வெவ்வேறு கொள்கைகளாயினும் மூன்றின் ஆசார்யர்களும் பரமாத்மாவாக 'ஸ்ரீமந் நாராயணனையே' சொல்லுகின்றனர். இதைப் பீடாதிபதி கைவிடக் காரணமென்ன என்பதையும் தெரிவிக்கவும். தயவுசெய்து இதைப் பிரசுரித்து, தக்க பதிலையும் அளிக்கக்கோருகிறேன்.'' இதுபற்றி பதிலைத்தெரிவிக்க ஸுதர்சனரைப் பிரார்த்திக்கிறேன்.

'ஈசாவாஸ்யம்' என்று தொடங்கும் மந்திரத்துக்கு ஆதி சங்கரர் காட்டிய 'உலகம் பொய், எல்லா ஆத்மாக்களும் ஒன்று' என்னும் பொருளே பொருந்தும் என்று சிறிய பீடாதிபதி எழுதுகிறார். ''இன்னொருவன் என்று அடுத்தவனைப் பிரித்து எண்ணுவதனால்தானே அவன் பணத்தைக் கண்டு பொறாமைப் படுவதும், பிடுங்கிக் கொள்வதும் ஏற்படுகிறது? அவனை நம்முடன் ஒன்றாக எண்ணிவிட்டால், அவன் சுகமும், துக்கமும்

நம்முடைய சுக துக்கமாகிவிட்டால், பின்பு போட்டி பொருமை ஏது ?'' என்று வாதம் செய்கிருர். எல்லா ஆத்மாக்களும் ஒன்று என்பது உண்மையானல், பிறர் பொருள், தாரம் முதலான வற்றையும் நம்முடையது என்று எண்ணிக் கைக்கொண்டு விடலாமே என்றும் சிலர் எண்ணக்கூடும். நிற்க. இன்ப துன் பங்கள் ஒவ்வொருவருக்கும் வேருயிருக்க, எல்லா ஆத்மாக்க ளும் ஒன்று என எண்ணுவது ப்ரத்யக்ஷவிருத்₃த₄மாகும். ஆத் மாக்களிடையே பே₄த₃த்தைச் சொல்லும் ஏராளமான பே₄த₃ ஶ்ருதிகளுக்கு முரண்பட்டதுமாகும். ஆகையால் ''எல்லாம் ஸர்வேஶ்வரனது உடைமையாகையாலே, அவனுடையதான பொருளில் நீ பற்றுவைப்பது தகாது'' என்னும் பொருளே இம் மந்திரத்துக்குப் பொருத்தமான பொருளாகும். ஆதிசங்கரர் விஷ்ணுவையே ஸகு₃ண ப்₃ரஹ்மமாகக் கொண்டிருக்க, இக்கால அத்₃வைதிகள் மனம்போனபடி சைவ சாக்தாதி₃மதங்களேப் பேசி, ஆதிசங்கரருக்கே த்₃ரோஹம் புரிகிருர்கள் என்பதை நாம் 'சங்கரரும் வைணவமும்' எனும் நூலில் விரிவாக நிலேநாட்டி யிருக்கிறேம். அதற்கு பதில் உரைக்க இயலாமல் திருப்பித் திருப்பி ஆதிசங்கரத்₃ரோஹம் செய்பவர்களே நாம் பொருட் படுத்தாமல் இருப்பதே நல்லது.

D. R. விளாஞ்சோலேப்பிள்ளே, திண்டுக்கல்.

*60. குப்பைத்தொட்டிப் பத்திரிகையான குங்குமத்தில், ''குப்பைத்தொட்டி'' என்னும் கட்டுரையில் 'தமிழைப் பழித்த வனேத் தாய் தடுத்தாலும் விடேன்' எனக் கூக்குரலிடும் 'கலேஞர்' கருணாநிதி ஆண்டாளேயும், சங்கத்தமிழ்மாலேயான திருப்பாவையையும் பழித்து எழுதியிருப்பதற்குத் தக்க பதில் எழுத வேண்டுகிறேன்.*

கருணாநிதியின் இக்குப்பைத்தொட்டிக் கட்டுரையை விமர்சித்து, துன்மதி கார்த்திகை (408) இதழில் தலேயங்கத்தில் அவரைக்குறித்துச் சில கேள்விகளேக் கேட்டிருக்கிறேன். நமது சங்ககாலத் தமிழர் சமயத்தையும், '' சங்கநூல்களும், கருணாநிதியும் '' எனும் கட்டுரையையும் பெற்றுக்கொண்டு மௌனமாயிருப்பதுபோலிராமல், இக்கேள்விகளுக்கு ஏதேனும் பதில் கூறினல் அதை ஸுதர்சனர் பதிலிலேயே விமர்சிப்போம். '' கருணாநிதியைக் குறித்துச் சில கேள்விகள் '' என்னும் இத் தலேயங்கத்தை ஸுதர்சனர் பதில் ஐந்தாவது சதகத்தின் அனுபந்தமாக இணேத்திருக்கிறேம்.

**ஜி. கோவிந்தராஜன், சென்னை 94.**

*61. 14—11—81 ஹிந்துவில் கடைசிப் பக்கத்தில் அச்சிட்டுள்ள உபந்யாஸத்தில் V. R. கல்யாணசுந்தர சாஸ்திரிகள் "(1) லக்ஷ்யம் ஒன்றேயாகையால் மதங்களிடையே முரண்பாடு இல்லை (2) பல தெய்வங்களை ஒப்புக்கொண்டாலும் 'பரம்பொருள் ஒன்று' என்னும் கொள்கையும் ஏற்கப்படுகிறது. ஒரு தெய்வத்தை உயர்த்திக் கூறினாலும் மற்ற தெய்வங்கள் தாழ்ந்தவை என்று பொருளல்ல. (3) அப்பயதீக்ஷிதர் சிவனை ஏற்றிக் கூறினாலும் விஷ்ணுவைத் தாழ்த்தியதில்லை" என்று கூறியிருக்கிறார். இவை சரியா ?*

நமது 'சங்கரரும் வைணவமும்' என்னும் நூலில் ப்ரதிபக்ஷியாயிருந்து விதண்டாவாதங்கள் செய்த வரஹூர் சாஸ்திரிகள் இப்படிப் பேசியிருப்பது வியப்பல்ல. "உலகங்கள் அனைத்தையும் படைத்தளித்தழிப்பவனாய், அனைத்துக்கும் அந்தர்யாமியாயிருப்பவனாய், குற்றங்களற்றவனாய், கல்யாண கு₃ணக்கடலாயிருக்கும் நாராயணனை உபாஸித்தால்தான் மோக்ஷம் கிடைக்கும். இப்பெருமைகளில்லாத மற்ற தெய்வங்களை உபாஸித்தால் அற்பமாய், நிலைநில்லாதவையான பலன்களே கிடைக்கும்." என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளும், ஆதி₃சங்கரபா₄ஷ்யங்களும் தெளிவாகப் பேசுகின்றன. இதற்கு முரணாக அப்பயதீக்ஷிதர் மனம்போனபடி த்ரிமூர்த்தி ஸாம்ய வாத₃த்தையும், ஐக்யவாத₃த்தையும், சிவபரத்வவாத₃த்தையும், உத்தீர்ண வாத₃த்தையும் தம் நூலில் செய்திருக்கிறார். ஆதி சங்கரரின் பா₄ஷ்யங்களுக்கு முரணாக அப்பயதீக்ஷிதரின் மதத்தைப் பின்பற்றும் வரஹூர் சாஸ்திரி போல்வார் ஒருபடி மேலேபோய் 'கருப்பு, காட்டேரி, ஐயப்பன், சிவன், சக்தி, குளுமாயி, கழுகாண்டி முதலான எல்லா தெய்வங்களும் ஒன்றுதான்' என்று பேசி வேத₃ஶாஸ்த்ரங்களுக்கும் ஆதி₃ சங்கரருக்கும் மஹத்தான த்₃ரோஹம் விளைக்கிறார்கள். அத்₃வைதத்தின் லக்ஷ்யம் ப்₃ரஹ்மமாகவே ஆவது. விஶிஷ்டாத்₃வைதத்தின் லக்ஷ்யம் பரப்₃ரஹ்மமான நாராயணனின் கிங்கரர்களாவது. இப்படி ஒவ்வொரு மதத்திற்கும் லக்ஷ்யம் வெவ்வேறாயிருப்பதால், எல்லா மதங்களுக்கும் லக்ஷ்யம்

ஒன்றே என்று கூறுவது முழுப்பொய். படைக்கப்படும் தெய்வங்களையும், அவர்களைப் படைத்தவனாக வேதங்கள் கூறும் தெய்வத்தையும் ஒன்றே என்று கூறுகிறார்கள். ஜகத்காரண மான ஸகுணப்ரஹ்மம் பொய் என்றே அத்வைதிகள் கூறியாக வேண்டும். அந்தப் பொய்யான ஸகுணப்ரஹ்மம் நாராயணனே என்று ஒப்புக்கொண்டார் ஆதிசங்கரர். இக்கால அத்வைதிகள் அதிலும் குழப்பத்தை விளைக்கிறார்கள். *ஶிவதத்வவிவேகம்*, *ஶிவார்க்கமணிதீபிகை* முதலான நூல்களில் அப்பயதீக்ஷிதர் விஷ்ணுத்வேஷ விஷத்தைக் கக்கியிருக்கிறார். இதைப் பெரும்பாலான ஜனங்கள் அறியமாட்டார்கள் என்னும் தைரி யத்தில் வரஹூர் சாஸ்திரி 'அப்பயதீக்ஷிதர் விஷ்ணுவைத் தாழ்த்தியதில்லை' என்று பச்சைப்பசும்பொய்யைக் கூறுகிறார்.

ரா. கோவிந்தராஜன், B. A. திருச்சி-4.

*62. 22—10—81 குமுதத்தில் 'சிதம்பரத்தில் நடராஜர் எங்கே?' என்னும் துணுக்கு வெளியிடப்பெற்றிருந்தது. அதில்— சிதம்பரம் ரயில்நிலயத்தில் தில்லை கோவிந்தராஜப்பெருமாள் கோவில் பற்றியும், காட்டுமன்னார்குடி வீரநாராயணப்பெருமாள் கோவில்பற்றியும் அறிவிப்புப் பலகைகள் இருக்கும்போது, உலகப் புகழ்பெற்ற சிதம்பரம் நடராஜர் கோவில் பற்றிய அறி விப்புப்பலகை இல்லை என்றும், இது வைணவர்களால் வேண்டும் என்றே செய்யப்பட்டது என்றும் குற்றம் சாட்டப்பட்டிருந்தது. விஷமத்தனமான இந்தத் துணுக்குக்குக் கீழ்க்கண்ட விளக்கத் தையும், சைவர்களின் விஷமத்தை வெளிப்படுத்தும் 'காவேரிப் பாலத்தில் ஸ்ரீரங்கம் எங்கே?' என்னும் துணுக்கையும் குமுதத் திற்கு அனுப்பி, அவற்றை வெளியிடும்படி கேட்டுக்கொண்டி ருந்தேன். குமுதம் அவற்றை இரண்டு மாதங்களாகியும் வெளியிடவில்லை. பொதுவாக சைவர்களின், குறிப்பாக குமுதத் தின் வைணவ விரோத மனப்பான்மையை வைணவவுலகம் அறியும்படி பின்வரும் விளக்கத்தையும், துணுக்குச் செய்தியை யும் ஸுதர்சனர் பதிலில் வெளியிட வேண்டுகிறேன்.*

**"சிதம்பரத்தில் நடராஜர் எங்கே" என்ற துணுக்குச் செய்திக்கு விளக்கம்**

சிதம்பரம் ரயில் நிலயத்தில் உள்ள அறிவிப்புப் பலகைகள் ரயில்வே நிர்வாகத்தினரால் அமைக்கப்படுபவை. அண்ணாமலை

நகரை நிறுவியவர்களும், தில்லை கோவிந்தராஜப் பெருமாள் கோவில், காட்டுமன்னார்குடி, வீரநாராயணப் பெருமாள், ஸ்ரீமந் நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் ஆலய நிர்வாகிகளும் வேண்டுகோள் விடுத்ததின் பேரில் அதிகமாகப் பிரசித்தியில்லாத அவைபற்றி ரயில்வே நிர்வாகத்தினர் அறிவிப்புப் பலகைகள் வைத்திருக்கின்றனர். சிதம்பரம் மிகப் பிரசித்திபெற்றது என்று கருதி சைவர்கள் அறிவிப்புப் பலகை வைக்க வேண்டுகோள் விடுக்கவில்லை. இதில் வைஷ்ணவர்கள் வேண்டுமென்று செய்வதற்கு என்ன இருக்கிறது. ரயில்வேயை வைஷ்ணவர்கள் நடத்துகிறார்களா? அல்லது அவர்கள் ரயில்வே நிர்வாகத்தில் பெரும்பான்மையாகவாவது இருக்கிறார்களா?

## ' துணுக்குச் செய்தி '

## "காவேரிப் பாலத்தில் ஸ்ரீரங்கம் எங்கே?"

திருச்சியையும், ஸ்ரீரங்கத்தையும் இணைக்கும் காவேரிப்பாலம் சில வருஷங்களுக்குள் அரசினரால் ஒரு கோடி ரூபாய் செலவில் அமைக்கப் பெற்றது. அதில் திருச்சிப்பக்கம் ஒரு முனையில் மலைக்கோட்டைகோவிலையும், ஸ்ரீரங்கத்துப்பக்கம் ஒரு முனையில் திருவானைக்கா ஆலயத்தையும் அமைத்திருக்கிறார்கள். மற்றும் இரு முனைகளில் அகில இந்திய ஆலயமான ஸ்ரீரங்கத்தையும், வரலாற்றுப் புகழ்மிக்க உறையூர் கமலவல்லித் தாயார் ஆலயத்தையும் அமைக்காமல் விட்டுவிட்டார்கள். இது அரசுத்துறையில் நிறைந்துள்ள சைவர்கள் வேண்டுமென்று செய்த செயல் என்று கூறுகிறார்கள். உண்மையா?

எவரையாவது சிண்டுமுடிந்துவிட்டு, பத்திரிகை விற்பனையை அதிகரிப்பதொன்றே குமுதத்தின் குறிக்கோள். "வைணவர்கள் மீது அபாண்டமாகக் குற்றஞ்சாட்டினால், லட்சக் கணக்கான சைவர்களுக்குப் பரமானந்தமாயிருக்கும். நமது பத்திரிகையின் விற்பனை மேலும் பல லட்சங்கள் அதிகரிக்கும்" என்னும் எண்ணத்தாலேயே குமுதம் இத்துணுக்கை வெளியிட்டிருக்கிறது. இதுபற்றிய உண்மை விளக்கத்தையும், காவேரிப் பாலத்தைப் பற்றிய உண்மையையும் வெளியிட்டால் சைவமஹாஜனங்களின் கடுங்கோபத்திற்கு இலக்காகிக் குமுதத்தின் விற்பனை பல லட்சங்கள் குறைந்துவிடும். ஆகையால் இவற்றை வெளியிடாததில் வியப்பில்லை. 'ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார்கோவில் ஆண்டி' என்பது பழமொழி. 'ஊருக்கு இளைத்தவன் வைணவன்' என்பது இன்று நாட்டில் நடைமுறையில் நிலவும் புதுமொழி.

திருமஞ்சனம் கண்ணன், ஆதம்பாக்கம், சென்னை-88.

*63. ஸமாச்ரயணகாலங்களில் ஆசார்யபுருஷர்கள், ஆசார்ய ஸம்பந்தம் பெற்ற சிஷ்யர்களுக்கு அவர்களுக்கு மனதில் நன்கு படும்படியாக வார்த்தை சொல்லி, "இனிமேல் நாங்களும் எங்கள் சந்ததியாரும் தேவதாந்தர பஜனம் பண்ணுவதில்லை" என்று அவர்களிடம் ப்ரமாணம் வாங்கிக்கொள்ளச் சொல்லி ஆசார்ய புருஷர்களுக்கு வேண்டுகோள் விடுக்கப் பிரார்த்திக்கிறேன்.*

நேரிலும், பத்திரிகை மூலமாகவும் பலமுறை எல்லா ஆசார்ய புருஷர்களுக்கும் வேண்டுகோள் விடுத்திருக்கிறேன். சில ஆசார்ய புருஷர்கள் இப்படி ப்ரதிஜ்ஞை வாங்கிக்கொள்ளுவதாகவும் அறிகிறேன். *ஶிஷ்யர்களில்* பெரும்பாலானவர்கள் பொதுவாழ்வில் சைவர்களின் த₃ாக்ஷிண்யத்திற்கு ஆட்படவேண்டியுள்ளது. அதனால் அவர்கள் தே₃வதாந்தர வைராக்₃யத்தைக் கடைப் பிடிக்க முடிவதில்லை. அத்தகைய *ஶிஷ்யர்களிடம்* த₃ாக்ஷிண்யத்தாலே ஆசார்யர்களிலும் (மட₂ாதி₄பதிகளிலுங்கூட) பலர் இவ்விஷயத்தை வலியுறுத்திச் சொல்ல முடிவதில்லை. *ஶிஷ்யர்க*ளின் ஆதரவிலேயே ஆசார்யபுருஷர்களின் தே₃ஹயாத்திரை நடக்கவேண்டிய இன்றுள்ள சூழ்நிலையில், ஆசார்யர்கள் இவ் விஷயத்தைச் சொன்னாலும் *ஶிஷ்யர்கள்* கேட்பார்களா என்பது சந்தேகமே.

டாக்டர் V. ஸ்ரீநிவாஸன், சென்னை-94.

*64. 1—12—81 தினமலர் நாளேட்டில் 'அண்ணாமலைக்கு அரோகரா' என்ற கட்டுரையில் 'அண்ணாமலை ஏற்பட்டவிபரம்' என்ற பகுதியில் மனசை கீரன் என்பவர் "பிரம்மாவின் மகன் விஷ்ணு; அப்பாவுக்கும் மகனுக்கும் போட்டி" என்றெல்லாம் உண்மைக்குப் புறம்பாக வரைந்து, அடிமுடிதேடிய கட்டுக்கதையை வெளியிட்டுள்ளார். பிரமன் விஷ்ணுவின் பிள்ளை என்பது வேதம் முதலாக ஔவையார் போன்ற சைவக் கவிகள் ஈருக அனைவரும் இசைந்த உண்மையாயிருக்க, அதையே மாற்ற முயலும் மோசடியை அம்பலப்படுத்தவேண்டுகிறேன்.*

"விஷ்ணுவினால் முதலில் படைக்கப்பட்டவன் பிரமன். அவனால் படைக்கப்பட்டவன் *ஶிவன்*" எனும் உண்மை வேத₃ங்கள், ஸ்ம்ருதிகள், இதிஹாஸபுராணங்கள், சங்ககாலம்

தொடங்கி வாழ்ந்த ஆயிரக்கணக்கான தமிழ்க்கவிகள், காளி தாஸன் முதலான ஆயிரக்கணக்கான வடமொழிக் கவிகளின் பாடல்கள் ஆகியவற்றில் காணக்கிடைக்கிறது. 'அண்ணு மலைக்கு அரோகரா' என்று கன்னத்தில் அறைந்துகொள்ளும் அறிவிலிகளுக்கு இவ்வுண்மை விளங்காமலிருப்பது வியப்பல்ல.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம். [65, 66 கேள்விகள்]

65. *'ஸ்ருஷ்டிக்கும்போது நாராயணனுக்குக் கரசரணாதி₃கள் இல்லை' என்று துர்மதி கார்த்திகை ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் ஸுத₃ர்சனர் பதிலுக்கு பதிலில் எழுதப்பட்டுள்ளது. இஃது உண்மையா?*

*''முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே''* [திருவாய் 3-2-1]. *'' ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கறுத்து ''* [திருப் பாவை 4] என்னும் பாசுரங்களில், ''ப₄க₃வான் ஜக₃த்காரணனாகும்போது கறுத்த திருமேனியை உடையவனாய் இருந்து கொண்டே உலகைப் படைக்கிறான்'' என்று தெளிவாகக் காட்டப்பட்டது. திருப்பாவை 4 வ்யாக்₂யானத்தில் ''(ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து) ஜக₃த்காரணபூ₄தனான வனுடைய வடிவுபோலே இருக்கவேணும். இந்நிர்தே₃ஶத்துக்குக் கருத்து என்னென்னில்? நெடுநாள் தன்பக்கலிலே ஸம்ஹ்ருத மாய்க்கிடந்த ஜக₃த்தை உண்டாக்குவதாக ஸங்கல்பித்தவாறே, பண்டுபோலன்றிக்கே கருவடைந்த பயிர்போலே நிறத்திலே வருவது ஒரு வேறுபாடு உண்டு; அத்தை நினைக்கிறார்கள்'' என்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தார். *''ஸமஸ்தா: ஶக்தயஶ்சைதா:''* [6-7-70] என்னும் ஸ்ரீவிஷ்ணுபுராண *ஶ்லோ*கத்தின் வ்யாக்₂யானத்தில் *'' அத₂ உக்தஶக்தித்ரயஸ்ய அஸ்த்ர பூ₄ஷணாதி₃ரூபேண நித்யாஶ்ரயபூ₄தம் ஜக₃தே₃ககாரணதயா உக்தம் ப₄க₃வத்₃ரூபம்; தஸ்ய ஶுபா₄ஶ்ரயத்வம் வக்துமாஹ — ஸமஸ்தா இதி ''* [இனிமேல் கீழ்ச்சொன்ன மூன்று *ஶ*க்திக ளுக்கும் அஸ்த்ரம், பூ₄ஷணம் முதலான உருவங்களில் எப் போதும் இருப்பிடமாயிருப்பதாய், உலகிற்கு ஒரே காரணமா யிருப்பதாகக் கூறப்படும் எம்பெருமானுடைய உருவம் யாதொன்றுண்டோ, அதற்கு *ஶு*பா₄*ஶ்*ரயத்வத்தைக் கூறுவ தற்கு 'ஸமஸ்தா:' என்னும் *ஶ்*லோகத்தைத் தொடங்குகிறார்.]

என்று எங்களாழ்வான் திவ்யமங்கள விக்ரஹவிஶிஷ்டனே ஜகத்காரணன் என்று நிர்ணயித்திருக்கிறார். ஆகையால் ப்ரஹ்மஸூத்ரம் 2—1—31 ல் ஸூத்ரம் பாஷ்யம் முதலானவற்றிலிருந்து "குயவன் தன் கைகால்கள் முதலானவைகளைக் கொண்டு சட்டி பானைகளைச் செய்வதுபோலே எம்பெருமான் கைகால்களைக்கொண்டு உலகைப் படைப்பதில்லை" என்று தேறுமேயொழிய, ஸ்ருஷ்டிக்கும்போது எம்பெருமானுக்குக் கரசரணாதிகள் இல்லை என்று தேறாது என விளங்குகிறது.

*66. 34-வது கேள்வியிலும், 'அத்வைத விஶிஷ்டாத்வைத மதங்கள் ஒன்றுதானு' 'காமகோடி பீடாதிபதிக்கு பகிரங்கக் கடிதம்' என்னும் அநுபந்தங்களிலும் காமகோடி பீடாதிபதி 'அத்வைதமும் விஶிஷ்டாத்வைதமும் ஒன்றே' என்று எழுதியிருந்ததின் பொய்ம்மையை அம்பலப்படுத்தியிருந்தீர்கள். இது பற்றி அத்வைதத் தலைவர்கள் எவரேனும் தங்கள் கருத்தைத் தெரிவித்திருக்கிறார்களா ?*

காமகோடி பீடாதிபதியின் 'சாதுர்மாஸ்ய ஸங்கல்ப வ்யாஸ பூஜோப(ஸம்)ஹார:' என்னும் வெளியீட்டை மதுரை சப்பாணி கோவில் தெருவிலிருக்கும் ப்ரஹ்மஸ்ரீ M. E. சங்கரநாராயண சர்மாவின்மூலம் ச்ருங்கேரி பீடாதிபதிகளுக்கு அனுப்பி, அவரது அபிப்ராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டிருந்தோம். ச்ருங்கேரி பீடாதிபதியின் அந்தரங்ககாரியதரிசி 19—9—81 தேதியிட்டு M. E. சங்கரநாராயண சர்மாவுக்கு எழுதிய கடிதத்தில் மதுரையில் ச்ருங்கேரி ஆஸ்தான வித்வானுக இருக்கும் ஸ்ரீசித்தநாகசுப்ரமணிய ஐயருக்கு ச்ருங்கேரி ஆசார்யாளின் ஸித்தாந்தம் நன்கு தெரியுமாதலால் அவரைக் கொண்டு எழுதுவிக்கும்படி நியமித்துள்ளார். ப்ரஹ்மஸ்ரீ சித்த நாகசுப்ரமணிய ஐயரும் இதுபற்றி விரிவான கட்டுரை ஒன்று எழுதி அனுப்பியிருக்கிறார். அதன் பகுதிகள் பின்வருமாறு—

ஸூக்ஷ்ம தர்சிகளுக்கு ஸ்ரீசங்கராசார்ய ராமாநுஜாசார்ய பாஷ்யங்களிலுள்ள வித்தியாஸங்கள் புலப்படுவதுடனல்லாமல் விவாதங்கள் புஸ்தக ரூபமாய் வெளிவந்துள்ளன. மேலே காட்டியுள்ள சாதுர்மாஸ்ய ஸங்கல்போபஸம்ஹாரத்தில் கடைசிப் பக்கத்தில் காட்டியுள்ள இரு ஆச்சார்யர்களின் பாஷ்ய வசனங்களிலேயே வித்யாஸங்களை எடுத்துக் காட்டலாம். மோக்ஷத்தின் ஸ்வரூபத்தை வெவ்வேறுக இருவர்களும் வர்ணிக்கிறார்கள். மோக்ஷத்தை அடையும் வழிகளையும்,

சாதனங்களையும் வெவ்வேறாக வர்ணிக்கிறார்கள். ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் நிர்குணமா — அனந்த கல்யாண குணங்களுடையதா என்பதிலும் வேற்றுமை காணப்படுகிறது. வேற்றுமைகள் இருக்கின்றன என்பதை மட்டும் மேல்காட்டியவிதம் கூறிவிட்டு விவாதாஸ்பதமானபடியால் விவரங்களை விஸ்தரிக்காமல் இத்துடன் விட்டுவிடுகிறேன். ஆனாலும் பிரசுரத்தின் கடைசிப் பக்கத்தில் ஒற்றுமை போலக் காட்டப்பட்ட பாஷ்ய வசனங்களை மட்டும் சற்று ஆராய்வதாக உத்தேசம். [இங்கு உள்ள விரிவான ஆராய்ச்சி இடமின்மையால் விடப்படுகிறது.] தானும், உபாஸ்யமான பிரம்மமும் வேறல்ல என அத்வைதிகட்கு உபதேசம். விசிஷ்டாத்வைதத்தில் தானுகிற ஜீவாத்மா பரமாத்மாவினது சரீரம் என்ற பாவனையில் உபாஸனை செய்யவேண்டியது என உபதேசம். இதைத்தான்—''ப்ரத்யகாத்மனோऽபி ஆத்மத்வாத் பரமாத்மந:, யதா ப்ரத்யகாத்மந: ஸ்வஶரீரம் ப்ரதி ஆத்மத்வாத்'' என்ற ஸ்ரீபாஷ்ய வசனங்கள் நிரூபிக்கின்றன. இதன் பயனை ''அவிபாகேந அஹம் ப்ரஹ்மாஸ்மி இதி அநுபவதி'' என்ற வசனத்தில் காட்டியிருக்கிறது. முக்தாத்மாக்கள் பரமாத்மாவின் ஸாம்யத்தைப் பரமபதத்திலடைந்து பரமாத்மாவின் வைபவத்தையும் பெற்று புனராவ்ருத்தியற்ற தன்மையுடன் விளங்குகிறார்களென்பது மோக்ஷஸ்வரூபமாக ஸ்ரீபாஷ்யத்தின் ஸித்தாந்தம். நீரும் நீரும் இரண்டறக் கலத்தல்போல பிரத்யகாத்மாவும் பிரம்மமும் ஒன்றாகுவது ஸ்ரீசங்கர பாஷ்யத்தின் மோக்ஷத்தின் நிலை. வைஷ்ணவர்களுக்கு ஸ்ரீராமானுஜாசார்யாளின் பாஷ்யம் ஸித்தாந்தம் என்றும், ஸ்மார்த்தர்களுக்கு ஸ்ரீசங்கரபாஷ்யம் ஸித்தாந்தம் எனவும் கருதி அவரவர்கள் ஒப்புக்கொள்ளவேண்டும். பரமாத்மா சிலரை வைஷ்ணவர்களாயும் சிலரை ஸ்மார்த்தர்களாயும் ஸ்ருஷ்டித்ததன் நோக்கமே அவரவர்கள் அந்தந்த ஸித்தாந்தத்தைப் பின்பற்றவேண்டும் என்பதற்காகவே! இவ்விதம் அவரவர்களுக்குக் காண்பிக்கப்பட்ட வழியைப் பின்பற்றி இடைவிடாமல் ப்ரீதியை முன்னிட்டு வழிபடுபவர்களுக்கு பரமாத்மா ''ததாமி புத்தியோகம் தம்'' [கீதை] என்று ப்ரதிக்ஞை செய்து நிறைவேற்றி வைக்கிறார்.

இது நியாயமும் நேர்மையுமான கருத்தாகும். காமகோடி பீடாதிபதியின் கருத்து உண்மைக்கு முரணானதாகும் என்பது வெளிப்படை. இதனால் தான் அவர் வாய்மூடி மௌனியாயுள்ளார்.

S. திருவேங்கடம், கரூர்.

*67. 15—12—81 ஹிந்துவில், விமர்சனம் செய்யப்பெற்ற குப்புசாமி சாஸ்திரியார் நூற்றாண்டு நினைவுமலரில் காலஞ்*

*சென்ற சாஸ்திரியார் "ஸ்ரீபா4ஷ்யம் முதலானவற்றில் எடுக்கப் பட்ட த்3ரமிட3பா4ஷ்யகாரர் திருமழிசையாழ்வாரே" என்று எழுதியிருப்பதும், காலஞ்சென்ற A. V. சுப்ரமணிய ஐயர் "திருமழிசையாழ்வாரே சிவவாக்கியர்" என்று குருபரம்பரை நூல் ஒன்றைத் தழுவி எழுதியிருப்பதும் பொருந்துமா?*

இவை அடியோடு பொருந்தமாட்டா. த்3ரமிட3பா4ஷ்ய காரர் ஸ்ரீஸூக்திகளிலிருந்து சா2ந்தோ3க்3யம் முதலான உபநிஷத்3 வாக்யங்களுக்கு அவர் பா4ஷ்யம் எழுதியிருக்கிறார் என்று தெளிவாக விளங்குகிறது. இதிலிருந்து த்3ரமிட3பா4ஷ்யகாரர் அந்தணர் குலத்தில் அவதரித்தவராக இருக்கவேண்டும் என்பது தெளிவு. திருமழிசையாழ்வாரோவெனில் "*குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன், நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்*" [திருச்சந்த 90] என்று தாம் நாலுவர்ணங்களிலும் பிறக்காதவர் என்றும், தமக்கு வேத3ஸம்ப3ந்த4ம் அடியோடு கிடையாது என்றும் தெளிவாகக் கூறியிருக்கிறார். பெரும்புலியூரில், வேத3வாக்யத்தைத் தாம் உச்சரிக்கலாகாது எனக்கருதி, வைதிகர்கள் ஓதும்போது விட்ட இடத்தைக் கருப்பு நெல்லை நகத்தால் கிழித்துக் காட்டினார் திருமழிசைப் பிரான் எனும் வரலாறும் உள்ளது. இத்திருமழிசையாழ்வாரையும், த்3ரமிட3பா4ஷ்யகாரரையும் ஒன்றெனக் கூறுவது நகைக்கத் தக்கதாயிருக்கிறது. திருமழிசையாழ்வார் சைவராயிருந்தபோது சிவவாக்கியர் என்று பெயர்பெற்றிருந்தார் என்று ஆறுயிரப்படி குருபரம்பரையில் இல்லை. பிற்பட்ட குருபரம்பரைகளிலிருப்பது நம்பத்தக்கதல்ல. இப்போது காணப்படும் சிவவாக்கியர் பாடல்களின் நடையை நோக்கினாலே அவை மிகவும் பிற்பட்டவை என்று விளங்கும். ஆராய்ச்சியாளர்களும் சிவவாக்கியரை 500 வருடங்களுக்குள் இருந்தவராக அறுதியிடுகிறார்கள். இந்த சிவவாக்கியர் தம்மைத் திருமழிசையாழ்வாராக அனைவரும் நினைக்கவேண்டும் என்றே சந்தவிருத்தத்தில் பாடல்கள் பாடி, திருச்சந்தவிருத்தத்திலிருந்து சில பாடல்களைத் திருடித் தம் நூலில் சேர்த்துக்கொண்டிருக்கிறார் என்பது வெளிப்படை. பிற்பட்ட குருபரம்பரை நூல்களை எழுதியவர்கள் இதுகண்டு மயங்கி, இருவரையும் ஒருவராக எழுதியிருப்பது பொருந்ாது.

K. கிருஷ்ணய்யங்கார், I.R.S. சென்னை 82.

***68. 17—1—82 இதயத்தில் 'தேவிதரிசனம்' கட்டுரையில் ஆதிலக்ஷ்மி கோவிலை விவரித்துவரும்போது,*** " ஆதிலட்சுமி என்பவள் ஆதிக்கும் ஆதியானவள். அவள் எம்பெருமானுக்கும் முந்தியவள். இதற்கு வைணவர்கள் அணியும் திருமண் ஸ்ரீசூர்ணமே சான்று. திருமண்-பெருமாள்: நடுவிலுள்ள ஸ்ரீசூரணம்—தாயார். நெற்றியில் திருமண் இடும்போது ஸ்ரீசூரணம் இடாமல் வெறும் திருமண் மட்டும் இடுவதில்லை. அப்படி இட்டால் அமங்கலம். ஆனால், அதே சமயம், திருமண் இடாமல் வெறும் ஸ்ரீசூரணம் மட்டும் இட்டால் போதும்! அது தாயார். அதன்படி பெருமாளோடு தாயாரும் இருந்தால் உத்தமம். பெருமாள் இல்லாமல் தாயாரை வணங்கினாலும் போதுமானது. தாயார்இன்றி பெருமாளை மட்டும் போற்றிப்பயனில்லை! இதுதான் தத்துவம்! முதலையின் பிடியில் சிக்கிய கஜேந்திரன், 'ஆதிமூலமே!' என்று கூவினானே, யார் அந்த ஆதிமூலம்? 'உண்மையில் அந்த ஆதிமூலம் யார்?' என்று தேவாதி தேவர்களுக்கும், மும்மூர்த்திகளுக்குமே முதலில் புரியவில்லை. கஜேந்திரன் யாரை அழைக்கிறான் என்று தெரியாமல், சிவன் முதலில் 'நான் இல்லை' என்று கூறிவிட்டாராம். பிரம்மாவும் 'நான் இல்லை' என்று கூறிவிட்டார். மகாவிஷ்ணுகூட, 'அந்த ஆதிமூலம் நான் இல்லை!' என்று கூறிவிட்டாராம். அப்போது 'நான் இருக்கிறேன். நான் தான் அந்த ஆதிமூலம்!' என்று பெருமாள் கையிலிருந்த சக்கரம் புறப்பட்டதாம்! அந்தச் சக்கரம்தான் ஸ்ரீசக்கரம்... அதாவது லட்சுமி! அவள்தான் பெருமாளுக்கும் ஆதியானவள். அவள்தான் போய் முதலையின் வாயைக் கிழித்து அதற்கு மோட்சம் அளித்துவிட்டு, கஜேந்திரனுக்குத் துன்பத்திலிருந்து விடுதலையும் அளித்தாள். அந்த ஆதிக்கும் ஆதியான லட்சுமிதான் 'ஆதிலட்சுமி!' " ***என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு ஏதாவது ஆதாரம் உண்டா?***

வேத₃ம், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் முதலானவற்றில் இதற்கு எந்த ஆத₄ாரமும் இல்லை. மஹாலக்ஷ்மியின் ஸத்தா ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி முதலானவை அனைத்துக்கும் ஸ்ரீமந்நாராயணனே காரணமாவான் என்று புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம் முதலான வேத₃ப₄ாக₃ங்களே நிலைநாட்டியிருக்கின்றன. ஸ்ரீஸூக்த வ்யாக்₂யானத்தில் இதை நாம் விரிவாக விளக்கியிருக்கிறோம். எல்லா தே₃வர்களுக்கும், உலகனைத்துக்கும் நாரணனே காரணன் என்பதை வேத₃ங்களையும்,

ஸ்ம்ருதிகளையுங்கொண்டு சுமார் 2000 பக்கங்களில் விஷ்ணு சித்த விஜயத்தில் நாம் நிலைநாட்டியிருக்கிறோம். மேலும் பல்லாயிரக்கணக்கான பக்கங்களில் இதிஹாஸபுராணங்களைக் கொண்டு நிலைநாட்டப்போகிறோம். இவற்றில் எதையும் அறியாதவர்களும், எதற்கும் பதில்கூற இயலாதவர்களுமான நம் நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைக் கட்டுரையாளர்கள் ஓர் ஆதா₄ரமும் காட்டாமல் முழுப்பொய்களைக் கூசாமல் எழுதி வருகிறார்கள். இதுபற்றி இதயம் ஆசிரியருக்கு 'இவ்விஷயத்தில் ஆதா₄ரம் என்ன' என்று கேட்டு 16—1—82 அன்று கடிதம் எழுதியிருக்கிறோம். ஆதா₄ரம் எதுவும் இல்லாமையாலே, 406 இதழில் இவருக்கு நாம் எழுதிய பகிரங்கக் கடிதத்திற்கு மௌனம் சாதித்ததுபோலே இதற்கும் மௌனம் சாதிக்கத் தான் போகிறார். இத்தகைய மோசடிகளை இவர்கள் என்று தான் நிறுத்தப்போகிறார்களோ தெரியவில்லை. க₃ஜேந்த்₃ர மோக்ஷவ்ருத்தாந்தம் பா₄ரத தேசமெங்கும் பரவியிருக்கும் ஸ்ரீமத்₃பா₄க₃வத மஹாபுராணத்தில் 8-வது ஸ்கந்த₄த்தில் 2,3,4 அத்தியாயங்களில் விரிவாக வர்ணிக்கப்பட்டுள்ளது. அதில் பிரமன், சிவன் முதலான தே₃வர்கள் ஆதிமூலம் அல்லராகையால் க₃ஜேந்த்₃ரன் அழைத்தபோது அவர்கள் வரவில்லை என்றும், ஸர்வஜக₃த்காரணனான ஹரியே வந்தான் [பா₄க₃வதம் 8-3-30] என்றும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. திருமண், ஸ்ரீசூர்ணம்பற்றி எழுதியிருப்பதும் நிராதா₄ரமான அபத்தப் பேச்சாகும். திருமண் இல்லாமல் ஸ்ரீசூர்ணம் மாத்திரம் இடலாம் என்று எந்த ஶாஸ்த்ரவசனமும் கூறவில்லை. பிராட்டியை முன்னிடாமல் பெருமாளைப் பற்றிய சூர்ப்பணகை காது மூக்கு அறுபட்டாள் என்றும், பெருமாளைவிட்டுப் பிரித்துப் பிராட்டியை மட்டும் அடையநினைத்த இராவணன் தலையையே இழந்தான் என்றும் ஸ்ரீராமாயணம் காட்டிற்று. ஒரு தலைமுறைக்கு முன் திருமண் இல்லாமல் ஸ்ரீசூர்ணம் மாத்திரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் எவரும் இடவேமாட்டார்கள். சமீப காலத்தில் 'நாமம் போட்டுவிட்டான்' '111' என்று அவைஷ்ணவர்கள் இகழ்வதற்கு பயந்து பலர் திருமண் இட்டுக்கொள்ளாமலிருப்பதுபோலே, தாங்கள் தென்கலையா வடகலையா என்று தெரிந்தால் லௌகிகத்தில் பல நஷ்டங்கள் ஏற்படும் என்று பயந்து சிலர் ஸ்ரீசூர்ணம் மாத்திரம் [இட்டுக்கொள்

கிறார்கள். இதற்கு இப்படி ஓர் அர்த்தம் கற்பிப்பது அனர்த்தமேயாகும். இதயம் ஆசிரியரிடமிருந்து ஏதேனும் ஆதாரம் வந்தால் அதை அடுத்த இதழில் விமர்சிப்போம்.

பண்டாரி சௌரிராஜய்யங்கார், ஸ்ரீரங்கம்.

*69. 24—1—82 இதயம் தேவி தரிசனத்தில் "நம் இன் யானுசாரத்துக்கு ஏற்ப தாசிகளைத் தருவதும்கூட லட்சுமியின் அருள்தான்" என்று ஸ்ரீஸூக்தத்திலிருப்பதாக எழுதியிருக்கிறது. இது உண்மையா ?*

"காவோ தாஸ்யோ ஸ்வாந் விந்தேயம் புருஷாநஹம்" என்ற ஸ்ரீஸூக்தத்தில் புருஷாப்தம் ஆண் வேலைக்காரர் களையும், தாஸீப்தம் பெண் வேலைக்காரிகளையும் குறிக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளாமல் "*மத்ஸ்யம் மத்யம் ச மாம்ஸம் ச முத்ரா மைதுநமேவ ச மகாரபஞ்சகம்*" என்கிற சாக்த நூல் வாஸனையாலே எழுதியதாகும் இது. தாமஸப் பலன்களைக் கொடுத்துக் கெடுக்கமாட்டாள் லக்ஷ்மி.

S. K. ராமராஜன், சென்னை-4.
[திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலில் ஆத்திகநூல் பிரசாரகர்.]

*70. அடியேன் கேட்ட 44-வது கேள்வியைப் புறக் கண்ணிலும் கோளாறினால் காமராஜர் என்பவர் கேட்டதாக மயங்கி, 'ஸ்ரீராமானுஜரும் திருப்பாவைஜீயரும்' என்னும் தலைப்பில், 'திரு. காமராஜர் அவர்களுக்கு' என்று அடியேனைக் குறிப்பிட்டு அபத்தக்களஞ்சியமாக அக்னிஹோத்ரி ஐந்து பக்கம் அச்சிட்டு, அதில் தேவரீரையும், ஜகதாசார்ய ஸிம்ஹாஸனாதிபதி ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியையும், பூர்வாசார்யர்களையும், ஸ்ரீவைஷ்ணவத்தையும் வாய்க்கு வந்தபடி நிந்தித்து, விலாசமில்லாதவர் ஒருவர் பெயரைக் கடைசியில் இங்கால் எழுதி ஒரு சிலருக்கு மாத்திரம் அனுப்பியிருப்பதைக் கண்ணுற்றேன். இதுபற்றி ஏதாவது விளக்கம் எழுதவேண்டுமானால் எழுதப் பிரார்த்திக்கிறேன்.*

ஸுதர்சனர்பதிலில் இதுவரையில் சுமார் 470 வினாக்களுக்கு பதில் எழுதியிருக்கிறோம். 'ஸுதர்சனர்பதில் அறிவுக்கு விருந்து' என்று தினமணிசுடர் பத்திரிகை பாராட்டிற்று. இவற்றைப் படிக்கும் பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் கடிதம் மூலமாகவும், நேரிலும் இவற்றைத் தினந்தோறும் பாராட்டிவருகிறார்கள். 'கீதாசார்யன்' பத்திரிகையும் நமது கேள்விபதில் பகுதியை

வெளியிடத் தொடங்கியிருப்பதிலிருந்து ஸுதர்சனர்பதிலுக்கு ஸ்ரீவைஷ்ணவவுலகில் எத்தகைய வரவேற்பு உள்ளது என்று விளங்கும். இக்கேள்வி பதில்களில் நாம் ஒரு நியமம் வைத்துக்கொண்டிருக்கிறோம். பிரபலமான பத்திரிகைகளிலோ நூல்களிலோ பிரபலமானவர்கள் ஆத்திகவிஷயங்களைப்பற்றித் தவறாக எழுதினால் அதை உடனுக்குடன் கண்டித்து உண்மையை வெளிப்படுத்துவது என்பதே அந்த நியமம். இதுவரை வெளிவந்துள்ள கேள்விகளில் காமகோடி ச்ருங்கேரி சங்கராசார்யர்கள், கிருபானந்தவாரியார், கருணாநிதி முதலானவர்களாலும், குமுதம், விகடன், இதயம் முதலான பத்திரிகைகளிலும் பிரசாரம் செய்யப்பட்ட பல விஷயங்களுக்கு மறுப்பு எழுதியிருக்கிறோம். எவராலும் இன்றளவும் அவற்றுக்கு பதில் எழுதமுடியவில்லை. நமது மறுப்பைப் பெற்ற மதுரை ஆதீனம் அவர்களும் அதைப் பாராட்டினார்; ஸ்ரீமதழகியசிங்கரும் 'ஸுதர்சனர் நிர்தாக்ஷிண்யமாக சரியான பதிலைக் கூறுவார்' என்று மிகுந்த நேர்மையுடன் பாராட்டினார். இந்த அக்னிஹோத்ரியின் பல அபத்தப் பேச்சுக்கள் ஏற்கனவே ஸுதர்சனர் பதில்களில் பலமுறை மறுக்கப்பெற்றுள்ளன. அப்போதெல்லாம் வாய்மூடி மௌனியாயிருந்த இவர் இப்போது நஜனின் புத்தகத்தில் பரம அபத்தமான ஓர் ஆராய்ச்சியை வெளியிட்டு, அதை நஜன் அவர்களும் பரம அபத்தம் என ஒப்புக்கொண்டதைப் பார்த்துக் கடுங்கோபங்கொண்டு, இந்த அநாமதேயத் திட்டுச் சுவடியை எழுதியிருக்கிறார். விலாசமில்லாமல் எழுதப்படும் அநாமதேயச் சுவடிகளுக்கு நாம் பதில் எழுதுவது கிடையாது. தைர்யமும் நேர்மையும் இருந்தால், இவர் தமது ஆராய்ச்சிகளை ஓர் கட்டுரையாக எழுதி, தமக்கு வேண்டியவர்கள் நிறைந்த ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகா போன்ற பத்திரிகைகளில் வெளியிடட்டும். அப்போது தென்கலை வடகலை என்னும் வாசியில்லாமல் வைஷ்ணவவுலகம் முழுவதும் இவரை மறுத்து, இவரது கொள்கைகளைச் சின்னபின்னமாக்குவதைக் காண்பார். இது செய்யத் துணிவில்லாமல் அநாமதேயச் சுவடிகளையும், திட்டுக் கடிதங்களையும் எழுதினால் நாம் அவற்றைக் காற்கடைக் கொள்வோம்.

நாம் 31—12—81 அன்று சென்னையில் ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியின் திருப்பாவை உபந்யாஸகோஷ்டியில்

அந்வயிக்கும் பேறுபெற்ருேம்." அங்கு அக்னிஹோத்ரி எழுதிய அநாமதேயச் சுவடியை மறுத்து, திருவல்லிக்கேணி G. ராமாநுஜாசார்யஸ்வாமி எழுதிய 'ஆஸ்திக நாஸ்திகசிக்ஷணம்' என்னும் நூல் வெளியிடப்பெற்று, பலராலும் பாராட்டப் பெற்றது. திருக்குடந்தை ஸ்வாமி ஒருவர் 'அக்னிஹோத்ரி தம் அநாமதேயச் சுவடியை 100 காபிகளே அச்சிட்டிருக்கிருர் என்றும், அதை மதிப்பார் எவருமில்லை என்றும், அதன் கடைசி பாரா 'காமகோடி சங்கராச்சார்யரிடம் கைக்கூலி வாங்கும் இவரே அதை அச்சிட்டவர்' என்று விளக்குகிறது என்றும் கூறினர். இப்படி ஏற்கனவே அடிக்கப்பட்டு, செத்தபாம்பாகியிருக்கும் இந்த அநாமதேயச் சுவடியை மறு படியும் அடிக்கவேண்டிய அவசியமும் இல்லை.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-6.

*71. சென்ற மாத அமுதசுரபியில் "ஒவ்வொரு மனிதனுக்கும் ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பிராணியும் ஒவ்வொரு இந்திரியத்தின் மூலமாக மரணத்தை அடைகிறது. அப்படியிருக்க, ஐந்து இந்திரியங்களும் சேர்ந்திருக்கும் மனிதனின் நிலையைச் சொல்லவேண்டுமோ?" என்று காமகோடி சிறிய பீடாதிபதி எழுதியிருக்கிருர். பிராணிகளுக்கு ஐந்து இந்திரியங்கள் கிடையாதா?*

நமக்குப் போலே பிராணிகளுக்கும் செவி வாய் கண் மூக்கு உடல் (த்வக்) என்னும் ஐந்து இந்த்ரியங்களும் இருப்பதும் அவை செயல்படுவதும் உண்டு என்பது சிறுபிள்ளைகளுக்கும் தெரியும். அப்படியிருக்க, ஒரு பீடாதிபதி 'பிராணிகளுக்கு ஐந்து இந்திரியங்களும் சேர்ந்து இல்லை' என்று எழுதுவதையும், அதை ஓர் பத்திரிகை வெளியிடுவதையுங்கண்டு அழுவதா அல்லது சிரிப்பதா என்று நமக்கு விளங்கவில்லை.

இரா. ராஜகோபாலாச்சாரி, தமிழ்ப் பேராசிரியர், காரைக்கால்.

*72. "ஜ்யேஷ்டா தேவி வழிபாடு" என்ருல் என்ன? நம் நாட்டில் அவ்வழிபாடு எப்போது துவங்கியது?—விளக்கியருளப் பிரார்த்திக்கிறேன்.*

பாற்கடலைக் கடையும்போது மங்களமே உருவெடுத்த ஸ்ரீதேவி தோன்றுவதற்கு முன்னே, அமங்களமே உருவெடுத்த

ஒரு தேவி தோன்றினள் என்று புராணங்கள் கூறுகின்றன. ஸ்ரீதேவிக்கு முன் தோன்றியவளாகையாலே இவளை 'ஜ்யேஷ்டா' (மூத்தவள்) என்று வடமொழியிலும், 'மூதேவி' (மூத்ததேவி) என்று தமிழிலும் குறிக்கிறார்கள். வேதத்திலும் *"க்ஷுத் பிபாஸாம் மலாம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம் நாசயாம்யஹம்"* [ஸ்ரீஸூக்தம்] [பசி தாஹமே வடிவெடுத்தவளும், மலஸ்வருபிணியாயிருப்பவளும், செல்வத்துக்கு எதிர்த்தட்டான தாரித்ர்ய ஸ்வருபிணியுமான ஜ்யேஷ்டையை (மூத்தவளை) நான் அழிக்கிறேன்] என்று ஸ்ரீதேவியின் அருளைக்கொண்டு மூதேவியை விரட்டவேண்டும் என்று காட்டப்பட்டது. ஆகையால் இவள் வழிபடத்தக்கவள் அல்லள் என்பது வெளிப்படை. ஆனால் மூடர்கள் நிறைந்த இவ்வுலகில் இவளையும் சிலர் வழி படத் தொடங்கியிருக்கிறார்கள் என்பது சில சிவன் கோவில்களில் இவளுடைய உருவம் அமைக்கப்பட்டிருப்பதிலிருந்து விளங்குகிறது. எம்பெருமானைத் தவிர வேறு எந்த தெய்வத்தைப் பூஜித்தாலும் அவர்களிடமிருந்து மோக்ஷத்தைப் பெறமுடியாதாகையாலே அப்பூஜை மூதேவியைப் பூஜித்ததை ஒக்கும் என்பதை *"கேட்டிரே நம்பிமீர்காள்! கருடவாகனனும் நிற்க, சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே"* [திருமாலை 10] என்று தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச் செய்தார். ஆகையால் ஆயிரக்கணக்கான வருஷங்களாக முட்டாள்கள் மூதேவியையும் வழிபட்டுக்கொண்டுதான் இருந்திருக்கிறார்கள் என்று விளங்குகிறது.

K. V. வரதன், சென்னை-53. [73—76 கேள்விகள்]

*73. புத்ரபாக்கியம் இல்லாதவர்கள் 'புத்' என்னும் நரகில் விழுவார்கள் என்று இதிஹாஸபுராணங்கள் கூறுவதாகச் சொல்லுகிறார்கள். பிரபன்னர்கள் மோக்ஷம் அடைவர் என்பதோடு இது முரணுகிறதே?*

*'ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி"* [ கீதை 18-66 ] [ பிரபந்நனை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன் ] என்று கீதாசரமச்லோகத்தில் கண்ணன் ப்ரபந்நனுக்கு விடுவிப்பதாகச் சொன்ன ஸர்வபாபங்களில் 'புத்' என்னும் நரகத்தை விளைக்கும் பாபமும் சேர்ந்ததாகையால் முரணில்லை.

*74. எம்பெருமான் இங்கு அவதரித்தபோது ஸ்ரீவைகுண்டத்தில் இல்லையா? இருந்தார் என்றால் ராவணவதத்திற்குப் பிறகு தேவர்கள் ஸ்ரீவைகுண்டத்திற்கு எழுந்தருளப் பிரார்த்தித்ததும், கடைசியில் ஸ்ரீவைகுண்டத்திற்கு எழுந்தருளியதும் எப்படிப் பொருந்தும்?*

வ்யூஹம், விப₄வம் முதலான அவதாரமூர்த்திகள் மூலமூர்த்தியிலிருந்து பிரிந்து வந்த மூர்த்திகளேயாம். மறுபடியும் பரமபத₃த்திற்கு எழுந்தருளும்போது அவதாரமூர்த்திகள் மூலமூர்த்தியோடு ஒன்றுசேருகின்றனர். தன் இச்சையாலேயே கணக்கற்ற உருவங்களை எடுத்துக்கொள்ளும் எம்பெருமான் விஷயத்தில் இத்தகைய முரண்பாடுகள் ஏற்படமாட்டா.

*75. ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமண்காப்புக்கு அடியிலேயோ, மேலேயோ பஸ்மத்தை இடலாமா?*

ஸ்ரீவைஷ்ணவன் ப₄ஸ்மத்தை உடம்பில் எங்கும் இடலாகாது. வைஷ்ணவ ஹோமங்கள் சிலவற்றில் இட்டுக்கொள்வது விதிவிலக்கு.

*76. அமரபாரதி (ஆசிரியர் ரா. வீழிநாதன்) பத்திரிகை டிஸம்பர் 1980 இதழில் பக்கம் 6-ல் 'நலம் பயக்கும் நாள் கிழமைகள்' என்ற தலைப்பில் காஞ்சீ சிறிய பீடாதிபதி "ராம பிரானையே தன்னுடைய ஸாஹஸங்களினால் தாடகை மயக்கி, பிரமிக்கச் செய்கிறாள்" என்று எழுதியிருக்கிறார். பெரிய பீடாதிபதி முதலான மற்றும் பலர் இவ்விதழில் எழுதியுள்ள கட்டுரைகளில் மற்றும் பல விஷ்ணுதூஷணப் பொய்க்கதைகள் இடம்பெற்றுள்ளன. இவர்கள் சைவ வைஷ்ணவ சமரசம் பேசுவது எப்படிப் பொருந்தும்?*

சிறிய பீடாதி₄பதிக்கு ராமாயணம் தெரியாது என்று ஏற்கனவே நாம் பலமுறை எழுதியிருப்பதை இந்த 'அமரபாரதி' கூற்றும் வலியுறுத்துகிறது. காமகோடி பீடாதி₄பதிகளும்; அவருடைய ஶிஷ்யர்களும் பொதுமக்கள் அனைவரும் படிக்கும் பொதுஜனப் பத்திரிகைகளிலேயே சமரசமும் பேசிக்கொண்டு நூற்றுக்கணக்கான விஷ்ணு வைஷ்ணவ த்₃வேஷப்ரசாரங்களையும் செய்து ஸுதர்சனர்பதிலில் கண்டிக்கப் பெற்றுள்ளனர். அப்படியிருக்க, பெரும்பாலும் அத்₃வைதிகளும் சைவர்களுமே

படிக்கும் அமரபாரதிபோன்ற பத்திரிகைகளில் இத்தகைய கட்டுரைகள் வெளிவருவதில் வியப்பில்லை. தங்களைப் போன்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் இவைகளைக் கண்ணெடுத்துப் பார்ப்பதும் தகாது.

T. T. வரதராஜன், சென்னை-29. (கேள்வி 77, 78)

*77. ஆசார்ய வம்சத்தில் பிறக்காத சில ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்கள் பெயரோடு 'ஆசார்யர்' என்னும் அடைமொழியைச் சேர்த்துக் கொள்வது பொருந்துமா?*

அவர்களிடம் ஜ்ஞானம், அநுஷ்டானம் முதலான பெருமைகளைப் பார்த்து ஸ்ரீவைஷ்ணவர்கள் பலர் 'ஆசார்யர்' என்னும் பட்டத்தை அவர்களுக்கு அளித்துவிடுகிறார்கள். ஆகவே அவர்களும் அதற்கு இசைய நேருகிறது. இதில் தவறில்லை. அப்படியல்லாமல், ஆசார்ய வம்சத்தில் பிறவாதவர்கள் தங்களுக்குத் தாங்களே 'ஆசார்யர்' என்னும் பட்டத்தைச் சூட்டிக்கொள்வது சரியல்ல.

*78. பலநிறவண்ணங்களைப் படைத்தவன் இறைவன். ஸௌந்தர்யம் பொருந்தியவன். தேஜோமயமாக விளங்கும் அவன் 'கருநிற'த்தைத் தன் நிறமாகக் கொண்டதேன்?*

எம்பெருமானுடைய நிறம் காக்கையுடையது போன்ற கருநிறமல்ல. பூவை காயா காவி மலர்கள், கடல், வான், முகில், பச்சைமாமலை முதலானவை போன்ற தேஜோமயமான கருநிறமே எம்பெருமானுடையது. ஸகலதாபங்களையும் ஆற்றி, கண்டார் கண்களைக் குளிர வைக்கும் இந்நிறத்தை எம்பெருமான் தன் திருமேனி நிறமாகக்கொண்டான். பீதாம்பரம் திருவாபரணங்களின் சேர்த்தியாலும், *"செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரை அடிக்கள்"* [திருவாய் 2-5-1] எனப்பட்ட திவ்யாவயவ ஶோபையாலும், ஹிரண்யவர்ணையான பிராட்டியின் சேர்த்தியாலும் வர்ணச்சேர்த்தி அழகு பெற்ற இத்திருமேனி மின்னலோடு கூடிய நீலமேகம்போலே பிரகாசிக்கின்றது என்னும் விஷயத்தை *"நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா"* [தை-நா 11] *"நீலமுண்ட மின்னன்ன மேனிப்பெருமான்"* [திருவிருத்தம் 29] என்று வடமொழி தென்மொழி மறைகள் காட்டின.

K. A. தேவராஜன், A.C.A., சென்னை-1 [79 to 84 கேள்விகள்]

*79. ஆசார்ய வம்சத்தில் பிறந்தும் திருப்பாவை முப்பது பாசுரங்கூட தெரியாமல் சபரிமலை போன்ற தேவதாந்தரங்கள் குடியிருக்கும் கோயில்களுக்குச் செல்பவர்களை ஏனைய ஸ்ரீவைஷ்ண வர்கள் மதிக்கவேண்டுமா? பின்பற்றவும் தகுமா?*

இத்தகையவர்கள் மதிக்கவும், பின்பற்றவும் தகாதவர்கள் என்பது வெளிப்படை.

*80. ஆசார்ய பரம்பரையில் பிறந்த பெரும்பாலான இளைஞர்கள் கிருப் வைத்துக்கொண்டு கேவலம் லௌகிகர்களாய் இருந்தபோதிலும் இவர்கள் பிறப்பால் மட்டும் உயர்ந்தவர்கள் என்று வைணவ சமுதாயம் இவர்களைப் போற்ற வேண்டுமா?*

ஒழுக்கமில்லாதவர்கள் ஆசார்யவம்ஶத்தில் பிறந்ததால் மட்டும் போற்றத்தக்கவர்களாகிவிடமாட்டார்கள். இது எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஒக்கும். இக்காலத்தில் பலவிதமான லௌகிக நிர்ப்பந்தங்களால் பலர் கிராப் வைத்துக்கொண்டு விட்டார்கள். அதை ஓர் ஒழுக்கக்குறைவு என்று நினைக்கும் எண்ணமும் சமூகத்தில் குறைந்துவிட்டது. கிராப் வைத்துக் கொண்டாலும் ஊர்த்வபுண்ட்ரம் தரித்து, மறந்தும் புறந் தொழாதவர்களாயிருந்தால் அவர்கள் கொண்டாடத்தக்கவர் களே. கிராப் வைத்துக்கொள்ளும் ஆசார்யபுருஷர்களிடம் ஸமாஶ்ரயணம் செய்துகொள்வதில்லை என்னும் நியமம் இன் றும் பெரும்பாலும் பின்பற்றப்படுகிறது. புறந்தொழாமை யில்லாத ஆசார்யபுருஷர்களிடத்திலும் ஸமாஶ்ரயணம் செய்து கொள்ளக்கூடாது என்னும் நியமம் அவசியம் கைக்கொள்ளத் தக்கது. இது சிலரால் கைக்கொள்ளப்படாமல் இருப்பது மிகவும் வருந்தத்தக்கது.

*81. திவ்ய தேசங்கள் பல அவலநிலையில் இருப்பதற்குக் காரணம் என்ன?*

பெரும்பாலும் கிராமங்களைவிட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் நகரங்களுக்குச் சென்றுவிட்டார்கள். திருவாய்மொழியில் 'உண்ணுஞ்சோறு' [6-7-1] ஈடு வ்யாக்யானத்திலுள்ள—

"அநந்தாழ்வான் சோழகுலாந்தகனிலே க்ருஷி பண்ணியிருக்கிற ஒரு ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டு,'உம்முடைய ஊர் எது?' என்று கேட்க, 'என் ஊர் திருக்கோளூர்' என்ன, 'அங்கு நின்றும் போந்ததென்?' என்ன, 'தே₂ஹயாத்ரை நடவாமே போந்தேன்' என்ன, 'அவ்வூரில் கழுதையை மேய்த்து ஜீவிக்கமாட்டிற்றிலேயோ? நிலைநின்ற ஜீவனத்தை (வாழ்வை) விட்டுப்போந்தாயாகாதே!' என்றருளும்" என்னும் ஐதிஹ்யத்தில் சொன்ன அறிவுரையை ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம் பின்பற்றாமல் போனதாலேயே கிராமங்களிலிருக்கும் பல திவ்யதேசங்கள் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்₃தி₄யில்லாமல் அவலநிலையிலிருக்கின்றன.

*82. இன்று பாரதத்தில் எங்கு சென்றாலும் பெருந்திரளாக மக்கள் வெள்ளம் ச்ருங்கேரி, காமகோடி சங்கராசார்யர்களை வரவேற்று வழிபடுகிறார்கள். இதற்கு நிகராக வைணவப் பெருந் தலைவர் இன்று எவரேனும் உண்டா? அப்படி இல்லாமைக்குக் காரணம் என்ன?*

அத்₃வைத பீட₂ாதி₄பதிகள் இன்று அத்₃வைத மதத்தை விசேஷமாக ப்ரசாரம் செய்வதில்லை. "எல்லா தெய்வங்களும் ஒன்று; எந்த தெய்வத்தையும் வழிபடலாம்; எம்மதமும் சம்மதம்" எனும் கொள்கைகளைப் பிரசாரம் செய்யத்தொடங்கி விட்டார்கள். இது பாமரஜனங்களுக்கும், அந்த ஜனங்களிடையே செல்வாக்குப்பெற்ற பத்திரிகைகளுக்கும், அரசியல் வாதிகளுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஸங்கீதம் சினிமா முதலானவற்றைத் தொழிலாகக் கொண்ட கலைஞர்களுக்கும் உகந்ததாகையாலே, அப்பீட₂ாதி₄பதிகள் மக்களிடையே புகழடைவது மிகவும் எளிதாயிருக்கிறது. வேத₃சாஸ்த்ரங்களில் காணப்படும் "ஆத்மா மோக்ஷமடைவதற்குப் பரம்பொருளான நாராயணனையே சரணமடையவேண்டும்" என்னும் உண்மையைப் பிரசாரம் செய்யக்கடமைப்பட்டவர்களாயிருக்கிறார்கள் ஸ்ரீவைஷ்ணவ மதத்தலைவர்கள். இக்கொள்கை பாமரமக்களுக்கும், அவர்களை நடத்திச்செல்லும் முற்கூறிய பத்திரிகை முதலானவற்றுக்கும் ஏற்காது. ஆகையால், அத்₃வைத பீட₂ாதி₄பதிகளுக்கு உள்ள ப₄க்தர்களின் கூட்டம் வைணவப் பெருந்தலைவர்களுக்கு ஏற்படுவது அரிதே. எம்பெருமானாரைப் போன்ற தேஜோவிசேஷமுள்ள மஹா

புருஷர்கள் அவதரித்து, பொதுமக்களைக் கவர்ந்து, வைணவ ப்ரசாரம் விஶேஷமாகச் செய்யவேண்டும் என்று நாம் எம்பெருமானைப் ப்ரார்த்திப்போமாக. இவ்விதழில் (411) தலையங்கத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள பாஞ்சஜன்யப் பேரியக்கத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் நூற்றுக்கணக்கான இடங்க ளில் தோற்றுவித்து வளர்த்தால், வைணவம் ஓரளவுக்கு வளரலாம்.

*83. நான்கு மடாதிபதிகளை நியமித்து அத்வைதத்தை ஆதிசங்கரர் ஸ்தாபித்து உலகில் பெருமளவில் பரப்பி வருவது போல் எம்பெருமானார் தரிசனம் நம் நாட்டை ஆட்கொள்ளாத தன் காரணம் என்ன? ஆட்கொள்வதற்கு வழி ஏற்படுமா?*

ஆதிசங்கரர் தமது நாலு ஶிஷ்யர்களின் மூலம் பாரத தேஶத்தின் நான்கு திக்குகளிலும் நான்கு மடங்களை ஸ்தாபித்ததாக அந்த மடங்களின் ஶிஷ்யர்கள் கூறிவருகிறார்கள். நான்கு மடங்களை ஸ்தாபிக்கச் செய்துவிட்டு, தாமே காஞ்சி யில் ஒரு மடத்தை ஸ்தாபித்ததாகவும், அதுவே காஞ்சீ காமகோடி மடம் என்றும் காமகோடி ஶிஷ்யர்கள் கூறி வருகிறார்கள். 'உலகம் பொய்' என்னும் கொள்கையையுடைய வரும், மிகுந்த வைராக்யமுடையவருமான ஆதிசங்கரர் சொத் துக்களையும், பணத்தையும் நிர்வஹிக்கவேண்டிய பொறுப் புடைய மடங்களை ஸ்தாபிக்கச் செய்திருப்பார் என்பது மிகவும் ஐயத்திற்கு இடமானது. மதப்ரசாரம் செய்வதற்கு ஶிஷ்யபரம்பரைகள் போதுமானவை. மடம் தேவையில்லை. ஆதிசங்கரர் தம் நூல் ஒன்றில் 'மடங்களை ஸ்தாபிக்கக் கூடாது' என்று நியமித்திருப்பதாக 'தார்மிகஹிந்து' ஆசிரியர் ஜகந்நாதாசார்ய ஸ்வாமி அடிக்கடி எடுத்துக் காட்டிவந்தார். 'பற்றற்றவர்களான துறவிகளுக்கு சொத்துக்களிலும், பணத் திலும் பற்றை ஏற்படுத்திவிடும்' என்னும் காரணத்தாலே தர்மஶாஸ்த்ரங்கள் ஸந்யாஸிகள் மடாதிபதிகளாயிருப்பதை நிஷேதித்தன. அதே ஶாஸ்த்ரங்கள் *"மாடாபத்யம் யதி: குர்யாத் விஷ்ணுபூஜாபிவர்த்தநே"* [ஸந்யாஸியானவன் விஷ்ணு பூஜையை வளர்ப்பதற்காக மடாதிபதியாயிருக்கலாம்] என்று விதிவிலக்கையும் காட்டின. அந்த விதிவிலக்கின்படி

வைஷ்ணவ மட₂ங்கள் நடந்துவருகின்றன. ஆகையால் இந்த நான்கு மட₂ங்களும் ஆதிசங்கரரின் ஶிஷ்யபரம்பரையில் வந்தவர்களால் பிற்காலத்தில் ஸ்த₂ாபிக்கப்பட்டவையாகவேயிருக்க வேண்டும். ஒரு சில நூற்றுண்டுகளுக்குள் ச்ருங்கேரி மட₂த்திலிருந்து பிரிந்துவந்த ஒரு ஸந்யாஸி கும்பகோணத்தில் ஓர் மட₂த்தை நிறுவினுர் என்றும், அந்த மட₂ம் மற்ற நான்கு மடங்களைக் காட்டிலும் பெரியது என்று ஜனங்கள் நம்புவதற்காக, தங்கள் மட₂த்தை ஆதிசங்கரர் நிறுவினுர், இதுவே காஞ்சீ காமகோடி மடம் என்று பொய்க்கதைகள் புனையப்பெற்றன என்றும் ச்ருங்கேரி ஶிஷ்யர்கள் ஆத₄ாரங்களைக் காட்டி, தம் நூல்களில் நிலைநாட்டியுள்ளனர். இந்த எல்லா மட₂ங்களும் இன்று அத்₃வைத மதத்தைப் பிரசாரம் செய்வதில்லை. வித்யாரண்யர் காலம் முதலே ராஜாக்களை வசப்படுத்தி, அரசியலில் பிரவேஶித்து, ராஜகுருக்களாகி, க்₂யாதிலாப₄பூஜைகளை ஸம்பாதித்துக்கொண்டனர். பொதுஜனங்களை ஈர்ப்பதற்காக, அத்₃வைத மதத்திற்கும், ஆதிசங்கரப₄ாஷ்யங்களுக்கும் முரணுக 'எந்த தெய்வத்தை வேண்டுமாஞலும் கும்பிடலாம்' என்னும் கொள்கையைப் பரப்பிஞர்கள். ஆதிசங்கரரையே ஷண்மத ஸ்த₂ாபகராக்கி, பல தெய்வங்களைப்பற்றிப் பல பல துதி நூல்களை இயற்றி, அவற்றை ஆதிசங்கரர் இயற்றியதாகப் பிரசாரம் செய்துவருகிறுர்கள். இதஞல், எல்லா தே₃வதாப₄க்தர்களும் அத்வைத ஸந்யாஸிகளை ஸேவிப்பதற்கும், அவர்களுக்குப் பாத₃பூஜைசெய்து பணம் கொடுப்பதற்கும் வழி ஏற்பட்டுவிட்டது. அத்₃வைத ஸந்யாஸிகளும் 'அத்₃வைத மதப்படி ஒழுகிஞல்தான் உங்களுக்கு ஆத்மக்ஷேமம் ஏற்படும்' என்னும் தம் மதக்கொள்கையை எவரிடமும் பரப்பாமல், தே₃வதாத்₃வைதத்தின் அளவுக்குத் தங்களுடைய அத்₃வைதத்தைக் குறுக்கிக்கொண்டு 'ஏதாவது ஒரு தெய்வத்தை வழிபடுங்கள்' என்றே பிரசாரம் செய்துவருகிறுர்கள். இது அத்₃வைத ப்ரசாரம் ஆகுமா? இப்படி ஜனங்களுக்கு ஹிதத்தைச் சொல்லாமல் ப்ரியத்தையே சொல்லுகையாலும், வேத₃ஶாஸ்த்ரங்களுக்கு மிகவும் முரண்பட்ட கொள்கைகளையும் ஒழுக்கத்தையுமுடைய அரசியல்வாதிகளையும்,பொதுஜனப் பத்திரிகையாளர்களையும், சினிமாக்காரர்களையும், கத₂ாப்ரஸங்கி₃களையும்,

ஸங்கீத வித்வான்களையும் வசப்படுத்திக்கொண்டு மக்களை ஈர்க்கையாலும் அத்₃வைத ஸந்யாஸிகளை மக்கள் பெரும் திரளாக வழிபடுகிறார்கள். அவர்களில் எவ்வளவுபேர் அத்வைத மதத்தின்படி ஆத்மமோக்ஷமத்தை அடைகிறார்கள் என்பதை ஆலோசித்தால், அத்வைத மதம் அத்வைத ஸந்யாஸிகளால் ஒரு சிறிதும் பிரசாரம் செய்யப்படுவதில்லை என்பது அனைவர்க்கும் விளங்கும். வைஷ்ணவத்தில் மதப்ரசாரத்திற்காக ஸ்ரீராமாநுஜர் மட₂ங்களை விசேஷமாக ஸ்த₂ாபிக்கவில்லை; பெரும்பாலும் க்₃ருஹஸ்த₂ர்களையே கொண்ட 74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளையே ஸ்த₂ாபித்தார். இவர்களாலும், எம்பெருமானாருக்குப் பிற்காலத்தில் கோயில் நிர்வாஹத்திற்காக ஏற்படுத்தப்பட்ட மட₂ாதி₄பதிகளாலும் சென்ற நூற்றாண்டுவரை வைஷ்ணவ ப்ரசாரம் சிறப்பாக நடந்துவந்திருக்கிறது. இன்றுவரை வைஷ்ணவ வித்₃வான்களும், மட₂ாதி₄பதிகளும், ஆசார்ய புருஷர்களும் விசிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ த₃ர்சனத்தைப் பாதுகாத்துப் பிரசாரம் செய்துவருகிறார்கள். இருபதாவது நூற்றாண்டில் லோகாயதமனப்பான்மை ஜனங்களிடம் பரவிவிட்டதால், மற்ற மதஜனங்களிடம் அவரவர் மதங்களில் ஊற்றம் குறைந்திருப்பதுபோல், வைஷ்ணவர்களிடையேயும் தம் மதத்தில் ஊற்றம் குறைந்துவிட்டது. "ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே பரமாத்மா. மற்ற தெய்வங்கள் அவனுக்கு உட்பட்டவர்கள். ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே மோக்ஷமளிக்க வல்லவன். மற்ற தெய்வங்கள் அல்பாஸ்தி₂ரப₂லன்களையே அளிக்கவல்லவை'' என்று வேத₃சாஸ்த்ரங்களில் காணப்படும் உண்மையை ஸ்ரீவைஷ்ணவ மதத்தலைவர்கள் பிரசாரம் செய்ய வேண்டியிருக்கிறது. இது பெரும்பாலான மற்ற தே₃வதாப₄க்தர்களுக்குக் கசப்பாகவேயிருக்கிறது. அதனாலேயே நம்மால் மிகுதியான கூட்டத்தைச் சேர்க்கமுடியவில்லை. தலைசிறந்த கொள்கைகளையும் ஒழுக்கங்களையும் பின்பற்றுபவர்கள் குறைவாகத்தான் இருப்பார்கள். ரத்தினங்கள்—கூழாங்கல், சிப்பி முதலானவற்றைப் போலவும், மூலிகைகள்—கள்ளி, முள்ளி, சப்பாத்தி முதலானவற்றைப் போலவும் மிகுதியாயிருக்க முடியாதன்றோ. ஆகையால், எம்பெருமானாரைப் போன்ற மஹாதேஜஸ்வியான மதத்தலைவர்கள் தோன்றினாலொழிய

வைஷ்ணவ தரிசனம் விசேஷமாகப் பரவ வழியில்லை. இதற்கு அனைவரும் எம்பெருமானைப் பிரார்த்திப்போம்.

*84. எல்லோரும் ஒரே மாதிரியான திருமண்காப்பு அணிந்து, ஒரே சம்பிரதாயத்தை ஆதரித்து, ஒருவரையே ஆசார்யராகக்கொண்டு ஒற்றுமையுடன் வாழும் காலம் வைண வத்திற்கு ஏற்படுமா ?*

இது ஒருநாளும் ஏற்படாது. பேதம் என்பது இயற்கையின் நியதி. " *லோகோ பிந்நருசி:* " [உலகத்தில் மனிதர்கள் வெவ்வேறு ருசியுடையவர்கள்] என்பது பழமொழி. அடிப் படைக் கொள்கைகளில் வேறுபாடுள்ள மதங்களும், ஸம்ப்ர தாயங்களும் ஒன்றுவது இயலாது. சேலம் ஆலயப் பாது காப்பு மகாநாட்டில் சிலர் 'சைவர்களும் வைணவர்களும் ஒன்றுகிவிடவேண்டும்' என்று கூறினர்கள். "சைவர்களாகிற நீங்கள் அனைவரும் திருமண்காப்பு அணிந்து கொள்கிறீர்களா? அல்லது ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் திருநீறு இட்டுக் கொள்ளவேண்டும் என எதிர்பார்க்கிறீர்களா" என்று நாம் அவர் களைக் கேட்டோம். உடனே அவர்கள் அனைவரும் தாங்கள் கூறியது கார்யஸாத்யமன்று என உணர்ந்து சிரித்துவிட்டார்கள். ஆகையால் அவரவர் மதஸம்ப்ரதாயங்களை உறுதியோடு பின் பற்றிக்கொண்டு, பொதுவிஷயங்களில் ஒத்துழைத்து, ஒற்றுமை யுடன் வாழ்வதே உண்மையான உறுதியான ஒற்றுமைக்கு வழியாகும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*85. திராவிடக்கழகத்தைச்சேர்ந்த கி. வீரமணி 4—2—82 குமுதத்தில் "ராமாநுஜர் மற்ற வருணத்தவர்களுக்கும் பூணூலை மாட்டி, அவர்களை அந்தணர்களாக்க முயன்று தோல்வியடைந் தார்" என்று எழுதியிருக்கிறார். இது உண்மையா ?*

இது அப்பட்டமான பொய். ஸ்ரீராமாநுஜரைப் பற்றிய எந்த வரலாற்று நூலிலும் இப்படி ஒரு செய்தி கிடையாது. ஸ்ரீராமாநுஜர் தம் நூல்களில் — அவரவர் தத்தம் வர்ணாச்ர மங்களுக்குரிய தர்மங்களைக் கடைப்பிடிக்கவேண்டும் என்று பலவிடங்களில் உபதேசித்திருக்கிறார். இத்தகையவர் மனம் போனபடி அனைவருக்கும் பூணூலை மாட்டிவிட முயன்றார் என்று எழுதுவது பரிஹஸிக்கத்தக்கது. கூசாமல் பொய்யை

யும் புரட்டையும் எழுதுவதையே தொழிலாகக்கொண்ட திராவிடக்கழகக்காரர் அப்படி எழுதினாலும். ஆஸ்திகர்களும், பி. வி. பார்த்தசாரதி என்னும் வைணவரும் நடத்தும் குமுதம் பத்திரிகையில் இதை வெளியிட்டது மிகவும் வருந்தத்தக்கது. பல வைஷ்ணவர்கள் இதை மறுத்து எழுதியிருப்பார்கள் என்பது நமக்குத் தெரியும். அக்கடிதங்களில் எதையும் வெளியிட மனமில்லாமல் இருப்பது, குமுதத்தின் வைணவ விரோத மனப்பான்மையையே காட்டுகிறது. பலகால் இதை நாம் எடுத்துக் காட்டியும் குமுதம் இந்த மனப்பான்மையைத் திருத்திக்கொள்ளாதது முறையற்றது.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*86 "இதயம்" பத்திரிகையில் 17—1—82 முதல் கடந்த ஆறு வாரங்களாக வெளிவரும் அஷ்டலக்ஷ்மிக்கட்டுரைகளில் அஷ்டலக்ஷ்மியின் ஸ்தோத்ரமும் அதற்கு விளக்கமும் அச்சிடப் பட்டுள்ளன. இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

மஹிஷாஸுரமர்த்திநீ ஸ்தோத்ரத்தைக் காப்பியடித்து, வடமொழியில் சரியான அறிவில்லாத ஒருவரால் இயற்றப்பட்ட அபத்தக் களஞ்சிய ஸ்தோத்ரம் இது. இந்த ஶ்லோகங்களில் பல ச₂ந்தோ₃ப₄ங்க₃ங்களும் (யாப்பிலக்கண முறைகேடுகளும்), மற்றும் பல இலக்கண வழுக்களும் நிரம்பியுள்ளன. 'ஆதி₃ லக்ஷ்மி ஸத₃ா பாலய மாம்', 'தை₄ர்யலக்ஷ்மீ ஸத₃ா பாலய மாம்', 'க₃ஜலக்ஷ்மீ ரூபிணி பாலய மாம்', 'ஸந்தானலக்ஷ்மீ து பாலய மாம்', 'விஜயலக்ஷ்மீ ஸத₃ா பாலய மாம்' முதலான ஶ்லோக முடிவுரைகளும், "கநகத₄ராஸ்துதி வைப₄வ வந்தி₃த ஶங்கர தே₃ஶிக மாந்ய பதே₃" "ஸ்வர ஸப்த பூ₄ஷித கா₃நநுதே" முதலான அடிகளும் வடமொழி அறிவில்லாத மூட₄ராலே இயற்றப்பட்டவை இந்த ஶ்லோகங்கள் என்று வெளிப்படையாகத் தெரிவிக்கின்றன. இந்த ஶ்லோகங்களுக்கு அச்சிடப் பட்டுள்ள அர்த்த₂ங்களும் வடமொழி அறிவில்லாத அறிவிலியாலே எழுதப்பட்டவை இவை என்று காட்டுகின்றன. உள்ளே உள்ள விளக்கங்களைப் பார்த்தால், அஷ்டலக்ஷ்மியின் புகழைவிட காமகோடி சங்கராசார்யரின் புகழே மிகுதியாகக் காணப்படுகிறது. 500 வருடங்களுக்கு முற்பட்ட எந்த மதாசார்யராலும் கையாளப்படாததாய், மிக சமீப

காலத்தில் புனையப்பட்ட தேவீபாகவதக் கதைகளே அச்சிடப் பெற்றுள்ளன. சைவமானது சாக்தம் முதலான பிரிவுகளாலே பிரிந்திருப்பதுபோலே, வைஷ்ணவமும் சாக்தம் முதலான பிரிவுகளால் குழப்பமடையவேண்டும் என்னும் எண்ணங் கொண்டு காமகோடி பீடாதிபதியால் மு. வரதாசார்யரைக் கொண்டு, அஷ்டலக்ஷ்மி கோவில் கட்டப்பட்டுள்ளது என்று இதயம் கட்டுரைகளிலிருந்து தெளிவாக விளங்குகிறது. 68, 69 கேள்விகளின் பதிலிலும் இது விளக்கப்பட்டது. சமீபத்தில் இக்கோவிலில் பிள்ளையார்கோவில் கட்டியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. வைணவர்கள் எவரும் வழிபடத் தகாத கோவில் இது என்பது வெளிப்படை.

பேராசிரியர் E. K. ராமசாமி, மதுரை.

***87. மார்கழிமாதம் புனிதத்திங்கள் என்றும், பீடைமாதம் என்றும் இரு கருத்துகள் நிலவுகின்றன. இதுகுறித்துத் தங்களது மேலான விளக்கத்தை விரும்புகிறேன்.***

மோக்ஷத்தை விரும்பும் யோகிகளுக்கும், விஷ்ணு பக்தர் களுக்கும், தேவர்களுக்கு விடியற்காலை வேளையான மார்கழி மாதம் ஸத்வகுணம் வளரும் புனிதமான மாதமாகும். "*மாஸாநாம் மார்க்கஶீர்ஷோஹம்*" [மாதங்களில் நான் மார்கழி] என்றான் கீதையில் கண்ணன். மணம் செய்து கொண்டு சிற்றின்பம் பெறவிரும்பும் போகிகளுக்கு, தங்கள் விருப்பத்திற்கு முரண்பட்டதாகையாலே அது பீடை மாத மாகிறது. ஆகையால், விவாஹம் முதலிய காரியங்களுக்கு அது பயன்படாததாயிருப்பதையும், பக்தி நிகழ்ச்சிகள் சிறப் பாக அம்மாதத்தில் நிகழ்வதையும் காண்கிறோம். இவ்வண்ணம் யோகிகளுக்குப் புனிதத்திங்களாகவும், போகிகளுக்குப் பீடை மாதமாகவும் விளங்குகையால் முரணில்லை.

R. பார்த்தசாரதி, சென்னை-80.

***88. மடாதிபதிகளை ஆக்கவும் அழிக்கவும் அறநிலைய ஆணையருக்கு அதிகாரங்கொடுக்கும் அறநிலையச் சட்டத் திருத்தம் பற்றித் தங்கள் கருத்தை வெளியிட வேண்டுகிறேன்.***

இத்திருத்தம் மிகவும் முறையற்றது. இதுபற்றி 'மாசி' ஸ்ரீரங்கம்ஹாப்ரியாவில் உள்ள கண்டனத்தில் ஒவ்வோரெழுத் தையும் நாம் ஆதரிக்கிறோம்.

A. ராமாநுஜாச்சாரி, B.A. சைதாப்பேட்டை, சென்னை.

*89. "வைகறை' என்பது பாண்டிச்சேரி ஸ்ரீ அரவிந்த ஆஶ்ரமக் காலாண்டு வெளியீடு. 1980, 2வது வெளியீட்டில் பக்கம் 20, 21ல் 'ஸ்ரீ அரவிந்தருடைய உரையாடலில் வைணவத்தைப் பற்றிய ஒரு கேள்வி பதில் பின்வருமாறு:—*

*"கேள்வி:— எந்த வகையில் வைணவ வழி முழுமையற்றதாக உள்ளது?*

*ஸ்ரீஅரவிந்தர்:— வைணவ வழி பக்தியை அடிப்படையாகக் கொண்டது. பக்தியில் மற்ற தத்துவங்களும் அடங்கியுள்ளன எனக் கூறலாம். ஆனால், வைணவர்கள் பக்தியையே நம்பியிருக்கிறார்கள். எனது யோகத்தில் பக்தி மட்டுமல்லாமல் பிற தத்துவங்களும் (ஞானம், கர்மம்) வற்புறுத்தப்படுகின்றன. இறுதி நிலையில் இன்னும் உயர்ந்ததோர் சக்தியில் இவை கலக்கின்றன."*

*இதுபற்றி விமர்சிக்க வேண்டுகிறேன்.*

ஸ்ரீராமாநுஜருடைய திருவுள்ளத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் அரவிந்தர் இப்படிப் பேசியிருக்கிறார். ஸ்ரீபா₄ஷ்யத்தில் எம்பெருமானார் மங்க₃ளஶ்லோகத்திலேயே *"பரஸ்மின் ப்₃ரஹ்மணி ஸ்ரீநிவாஸே மம ப₄க்திரூபா ஸேமுஷீ ப₄வது"* [பரப்₃ரஹ்மமான ஸ்ரீநிவாஸனிடத்தில் எனக்கு ப₄க்திரூபமான ஜ்ஞானம் உண்டாகட்டும்] என்று ப₄க்தியும் ஜ்ஞானத்தில் ஒருவகையானதே என்று தெளிவாகக் காட்டியிருக்கிறார். 'மதிநலம்' என்று ஆழ்வார் அருளியதைப் பின்பற்றியே எம்பெருமானார் இப்படி அருளினார். ஸ்ரீபா₄ஷ்யத்தில் இந்த ப₄க்தியை மோக்ஷஸாத₄னமாகக் காட்டும் ப்₃ரஹ்மவித்₃யைகளைப் பற்றிச் சிறப்பாக விளக்கியிருந்தபோதிலும், உண்மையான ஸாத₄னம் எம்பெருமானே என்றும், ஸாத₄ன ப₄க்தியைக் காட்டிலும் ஸ்வயம்ப்ரயோஜன ப₄க்தியே மிகச் சிறப்புற்றது என்றும், வேதா₃ந்தங்கள் ப₄க்தியை ஸாத₄னமாக விதி₄த்ததும், அது பரிபக்குவநிலையில் ஸ்வயம்ப்ரயோஜனப₄க்தியாகமாறி, 'எம்பெருமானே உபாயம்' எனும் ப்ரபத்தி ரூபமான ஜ்ஞானத்தை விளைத்து, எம்பெருமானது நிர்ஹேதுக க்ருபையாலே உபாஸகன் மோக்ஷமடைவதற்கு உறுப்பாகும் என்னும் கருத்தாலேயே

என்றும் ஸ்ரீபாஷ்யத்தில் பலவிடங்களிலும், கீதாபாஷ்யத்திலும், கீத்யத்திலும் ஸ்ரீராமாநுஜர் தெளிவாக உணர்த்தியிருக்கிறார். இப்படி எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையினாலே மோக்ஷத்தைப் பெறுகிறவன் தலைசிறந்த ஜ்ஞானத்தையுடையவனாகையாலே 'ஜ்ஞானீ' என்றும், ஸ்வயம் ப்ரயோஜனமான அநந்ய பக்தியை உடையவனாகையாலே 'பக்தன்' என்றும், எம்பெருமானையே உபாயமாகப் பற்றியவனாகையாலே 'ப்ரபந்நன்' என்றும் கீதை முதலான ஶாஸ்த்ரங்கள் வழங்குகின்றன என்றும் காட்டியிருக்கிறார். "எம்பெருமானே உடையவன். நாம் அனைவரும் அவனது உடமைகள்" என்று அறிந்தவனாகையாலே இவனிடம் தலைசிறந்த ஜ்ஞானமும் உண்டு என்றும், அவனிடம் சோராத காதலும் பொங்கும் பரிவும் உடையவனாகையாலே தலைசிறந்த பக்திக்கும் இவன் இருப்பிடம் என்றும், ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமையாகிற கைங்கர்யத்தைச் செய்பவனாகையாலே தலைசிறந்த கர்மமும் இவனுக்கு உண்டு என்றும் ஸ்ரீராமாநுஜர் தம் க்ரந்தங்களில் பலவிடங்களில் காட்டியிருக்கிறார். அந்த க்ரந்தங்களை நன்கு கற்றறியாமையாலேயே அரவிந்தர் வைணவவழி முழுமையற்றதாக உள்ளது என்று கூறியிருக்கிறார்.

காளியப்ப முதலியார், திருப்பத்தூர். (90, 91 கேள்விகள்)

*90. வாக்கிய குருபரம்பரை பதின்மூன்று வாக்கியங்களில் லக்ஷ்மி பிராட்டியாரும் தாம் அநுஸந்திக்கும்போது 13-வது "ஸ்ரீதராய நம:" என்னும் வாக்கியத்தை அநுஸந்திக்கவேணும். அப்போது, "ஸ்ரீ" பதத்துக்கு கர்த்தரிவ்யுத்பத்தியில் "ஶ்ரயத இதி ஸ்ரீ:" என்று அநுசந்திக்கும்போது, ஸ்ரீக்கு லக்ஷ்மி, சம்பத்து இவ்விரண்டு பொருள்களில், லக்ஷ்மி என்ற பொருளைத் தவிர்த்து, சம்பத்து என்கிற பொருளைக் கொள்ளலாமா? வேறுபடில் தம்மையும் தாமே சேவித்ததாகவாகுமாதலால்.*

'ஸ்ரீதராய நம:' என்னும் வாக்யம் ஸ்ரீதரனுகிற (லக்ஷ்மியை தரிக்கும்) எம்பெருமானுக்கு வணக்கத்தைக் காட்டுமேயொழிய, ஸ்ரீதேவிக்கும் சேர்த்து வணக்கத்தைக் காட்டாது. ஆகையால் 'ஸ்ரீ' ஶப்தத்துக்கு 'லக்ஷ்மீ' என்னும் பொருளையே கொள்ளலாம்.

*91. ஸர்வேஶ்வரன் த்வயத்தை விஷ்ணுலோகத்திலே ஸ்வமகிஷியான பிராட்டி விஷயமாக அருளிச்செய்தான். ஷை த்வயத்தை பிராட்டி அநுசந்திப்பதில், ஸ்ரீ சப்தத்திற்கு லக்ஷ்மி என்று பொருள் கொள்ளாமல், சம்பத்து என்ற பொருள் கொண்டால், முன் கேள்வியில் சொன்னபடி தானும் தன்னைச் சேர்த்தே ப்ரபத்தி செய்ததாக ஏற்படும் தோஷம் வராது என்று கருதுகிறேன்.*

எம்பெருமானால் உபதேசிக்கப்பட்ட த்₃வயத்தைப் பிராட்டி அநுஸந்தி₄க்கும்போது, பூர்வவாக்யத்திற்போலே உத்தர வாக்யத்திலும் ஸ்ரீமச்ச₂ப்₃த₃ம் ஸ்ரீதே₃வியால் உபலக்ஷிக்கப்பட்ட நாராயணனை மாத்திரம் காட்டுவதாகக் கொள்ளலாம். இப்படிக்கொண்டால் பிராட்டி தன்னைத்தானே புருஷகாரமாக ஶரணமடைவது, தனக்குத்தானே கைங்கர்யம் செய்வது எனும் தோ₃ஷங்கள் வராமலிருக்கும்.

K. V. வரதன், சென்னை-53. (92, 93 கேள்விகள்.)

*92. வைணவ குலத்தில் பிறந்த சிலர் சமீப காலத்தில் சைவப் பெயர்களைத் தம் குழந்தைகளுக்கு வைக்கிறார்கள். கேட்டால் அந்த தெய்வத்தின் அருளால் பிறந்தது என்கிறார்கள். எவ்வளவு எடுத்துக்கூறியும் பெயரை மாற்ற மறுக்கிறார்கள். இதற்கு என்ன செய்வது?*

மோக்ஷமுள்ளிட்ட எல்லாப் ப₂லன்களையும் அளிக்கும் முகுந்தனிருக்க, வேறு தெய்வத்தை வணங்கி, அந்த தெய்வத்தின் அருளால் தனக்குக் குழந்தை பிறந்ததாகவும் எண்ணி, எடுத்துக் கூறினாலும் பெயரை மாற்ற மறுப்பவர்களை நாம் என்ன செய்வது? "ஓஓ உலகினதியல்வே......பன்மாமாயத்து அழுந்துமா நளிர்ந்தே" [திருவாசிரியம் 6] என்னும் ஆழ்வார் பாசுரத்தை அநுஸந்தி₄த்து அவர்களோடு நெருங்காமலிருப்பது நல்லது.

*93. 'அகலகில்லேன் இறையும்' என்று எம்பெருமானுடைய திருமார்பில் உறைகின்றாள் ஸ்ரீதேவி. பிரளயகாலத்தில் எம்பெருமான் எல்லாவற்றையும் அழித்து, ஆலிலையில் துயிலும் போது, தன்னைவிட்டுப் பிரியாத பெருந்தேவியை எங்கு வைத்திருப்பான்?*

'எல்லாவற்றையும் பிரளயகாலத்தில் அழிப்பது' என்பது ப்ராக்ருதப் பொருள்கள் விஷயத்திலேயே பொருந்தும். அக்

காலத்திலும் பரமபத₃மும், அதிலுள்ள தி₃வ்யமஹிஷிகளும், நித்யஸூரிகளும் அழிவில்லாமல் நிலைபெற்றிருக்கிறார்கள். வாமன ப்₃ரஹ்மசாரியாக அவதரித்தபோதும் எம்பெருமான் திருமார்பிலிருந்த பிராட்டியை மான்தோலால் மறைத்துக் கொண்டு வந்ததாகப் புராணம் பேசுகிறது ஆகையால் ஆலிலைக் கண்ணன் திருமார்பிலும் மஹாலக்ஷ்மி அவசியம் இருப்பாள்.

S. K. *ராமராஜன், சென்னை-4.* (94, 95 கேள்விகள்.)

*94. திருவாய்மொழிப்பிள்ளை அரசாண்ட பகுதி எது? மதுரையா? திருநெல்வேலிச்சீமையா?*

பாண்டிய நாட்டில் ராஜா மைனராக இருந்தபடியால் ராஜமாதா திருவாய்மொழிப்பிள்ளையை கார்டியனாக இருந்து அரசாளும்படி கேட்டுக்கொண்டதன்பேரில் திருவாய்மொழிப் பிள்ளை பல வருடங்கள் அரசாண்டார் என்று யதீந்த்ரப்ரவண ப்ரபாவம் கூறுகிறது. பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரையே யாகையால், மதுரையிலிருந்தே அரசாட்சி புரிந்திருக்க வேண்டும்.

*95. முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரானும் ஒரே காலத்தில் வாழ்ந்ததுபோல் வேறு ஆழ்வார்கள் ஒரே காலத்தில் வாழ்ந்தனரா?*

நம்மாழ்வாரது சீடரான மதுரகவியாழ்வார் அவர் காலத்தில் வாழ்ந்தார் என்பது வெளிப்படை. தொண்டரடிப்பொடியாழ்வார் தம் பூக்கொய்யும் ஆயுதத்துக்கு 'அருள்மாரி' என்று திருமங்கையாழ்வார் திருநாமத்தை இட்டார் என்றும், திருமங்கையாழ்வார் ஸ்ரீரங்கத்தில் திருமதிள் கட்டும்போது தொண்டரடிப்பொடியாழ்வாருடைய திருநந்தவனத்தை ஒதுக்கி மதிள் கட்டினார் என்றும் வரலாற்றுச் செய்திகள் காணப்படுவதால், தொண்டரடிப்பொடியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் ஒரே காலத்தில் இருந்தவர்கள் என்று விளங்குகிறது. 'அன்பர்தாள்தூளி நற்பாணன் நற்கலியன்' என்று உபதேசரத்தினமாலையில் ஆழ்வார்களுடைய அவதார க்ரமத்தை அருளும்போது திருப்பாணாழ்வாரைத் தொண்டரடிப்பொடிகளுக்கும், திருமங்கைமன்னனுக்கும் இடையிலே

எடுத்திருக்கையாலே அவரும் அவர்களோடு ஒரே காலத்தில் வாழ்ந்திருக்கவேண்டும்.

வெங்கடேஷ், திருவல்லிக்கேணி.

*96. ஸ்ரீஸூக்தத்திலே "ஆர்த்ராம்......சந்த்ராம் ஹிரண்மயீம்" என்ற மந்திரத்தை முதலிலும், "ஆர்த்ராம் புஷ்கரிணீம்......ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம்" என்று பிறகும் ஸ்ரீவைஷ்ணவ அநுஸந்தாநம்; ஆனால் சைவர்கள் முதலில் "ஸூர்யாம்" என்ற பிறகு "சந்த்ராம்" என்று அநுஸந்திக்கிறார்கள். இதற்கான காரணத்தை தேவரீர் விளக்கவேணும்.*

வேத₃த்தில் பிற்காலத்தில் பல பாட₂பே₄த₃ங்கள் புகுத்தப்பட்டுவிட்டன. அவற்றில் இதுவும் ஒன்று. மஹாப₄ாரதத்திலும், ப்₃ரஹ்மஸூத்ரத்திலும் எடுக்கப்பட்ட பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் 'லக்ஷ்மீதந்த்ரம்' என்று ஒரு க்₃ரந்த₂ம் உண்டு. இதை அடையாறு லைப்ரரியில் அழகாக அச்சிட்டிருக்கிறார்கள். அதில் கடைசியிலுள்ள ஓர் அத்தியாயம் முழுவதும் ஸ்ரீஸூக்தத்திலுள்ள லக்ஷ்மியின் திருநாமங்களின் பொருளை விளக்குகிறது. அந்த ப்ராசீனபாட₂மே வைஷ்ணவர்களால் கைக்கொள்ளப்பட்டுள்ளது. நம்முடைய ஸ்ரீஸூக்த வ்யாக்₂யானத்தில் லக்ஷ்மீ தந்த்ரத்தின் நாமநிர்வசனங்கள் முழுவதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

க. இராசகோபாலன், சென்னை-11.

*97. "பயனீர் பப்ளிகேஷன், 87, நேதாஜிரோடு, பொள்ளாச்சி-642001" அவர்களால் வெளியிடப்பட்ட 'சித்திரக் கந்தபுராணம்' எனும் நூலில் "மானுருவில் வந்த லக்ஷ்மீதேவிக்கும் திருமாலுக்கும் பிறந்தவள் முருகனின் மனைவியாகிய வள்ளி" என்று உள்ளது. இதன் உண்மையை விள்க்க வேண்டுகிறேன்.*

முருகன், வள்ளி முதலானவர்களைப் பற்றிச் சங்கநூல்களில் பல செய்திகள் வந்துள்ளன. கந்தபுராணத்திலுள்ள இந்தக் கதையும், பிரணவத்தின் பொருள் தெரியாத பிரமனின் தலையில் குட்டி, அவனைச் சிறையிலடைத்து, முருகன் படைப்புத் தொழிலை மேற்கொண்ட கதையும், பிரணவத்தின் பொருளை சிவனுக்கே உரைத்த கதையும், முருகன் வாகனமான மயில்

வைகுண்டத்தையே அழித்த கதையும் மற்றும் இதுபோல் ப்ரஹ்மவிஷ்ணு ருத்₃ரர்களைத் தாழ்த்திப் பேசும் பற்பல பொய்க்கதைகளும் சங்கநூல்களில் அடியோடு காணப்படவில்லை. இவற்றிலிருந்து இக்கதைகள் பிற்காலத்தில் முருக பக்தர்களால் புனையப்பெற்றவை என்று தெளிவாக விளங்குகிறது. இதனாலேயே 'எந்தப் புளுகும் கந்தப்புராணத்தில்' எனும் பொதுஜன வழக்கும் தமிழ்நாட்டில் ஏற்பட்டுவிட்டது.

R. கிருஷ்ணன், R. பத்மநாபன், செகந்திராபாத்.

*98. ஸ்ரீமத் ராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் ''ஷட₃ர்த்த₄ நயந: ஸ்ரீமாந்'' [ஸ்ரீமானான முக்கண்ணன்] என்று வால்மீகி மஹரிஷி முக்கண்ணனை 'ஸ்ரீமான்' [திருவுடையவன்] என்று குறித்திருப்பது எப்படிப் பொருந்தும் ?*

ராவணனைக் கொன்றபின்பு பிரமன் முதலான தேவர்கள் வந்து ''எங்கள் காரியத்தை அழகாகச் செய்துவிட்டீர். இனி வைகுண்டத்திற்கு உகப்புடன் செல்லலாம்'' என்று ராமபிரானைப் பிரார்த்தித்தார்கள். அப்போது முக்கட்பிரான் ''அயோத்தியில் திருத்தாய்மார்கள், தம்பிமார்கள், குடிமக்கள் முதலான அனைவரும் தேவரீரைப் பிரிந்து வாடியிருக்கிறார்கள். அங்கு சென்று பலவருஷங்களிருந்து அரசாட்சி புரிந்த பின்பே பரமபதம் எழுந்தருளவேணும்'' என்று பிரார்த்தித்து, இவ்வுலகிற்குப் பதினோராயிரம் வருடங்கள் ராமராஜ்யத்தைப் பெற்றுத்தந்த நன்றியறிவாலே, வால்மீகி ப₄க₃வான் முக்கண்ணனை ''ஸ்ரீமாந்'' [நல்ல வார்த்தையாகிற செல்வத்தையுடையவன்] என்று கொண்டாடுவதாக நம்பிள்ளை ஈட்டிலே [7-5-2] நிர்வஹித்தருளியதே இக்கேள்விக்கு பதிலாகும்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*99. இந்து ஒற்றுமை எழுச்சி மகாநாடுகள் பற்றித் தங்கள் கருத்து என்ன?*

இந்துக்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்தும் எந்த முயற்சியும் வரவேற்கத்தக்கதே. ஆனால், அவ்வொற்றுமை நியாயமான உறுதியான அடிப்படையில் ஏற்படவேணும். ஒரு புறம் வைஷ்ணவமதத்தை அழிப்பதற்கு எல்லா முயற்சிகளையும்

செய்துகொண்டு, 'இந்துக்களிடையே ஒற்றுமை' என்று கூச்சலிடுவதால் மாத்திரம் ஒற்றுமையும் ஏற்படாது: 'இந்து மதம்' எனப்படும் மதஸமுதாயமும் வளராது. இந்நாட்டில் இந்துக்கள் எனப்படும் சைவர்கள் வைணவர்களில் பெரும் பான்மையினர் அவரவர்க்குரிய மதக்குறிகளை நெற்றியில் இட்டுக் கொண்டு பள்ளிகளுக்கும், காரியாலயங்களுக்கும் செல்லும் நாள் என்று வருகிறதோ, அன்றுதான் 'இந்துமதம்' வளர்ந் திருப்பதாகவும், இந்துக்களிடையே ஒற்றுமை ஏற்பட்டி ருப்பதாகவும் கொள்ளமுடியும். இதற்கு இம்மகாநாடுகள் எந்த முயற்சியும் எடுத்துக்கொள்வதாகத் தெரியவில்லை.

S. கோவிந்தராஜன், சென்னை-94.

*100. சமீபத்தில் தொடங்கப்பெற்றுள்ள 'ஞானபூமி' பத்திரிகையின் ஜனவரி, பிப்ரவரி, மார்ச் இதழ்களை அனுப்பி யுள்ளேன். அவற்றை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

ஞானபூமியைத் தொடங்கும் முன்பே அதன் நிர்வாகி ஸுதர்சனத்தோடு தங்கள் பத்திரிகையை Exchange (மாற்றிக் கொள்ளுதல்) செய்துகொள்ளலாமா என எழுதினர். நாமும் உடனே இசைந்தோம். ஆஸ்திகத்தை வளர்க்கப் பத்திரிகை தொடங்கியிருப்பதை வரவேற்றோம். எந்த தெய்வத்தையும் எந்த மதத்தையும் தாழ்வுபடுத்தாமல் கட்டுரைகள் வரவேண்டு மென்றும், வைணவத்தைப்பற்றி வைணவத்தைக் கற்றறிந்த வர்களைக் கொண்டே கட்டுரைகள் எழுதச் செய்யவேண்டும் என்றும், "அனுமதித்தால், தமிழ்நாட்டில் சங்ககாலத்திலிருந்து வைணவம் தழைத்து வளர்ந்துவரும் பாங்கினை விளக்கித் தொடர் கட்டுரையை யானே எழுதுகிறேன்" என்றும் கடிதம் எழுதினோம். நமது ஸுதர்சனம் இதழை அனுப்பி, அத்துடன் "கஜேந்திரமோக்ஷத்தின்போது விஷ்ணு 'நானும் ஆதிமூலம் அல்ல' என்று கூறியதாகவும், அவர் கையிலிருந்த ஸ்ரீசக்ரமாகிற ஆதிலக்ஷ்மியே ஆதிமூலமென்றும் அவளே முதலையை அழித்து கஜேந்திரனை ரக்ஷித்தாள் என்றும் ஞானபூமி ஆசிரியர் இதயத்தில் அஷ்டலக்ஷ்மிக் கட்டுரையில் எழுதியிருப் பதற்கு ஆதாரம் என்ன ?" என்றும் கேட்டு எழுதினோம். அதற்கு யாதொரு பதிலுமில்லை; ஞானபூமியை நமக்கு அனுப் பவுமில்லை. நிற்க; இம்மூன்று இதழ்களை இனி விமர்சிப்போம்.

(1) ஞானபூமியில் வைணவத்தைக் கற்றறிந்த மதத்தலைவர் எவ்வரைக்கொண்டும் வைணவமதத்தைப்பற்றிய கட்டுரைகள் வரவில்லை. மாருக, சக்தியே பரம்பொருள் எனும் கொள்கையுடையவராய், வைணவ நூல்களில் பழக்கமில்லாதவரான ஞானபூமி ஆசிரியரே வைணவத்தைப் பற்றிக் கட்டுரை எழுதுகிருர். அதனுல் பல பிழைகள் புகுந்துள்ளன. "பேயனுயொழிந்தேன்" எனும் குலசேகராழ்வார் பாசுரத்தை, பேயாழ்வார் பாசுரமாக எடுக்கிருர். "மஹதாஹ்வயர்" என்பது பேயாழ்வாருக்கு உண்மையான பெயர் என எழுதுகிருர். 'பேய்' என்னும் தமிழ்ச்சொல்லுக்குப் 'பெரிய' என்னும் பொருளும் உண்டு என்பதையும். அதையே பூ₂ட்டர் "மஹதா₂ஹ்வயர்" என வடமொழியில் மொழிபெயர்த்திருக்கிருர் என்பதையும் உணரவில்லை. (2) ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும், சங்க நூல்களிலும், மற்ற பழைய நூல்களிலும் காணப்படாத கணபதியைப் பற்றிய கட்டுரையில் "திருமால் அவதாரமான ராமர் சீதையை மீட்க உபாசித்தது கணபதியைத்தான்" என்னும் ப்₃ரஹ்மாண்ட₃ப்புளுகை அள்ளிவீசி, வேதமுதல்வனை திருமாலைத் தாழ்த்தியெழுதப்பட்டுள்ளது. (3)நம்முடைய மதத்திற்கு மூலாதாரமான வேதங்களிலிருந்தும், ஸ்ம்ருதிகளிலிருந்தும், இதிஹாஸங்களிலிருந்தும், ஸாத்விகபுராணங்களிலிருந்தும் ப்ரமாணங்களைக் காட்டி ஆதிசங்கரர், ஸ்ரீராமானுஜர், மத்வர் முதலான மதாசார்யர்கள் தமது பா₄ஷ்யங்களில் மதக்கொள்கைகளை விளக்கியிருப்பதற்கு முரணுக, இந்த ப்ரமாணங்களில் சரியான ஞானமில்லாதவர்களும், மனம்போனபடி பேசுகிறவர்களுமான காமகோடிபீடாதிபதிகள், சின்மயானந்தர், சித்பவானந்தர், வாரியார் முதலானவர்களின் வாக்குகளையே ப்ரமாணமாகக்காட்டி மதவிஷயங்களுக்கு விளக்கம் எழுதப்பெற்றுள்ளது. (4) சைவ அத்வைத உபந்யாஸகர்களுடையவும், மதத்தலைவர்களுடையவும் உரைகளைக் காட்டியிருப்பது போலே, வைணவ உபந்யாஸகர்கள் மதத்தலைவர்களுடைய உரைகளை எங்கும் காட்டவில்லை. வைணவமடாதிபதிகளின் திருவுருவப்படம் அச்சிடப்பட்டுள்ளதேயொழிய அவர்களது அருள்மொழிகள் எதுவும் அச்சிடப்படவில்லை. இவற்றிலிருந்து 'ஞானபூமி' சைவாத்வைத சமரசமதப் பத்திரிகையே என்றும், வைணவமதத்தை உள்ளபடி பிரசாரம் செய்யவேண்டும் என்னும் எண்ணம் அதன் நிர்வாகிகளுக்கு இல்லை என்றும் விளங்குகிறது.

ஐந்தாவது சதகம் முற்றிற்று.

# திருவேங்கடத்தில் ஆக்ரமிப்பு

தெற்குத் திருமலையான அழகர்கோவிலைப் 'பழமுதிர்சோலை' எனும் முருகன் தலமாக்க சமீபகாலத்தில் சைவாத்வைதிகளால் முயற்சி தொடங்கப்பட்டதுபோலே, எம்பெருமானார் காலம் முதலே இவர்கள் திருவேங்கடத்தை சிவ ஸ்தலமாக்க முயன்று, அது கைகூடாமை யாலே 'திருவேங்கடமுடையானை எந்த தெய்வமாகவும் கொள்ளலாம்' எனும் பொய்ப்பிரசாரத்தைப் பரப்பிவருகிறார்கள். இந்த (அபத்த)க் கொள்கைக்கு வேதத்தில் இடமுள்ளது என்று சென்ற வருஷம் ஒருவர் திருமலை திருப்பதி தேவஸ்தான பத்திரிகையான 'ஸப்தகிரி'யில் கட்டுரை எழுதினார். வேதம் வல்லார்களில் சிறந்தவரான ஸ்ரீ உ. வே. நாவல்பாக்கம் தேவநாதாசார்ய ஸ்வாமி அதை மறுத்து எழுதிய கட்டுரையும், சென்னை திரு. T S. கிருஷ்ணஸ்வாமி அதை மறுத்து எழுதிய கட்டுரையும் சில மாதங்களுக்கு முன் 'ஸப்தகிரி'யில் வெளி வந்தது மே 1981 'ஸப்தகிரி'யில் கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் இந்த (அபத்த)க் கொள்கை திருமங்கையாழ்வா ரால் ஆதரிக்கப்பட்டுள்ளது என்று எழுதிய கட்டுரையை மறுத்து நாம் எழுதிய கட்டுரை ஜூலை '81 'ஸப்தகிரி'யில் அச்சிடப்பெற்றது அது அடுத்து அச்சிடப்படுகிறது. இந்த ஆக்ரமிப்பு முயற்சியில் லஜ்ஜை யில்லாமல் தொடர்ந்து ஈடுபடாமலிருக்கும் நல்லறிவைத் திருவேங்கட முடையான் இவர்களுக்கு அளிப்பானாக. — ஸுதர்சனம் ஆசிரியர்.

# மணிநிறவண்ணன் மாதவனே

*[ஸ்ரீ. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், 'ஸுதர்சனம்' ஆசிரியர், 3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.]*

மே 1981 ஸப்தகிரியில் 'தெள்ளியார் வணங்கும் மலை' என்னும் தலைப்பில் சென்னை திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் எழுதியுள்ள கட்டுரையில் 'மணிநிறவண்ணன்' (பெரியதிருமொழி 1.8.2) என்று திருமங்கையாழ்வார் அருளியிருக்கும் திருநாமத்துக்குக் கொடுத்தி ருக்கும் விளக்கம் பற்றி இங்கு ஆராய்வோம்,

"மாணிக்கம் போன்ற வண்ணமுடைய சிவபிரானாகவும் காட்சி தருபவன் அவனே" என்று திரு. கி. வா. ஜ. எழுதியிருப்பது திருமங்கையாழ்வார் திருவுள்ளத்துக்குப் பொருந்தாது. பொதுவாக ஆழ்வார்கள் அனைவரும் "மணிவண்ணன்" என்று திருமாலையே குறிப்பர். 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா'(திருப்பல்லாண்டு1) என்று பெரியாழ்வாரும், 'வைகுந்தா மணிவண்ணனே' (திருவாய் மொழி 2-6-1) என்று நம்மாழ்வாரும், 'மாயன் மணி வண்ணனெம் மான்' (பெரியதிருமொழி 9-3-6) என்று திருமங்கையாழ்வாரும் பாடி யிருப்பதைக் காணலாம். இவ்விடங்களிலெல்லாம் 'மணி' என்பது நீலமணியையே குறிக்கும். சிவனை மணிவண்ணன் என்று ஆழ்வார்கள் எவரும் எங்கும் பாடவில்லை; நெருப்புப் போன்ற உருவை உடைய வன் என்றே பாடியிருக்கிறார்கள். 'தழல் நிறவண்ணன்' (பெரிய திருமொழி 6-1-3) 'ஒன்று செந்தீ' (திருநெடுந்தாண்டகம் 2) என்று திருமங்கையாழ்வாரும், 'எரியுருவத்தேறேறி' (இரண்டாந்திருவந்

தாதி 63) என்று பூதத்தாழ்வாரும் கூறியிருப்பதைக் காண்க. ஆகையால் மணிநிறவண்ணன் என்பதற்கு "(சிவந்த) மாணிக்கம் போன்ற வண்ணமுடைய சிவபிரான்" என்று திரு. கி. வா. ஜ. பொருள் கொண்டது திருமங்கையாழ்வார் திருவுள்ளத்துக்கு ஏலாது.

"வெள்ளியான் கரியான் மணிநிறவண்ணன்" என்னும் பாசுரத்துக்கு "க்ருதயுகத்தில் வெளுத்த நிறத்தையுடையனாய், கலியுகத்தில் கறுத்த நிறத்தையுடையனாய், த்வாபரயுகத்தில் ச்யாமமான நிறத்தையுடையனாயிருக்கும்" என்று வியாக்கியான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை அருளியிருக்கும் பொருளே திருமங்கையாழ்வார் திருவுள்ளத்துக்கு மிகவும் பொருந்தியதாகும். "திருவடிவில் கருநெடுமால் சேயனென்றும் திரேதைக்கண், வளையுருவாய்த் திகழ்ந்தானென்றும்......பெருமானைக் கரு நீலவண்ணன் தன்னை" (திருநெடுந்தாண்டகம் 3) என்னும் பாசுரத்தில் திருமங்கையாழ்வாரும் யுகந்தோறும் திருமாலது திருநிறங்கள் மாறுபடுவதை உணர்த்தினர்.

மேலும் "என்றெண்ணி நாடொறும் தெள்ளியார் வணங்கும் மலை" (பெரிய திருமொழி 1.8.2) என்று அருளிச்செய்கிறார் திருமங்கையாழ்வார். தெளிந்த அறிவுடையவர்களே தெள்ளியாராவர். அவர்களுக்குக் குழப்பம் கிடையாது. திருவேங்கடவனைத் திருமாலாகவே அவர்கள் துணிந்திருப்பார்கள். "நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும்" (பெரிய திருமொழி 11.6.3) "எம்பெருமான் உண்டுமிழ்ந்த எச்சில் தேவர் அல்லாதார் தாமுளரே" (பெரியதிருமொழி 11.6.2) என்று திருமங்கையாழ்வாரால் படைக்கப்படும் ஜீவர்களாக அறுதியிடப்பட்ட பிரமன், சிவன் முதலானவர்களைத் திருவேங்கடவனாகக் குழம்புப் மயக்கம் தெள்ளியாருக்குக் கிடையாது. * [கள்ள நூல்களை ஓதுகிறவர்களுக்கே உண்டு. இக்கருத்தையே திருமங்கையாழ்வார் "வெள்ளியார் பிண்டியார் போதியார் என்றிவர் ஓதுகின்ற கள்ள நூல் தன்னையும் கருமமன்றென்றுயக்கருதினையேல் தெள்ளியார் கைதொழும் தேவனார்" [பெரியதிரு 9.7.9] என்னும் பாட்டில் அருளியுள்ளார்.]* "வெள்ளியார் என்பது வெள்ளி மலையை இருப்பிடமாகக் கொண்ட ருத்ரனைக் குறிக்கும்" என்பது இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்யானம். நிற்க.

"திருவேங்கடவனை எந்த தெய்வமாக வேண்டுமானாலும் கொள்ளலாம்" என்பது சமீப காலத்தில் மற்ற தெய்வங்களுக்கு பக்தர்களாயிருப்பவர்களால் உருவாக்கப்பட்ட கொள்கையாகும். இதை ஆழ்வார் மேல் ஏற்றிடுவது முறையற்றது. "வெள்ளியான் கரியான் மணிநிறவண்ணன்" (பெரிய திருமொழி 9.10.3) என்று இதே தொடரைத் திருமங்கையாழ்வார் திருக்கோட்டியூரில் வாழும் எம்பெருமானுக்கும் வழங்கியிருக்கையாலே, திரு. கி. வா. ஜ. வின் கருத்து அடியோடு பொருந்தாது என்பது தெளிவாக விளங்குகிறது.

---

* * இக்குறிகளின் இடையே அடைப்பினுள் கொடுத்திருக்கும் இரு வாக்கியங்கள் ஸப்தகிரியில் எடுக்கப்பட்டுவிட்டன.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-34 ] [ ஒளி-9

# அத்வைத விசிஷ்டாத்வைத மதங்கள் ஒன்றுதானா ?

---

திருப்பதி கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தில் ரீடர் (Reader) பதவியை வகிக்கும் V. ஸ்வாமிநாதன், M.A.M.Lit., என்பவர் அனுப்பியிருந்த நூல்-அஞ்சல் (Book-Post) ஒன்று 10—8—81 அன்று நமக்குக் கிடைத்தது. அதில் ஓர் துண்டுக் கடிதத்தில் "जगद्गुरूणां कामकोटिमठाधिपानां ज्येष्ठानां स्वामिनां दिव्याज्ञया उपस्थाप्यते ऽयमुपहारः" [ஜகத்குரு காமகோடி பெரியமட$_2$ாதி$_4$பதி ஸ்வாமியின் தி$_3$வ்யாஜ்ஞையாலே இந்த உபஹாரம் (காணிக்கை) அனுப்பப்படுகிறது.] என்று எழுதப்பட்டிருந்தது. இத்துண்டுக் கடிதத்துடன் "சாதுர்மாஸ்ய ஸங்கல்ப வ்யாஸபூஜோபஸம்ஹார:" [சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தில் வ்யாஸபூஜையின் அழிவு] என்னும் தலைப்புடன் அச்சிடப்பெற்ற ஆறு பக்கமுள்ளதோர் சிறிய வெளியீடும் வைக்கப்பட்டிருந்தது. 'வ்யாஸ பூஜோபஸம்ஹார:' என்பதில் 'ஸம்' என்னும் எழுத்து அடிக்கப்பட்டிருந்தது. 'வ்யாஸ பூஜோபஹார:' [வ்யாஸபூஜைக்காணிக்கை] என்று அச்சிட எண்ணியது தெய்வஸங்கல்பத்தாலே 'வ்யாஸ பூஜோபஸம்ஹார:' [வ்யாஸபூஜையின் அழிவு] என்று அச்சிடப்பட்டுவிட்டது என்று விளங்குகிறது. நிற்க. தற்சமயம் பண்டரிபுரத்திலிருக்கும் காமகோடி பெரியபீடாதி$_4$பதியின் நியமனத்தால் நமக்கு அனுப்பப்பட்டிருக்கும் இச்சிறிய வெளியீட்டில் முதல்பக்கத்தில் நாலு ஶிஷ்யர்களோடு கூடிய ஆதிசங்கரரின் படமும், மூன்றும் பக்கத்தில் பாண்டுரங்கனின் சித்திரமும், ஆறும் பக்கத்தில் ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் திருவுருவப்படமும், நாலாம் பக்கத்தில் 'பாண்டுரங்காஷ்டகம்' என்னும் ஸ்துதியும் அச்சிடப்பெற்றுள்ளன. இவை பற்றி இப்போது விசாரமில்லை. இரண்டாம் பக்கத்தில், தற்சமயம் பரமபதவாஸியான திண்டுக்கல் (அட்வகேட்) ராடிஸ்வாமி ஐயங்கார் 'சங்கரருக்கும் ராமாநுஜனுக்கும் முக்கியமான விஷயங்களில் கருத்து வேற்றுமை இல்லை' என்று பொருள்பட எழுதிய ஆங்கிலக்கட்டுரை

அச்சிடப்பட்டுள்ளது. இந்த ஸ்வாமி இந்நிலவுலகில் இருந்தபோது " 'எல்லாம் ஶூந்யம்' என்னும் பௌத்தனைக் கண்டிப்பதற்காக 'ப்3ரஹ்மம் ஒன்றுவது ஸித்3தி4த்தால் போதும்' என்று ஆதிசங்கரர் அத்3வைத மதத்தை ஸ்த2ாபித்து, பௌத்தர்களை இந்த நாட்டை விட்டு விரட்டினர். அதற்குப் பின்பு ப்3ரஹ்மத்திற்கு கு3ணம், விக்3ரஹம், விபூ4தி முதலானவற்றைப் பிரமாணம்கொண்டு ஸாதிப்பது ராமாநுஜருக்கு எளிதாயிற்று. உண்மையில், சங்கரருக்கும் விஶிஷ்டாத்3வைதம் உடன்பாடேயாகும்" என்று அத்3வைத விஶிஷ்டாத்3வைத ஒற்றுமையைப் பிரசாரம் செய்துவந்தது உலகறிந்தது. காமகோடி பெரியபீடாதி4பதி தமது வியாஸபூஜை வெளியீட்டில் இதை அச்சிட்டிருப்பதால் இந்நிலையை ஒப்புக்கொள்கிறாரா என்பது உலகிற்குத் தெரியவேண்டும். நிற்க.

இவ்வெளியீட்டின் ஐந்தாம் பக்கத்தில் ஶாங்கரபா4ஷ்யம் 1-1-4 லிருந்து வாக்கியம் ஒன்றும், ராமாநுஜருடைய ஶ்ரீபா4ஷ்யம் 4-1-3, 4-4-4 ஆகியவற்றிலிருந்து சில வாக்கியங்களும் அச்சிடப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு:—

'अहं ब्रह्मास्मि' इत्येतदवसाना एव सर्वे विधयः सर्वाणि चेतराणि प्रमाणानि

—शाङ्करं ब्रह्मसूत्र भाष्यम्, १. १. ४.

उपास्यं ब्रह्म उपासितुः अन्यत्वेनोपास्यम्, उत उपासितुः आत्मत्वेन इति।... उपासितुः आत्मेत्येवोपास्यम्।............ यथा प्रत्यगात्मनः स्वशरीरं प्रति आत्मत्वात् 'देवोऽहम्' 'मनुष्योऽहम्' इत्यनुसन्धानं तथा प्रत्यगात्मनोऽपि आत्मत्वात् परमात्मनः ............ अहमित्येवानुसन्धानं युक्तं ............ अत उपासितुः आत्मत्वेन ब्रह्म उपास्यम्-इति स्थितम्।

– रामानुजीयं ब्रह्मसूत्र भाष्यम्, ४ १. ३.

अविभागेन 'अहं ब्रह्मास्मि' इत्येवानुभवति।

—रामानुजीयं ब्रह्मसूत्र भाष्यम्, ४ ४. ४.

இவற்றிலிருந்து 'இரண்டாம்பக்கத்தில் சங்கரர் ராமாநுஜர் இருவர் கொள்கையும் ஒன்றே என்னும் D. ராமஸ்வாமி ஐயங்காரின் கட்டுரைக்கு, 5-ம் பக்கத்திலுள்ள இரு மதாசார்யர்களின் பா4ஷ்யங்களிலுள்ள இவ்வாக்கியங்கள் ஆதாரமாயுள்ளன' என்று காமகோடிப் பெரிய பீடாதி4பதி கருதுவதாகத் தெரிகிறது. இந்த இரண்டு பா4ஷ்யங்களின் வாக்கியங்கள் ஒரே பொருளை எவ்வண்ணம் தெரிவிக்கின்றன என்பதற்கு எந்த விளக்கமும் கொடுக்கப்படவில்லை. இதில் விளக்கத்தைப் பெறவிரும்பி, இவ்வெளியீட்டை நமக்கு அனுப்பிய திரு V. ஸ்வாமிநாதன் அவர்களுக்கு நாம் 13—8—81 அன்று ரிஜிஸ்தர் தபால் மூலம் பின்வரும் கடிதத்தை அனுப்பி, அதன் நகலைப் பண்டரிபுரத்திலுள்ள காமகோடி பெரியபீடாதி4பதிக்கும் அனுப்பினோம்:—

அன்புடையீர் !

தாங்கள் அனுப்பிய சிறுவெளியீடும் துண்டுக்கடிதமும், உரிய காலததில் வந்து சேர்ந்தன. துண்டுக்கடிதத்தில், ''காமகோடிப் பெரியவாளின் ஆணையாலே இவ்வெளியீடு உங்களுக்கு உபஹாரிக்கப் படுகிறது'' என்று பொருள்பட வடமொழியில் எழுதியிருந்தீர்கள்.

ப்ரஹ்மஸூத்ர பாஷ்யங்களில், ஆதிசங்கரரும், ஸ்ரீராமாநுஜரும், ஒரே கருத்தையே தெரிவிக்கிறார்கள் என்னும் பொருள் தொனிக்கும் படி உங்கள் வெளியீடு அமைந்திருக்கிறது. ஆதிசங்கரரும், ஸ்ரீராமாநுஜரும் முக்கியமான இவ்விஷயத்தில் ஒரே கருத்துடையவர்கள் என்று தேறிவிட்டால், உண்மையில் அத்வைதிகளும் விசிஷ்டாத்வைதிகளும கொள்கையளவில் ஒன்றுகிவிடலாம். ஆனால் ஒரு சிறு வெளியீட்டின்மூலம் (அது எத்தனை பெரியவர் வெளியிட்டிருந்தாலும்) இவ்விஷயம் தேறிவிடாது. ஆதிசங்கரருடைய கருத்து என்ன என்பதை அவருடைய பாஷ்யங்கள் அனைத்தையும் கற்றறிந்த பண்டிதர் களே நிர்ணயிக்கமுடியும். அதுபோலவே ஸ்ரீராமாநுஜருடைய கருத்து என்ன என்பதை அவருடைய ஒன்பது நூல்களையும் கற்றறிந்த பண்டி தர்களே நிர்ணயிக்கமுடியும்.

ஆகையால் தங்களுக்கு சௌகர்யமான ஒரு தேதியில், அத்வைத, விசிஷ்டாத்வைத பண்டிதர்கள் பலர் வாழும் சென்னை மாநகரத்தில் ஓர் பண்டித ஸதஸ்ஸைக் கூட்டுவோம். அதற்கு அத்வைத, விசிஷ்டாத்வைத பண்டிதர்களை அழைப்போம். அத்வைத பண்டிதர்கள் அனைவரும் கூடி, ஆதிசங்கரரின் கருத்து என்ன என்பதை வட மொழியில் தெரிவிக்கட்டும். அதை நீங்களே ஆங்கிலத்திலும், தமிழி லும் மொழிபெயர்ப்பு செய்யுங்கள். விசிஷ்டாத்வைத பண்டிதர்கள் அனைவரும் கூடி, ஸ்ரீராமாநுஜரின் கருத்து என்ன என்பதை வட மொழியில் தெரிவிக்கட்டும். அதை யானே ஆங்கிலத்திலும், தமிழி லும் மொழி பெயர்க்கிறேன். மொழி பெயர்ப்புகள் சரியாக இருக் கின்றனவா என்பதை வடமொழியும், ஆங்கிலமும், தமிழும் தெரிந்த அனைவரும் சரிபார்த்துக் கொள்ளலாம்.

இருதரப்பு பண்டிதர்களின் கருத்துப்படி, ஜீவப்ரஹ்ம ஐக்கிய விஷ யத்தில் ஆதிசங்கரர், ஸ்ரீராமாநுஜர் என்ற இரண்டு மஹாசாரியர்களின் கருத்து ஒன்றே என்று தேறிவிட்டால், அவை வேறுபட்டவை என்று இதுகாறும் பிரசாரம் செய்து வந்த விசிஷ்டாத்வைத பண்டிதர்களாகிய நாங்கள் அனைவரும் அந்தப் பிரசாரத்தை நிறுத்திவிடுகிறோம். அது போலவே, அவ்விருவரின் கருத்து வெவ்வேறு எனத்தேறிவிட்டால் இந்த சிறு வெளியீட்டை வெளியிட்ட காமகோடி பீடாதிபதிகளும், அவ ரது சிஷ்யர்களும் இவ்விரு மகாசாரியர்களின் கருத்து ஒன்றே என்று பிரசாரம் செய்துவருவதை நிறுத்திவிடவேண்டும். இதற்குத் தாங்கள் ஸித்தமாக இருக்கிறீர்களா என்பதை மறு தபாலில் தாங்கள் எனக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன். இதுபற்றி இம்மாதம்

(25—8 81) அன்று வெளிவர இருக்கும் எனது ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் இதழில். அத்வைத. விசிஷ்டாத்வைத பண்டிதர்கள் அனைவருக்கும் வேண்டுகோள் விடுக்க இருப்பதால், தங்களுடைய பதில் எனக்கு21—8—81க்குள் கிடைக்கும்படி செய்வீர்கள் என நம்புகிறேன்.

எப்படியாவது வைதிகர்கள் அனைவரும் ஒற்றுமையுடன் இருக்க வேண்டும் என்பதே என் கருததும் ஆகும். ஆனால் அவ்வொற்றுமை பொய்யை அடிப்படையாகக் கொண்டிருந்தால் நீடிக்காது. உண்மையை அடிப்படையாகக் கொண்டிருந்தால்தான் நிரந்தரமாகவும், உறுதியாகவுமிருக்கும். அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும் அடிப்படைக் கொள்கைகளில் வேறுபட்டவை எனத்தெறிஞலும்,Tolerance எனப்படும் சகிப்புத்தன்மையின் அடிப்படையில் நாம் அனைவரும் ஒற்றுமையுடன் இருக்கலாம் என்பதை நான் நெடுங்காலமாக என் பத்திரிகையில் வலியுறுத்தி வருகிறேன். தங்கள் பதிலே ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

அன்பன்,

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்.

இக்கடிதத்திற்கு இன்று (22—8—81) வரை இருவரிடமிருந்தும் யாதொரு பதிலும் இல்லே. இனி பதில் ஏதாவது வந்தால் அடுத்த இதழில் தெரிவிக்கிறோம். காமகோடி பீடாதி₄பதியின் அபி₄மானத்திற்கும், ஸ்நேஹத்திற்கும் பாத்ரபூ₄தர்களும், மாஸ்த்ரஜ்ஞர்களுமான ஸ்ரீமதழகியசிங்கர், ஸ்ரீமதாண்டவன், ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஆகிய மூவரையும் இவ்விருமஹாசார்யர்களின் மேலே கண்ட ப₄ாஷ்யவாக்கியங்கள் ஒத்தகருத்துடையவையா என்பதை முறையே ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகா, ஸ்ரீராமாநுஜன் ஆகிய தமது பத்திரிகைகளில் விளக்கியருளும்படி பிரார்த்தி₂க்கிறேன். ஸ்ரீமதழகியசிங்கர் தற்சமயம் நடத்தும் மாலோலவித்வத்ஸதஸ்ஸிலும் இவ்விஷயம் பற்றி ஓர் நிர்ணயம் செய்யப்படவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

திரு ஸ்வாமிநாதனும், காமகோடி பீடாதிபதியும் இதுபற்றிப் பண்டித ஸதஸ் நடத்த இசைந்தால், அது பற்றிய அறிவிப்பு அடுத்த இதழில் வெளிவரும். நாம் 24—8—81 பிற்பகலில் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமதழகியசிங்கர் நடத்தும் மாலோலவித்வத்ஸதஸ்ஸிலும், 27—8—81 பிற்பகலில் ஸ்ரீகாஞ்சீ வரதராஜப் பெருமாள் ஸந்நிதி வீதியில் நடைபெறும் காதி கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் சதாபிஷேக விழாவிலும், 29—8—81 அன்று திருநாங்கூர் பார்த்தன்பள்ளி ஸம்ப்ரோக்ஷணத்திலும், 30-8-81அன்று புவனகிரியில் நடக்கும் ஸ்ரீவைஷ்ணவ மகாநாட்டிலும், 3,4—9—81 தேதிகளில் திருக்குறுங்குடி ஸம்ப்ரோக்ஷணத்திலும், 5—9—81 அன்று இரவு மதுரை கூடலழகர் சன்னிதியில் நடைபெறும் திவ்யப்ரபந்த விழாவிலும் கலந்துகொண்டு உரையாற்றவிருக்கிறோம். இவ்விடங்களில் அத்வைத விசிஷ்டாத்வைத பண்டிதர்கள் இது விஷயமாகத் தங்கள் கருத்தை என்னிடம் தெரிவிக்கலாம். இவ்வளைத்தும் அடுத்த (புரட்டாசி) இதழில் வெளியிடப்பெறும்.

# சங்க நூல்களும் கருணாநிதியும்

[ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ஸுதர்சனர்) அட்வகேட்,
ஆசிரியர், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.]

**2—8—81** இதயம் பத்திரிகையில் கலைஞர் கருணாநிதியின் முரசொலியிலிருந்து ஒரு கட்டுரை வெளியிடப்பட்டுள்ளது. அதில் "யாயும் ஞாயும்" என்று தொடங்கும் களவியல் சங்கப்பாடல் ஒன்று கொடுக்கப்பெற்று, சங்ககாலத்தில் தற்போதுள்ள வைதிக மணமுறைகள் இருந்ததில்லை என்றும், காதற்கல்யாண முறைகளே இருந்தனவென்றும்,

"அவை பையப்பைய—மெல்லமெல்ல, ஆனால் மிகத் தந்திரமாக நம்முடைய நாட்டிலே அகற்றப்பட்டு, வேறு முறைகளுக்கு நாம் அடிமையாக்கப்பட்டு, திருமணம் என்றால் அதற்கு நீங்களெல்லாம் வந்தால் போதாது. சேலம் பொதுமக்கள் வந்தால் போதாது — உற்றார் உறவினர் வந்தால் போதாது, திருமணத்திற்கு சாட்சி வழங்க புரோகிதர் வரவேண்டும். புரோகிதர் வந்தால் போதாது, முப்பத்திமுக்கோடி தேவர்கள், நாற்பத்தி எட்டாயிரம் ரிஷிகள், கந்தர்வர், கின்னரர், கிம்புருடர், அட்டத்திக்குப்பாலகர்—இப்படிப் பட்ட ஒரு பெரிய கடவுள் கம்பெனியே வரவேண்டும் என்ற அளவிற்கு அவ்வளவு ஆட்களும் வந்து நடைபெறுகிற திருமணம்தான் நன்றாக இருக்கும் என்கிற ஒரு நச்சு நினைவு நம்முடைய உள்ளத்திலே பதிய வைக்கப்பட்டுவிட்டது." [முரசொலிக் கட்டுரை]

என்றும் கருணாநிதி ஒரு மணவிழாவில் பேசியதாக அச்சிடப்பட்டுள்ளது. இது தொல்காப்பியம் முதலான சங்க இலக்கண இலக்கியங்களுக்கு முரணாய் உள்ளது. தொல்காப்பியம் பொருளதிகாரம் மூன்றாவது ஒத்தான களவியலில் முதல் சூத்திரத்தில் "**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**" என்று உள்ளது. "மறையோர் என்றது அந்தணரை. தேஎம் என்றது அவரதாகிய நூலை. மணம் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன" என்பது அவ்விடத்தில் இளம்பூரணர் உரை. இந்த எட்டு வகை மண முறைகளுள் காந்தருவமாகிய களவியலும், பிரமமாகிற கற்பியலும் சங்ககாலத்தில் வழக்கில் இருந்தன

என்பது — களவியலும் கற்பியலும் தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் மூன்ருவது நான்காவது ஓத்துக்களில் விவரிக்கப்பட்டிருப்பதிலிருந்தே விளங்கும்.

"யாயும் ஞாயும்" என்னும் சங்கப்பாடல் 'களவிய'லைச் சேர்ந்தது. தொல்காப்பியத்தில் களவியலைக் காட்டிலும் கற்பியலே மிகச்சிறப்புற்றது என்று காட்டப்பட்டுள்ளது. வேதமந்திரங்களைக் கொண்டு செய்யப்படும் சடங்குகளை உடையது கற்பியல். இது இன்றளவும் வழக்கிலுள்ளது. இதுபற்றிய தொல்காப்பியச் சூத்திரங்கள் பொருளதிகாரத்தில் கற்பியலில் உள்ளன.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபிஞேர் கொடுப்பக் கொள்வதுவே"

[கற்பியலாவது:- திருமணச் சடங்குகளோடு கூட, கொள்ளுதற்குரிய குலமுறையையுடைய மணமகன், மணமகளைக் கொடுத்தற்குரிய குலமுறையையுடையவர்கள் கொடுக்க, ஏற்றுக்கொள்வதேயாகும்.] என்பது கற்பியலில் முதல் சூத்திரம். "கரணம் என்பது வதுவைச்சடங்கு" என்பது இளம்பூரணர் உரை.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"

[(களவியலில்) பொய் கூறுதலும், வழுப்பட ஒழுகுதலும் தோன்றிய பின்னர் முனிவர்கள் சடங்குகளை ஏற்படுத்தினுர்கள் எனச் சான்ருேர் கூறுவர்.] என்பது இதில் நாலாவது சூத்திரம். இதிலிருந்து களவியலில் மணம் புரிந்த பலர், துஷ்யந்தனைப் போலே 'மணம் புரியவில்லை' எனப் பொய் கூறியதாலும், 'மணம் புரிந்ததற்கு சாட்சியில்லை' [illegible]ரியத்தில் பட்டிமேய்ந்ததாலும் களவியல் பலரைத் [illegible]யிற்று என்றும், அதனுலேயே போதா-

யநர், ஆபஸ்தம்பர், ஆச்வலாயனர், வைகாநஸர் முத லான பல முனிவர்கள் க்ருஹ்ய சூத்திரங்களை இயற்றி மண வினைச்சடங்குகளை வகுத்தனர் என்றும் விளங்கு கிறது. இது 2500 வருடங்களுக்கு முன் தொல்காப்பி யத்தை எழுதிய சங்ககாலச் சான்றோரான தொல்காப்பி யரின் கருத்து. இப்படியிருக்க, இந்த முனிவர்கள் வகுத்த சடங்குகள் நம்மைத் தலைகுனிய வைப்பவை என்று கருணாநிதி கதைப்பது தொல்காப்பியரை மறுப்பதே யாகும்.

"முப்பத்துமுக்கோடி தேவர்கள்......இப்படிப்பட்ட ஒரு பெரிய கடவுள் கம்பெனியே வரவேண்டும்......என்கிற நச்சு நினைவு" என்கிறார் கருணாநிதி. 2000 வருடங் களுக்கு முன் சங்ககாலத்தில் இயற்றப் பெற்ற எட்டுத் தொகை நூல்களில் ஒன்றான பரிபாடல் மூன்றாம் பாட லில், "மாஅயோயே! மாஅயோயே! மறுபிறப்பு அறுக் கும் மாசுஇல் சேவடி மணிதிகழ் உருபின் மாஅயோயே!" என்று மோக்ஷமளிக்கும் திருவடிகளையுடைய திருமாலை விளித்து, "விதியின் மக்களும், மாசுஇல் எண்மரும், பதினொரு கபிலரும், தா மா இருவரும், தருமனும், மடங்கலும், மூ ஏழ் உலகமும், உலகினுள் மன்பதும் மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம் மாயா வாய்- மொழி உரைதர வலந்து" என்று பன்னிரு ஆதித்யர்கள், எட்டு வஸுக்கள், பதினொரு உருத்திரர்கள், அசுவிநீதேவர் இருவர் எனும் முப்பத்துமூவரைத் தலைவராகக்கொண்ட முப்- பத்து முக்கோடி தேவர்களும், உலகிலுள்ள எல்லாப்பொருள் களும் மாயோனாகிற திருமாலிடமிருந்தே தோன்றின என்று வேதம் முழங்குகிறது எனப் பறைசாற்றினார் கடுவன் இளவெயினனார் எனும் சங்ககாலப் பெரும்புலவர். இதி லிருந்து முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் தலைவனான திருமாலே அனைத்துலகையும் படைத்தவன் என்னும் கொள்கையை உறுதியாகப் பின்பற்றும் ஆத்திகசிகாமணிக ளாயிருந்தவர் சங்ககாலப்பெருமக்கள் என விளங்குகிறது.

இவ்விஷயத்தை நாம் * "சங்ககாலத் தமிழர் சமயம்" எனும் ஆராய்ச்சி நூலாக எழுதி அச்சிட்டு, மதுரையில் உலகத் தமிழ் மாநாட்டிற்கு வந்திருந்த தமிழறிஞர்களுக்கும், மற்றும் தமிழ்நாட்டிலுள்ள ஆயிரக்கணக்கான தமிழறிஞர்களுக்கும் வழங்கியிருக்கிறோம். எவராலும் இது காறும் இதை மறுக்க இயலவில்லை. கலைஞர் கருணாநிதி அவர்களுக்கும் இந்நூலை, இக்கட்டுரையுடன் அனுப்புகிறோம். இயலுமானால், அவர் நடுநிலைநின்று இதை விமர்சிக்கலாம்.

ஆகையால், ஆத்திகம் நச்சு நினைவு அன்று என்றும், 'கடவுள் இல்லை' என்னும் கொள்கையே சங்ககாலச் சான்றோர் ஒவ்வாத நச்சுக்கொள்கை என்றும் நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

சங்ககாலத்திற்குப் பிறகு எழுந்த சிலப்பதிகாரத்தில் புகார்க்காண்டம் மங்கல வாழ்த்துப் பாடலில் ( 52-53 )

"மாமுதுபார்ப்பான் மறைவழிகாட்டிடத்
தீவலஞ்செய்வது காண்பார்கள்நோன்பு என்னை !"

என்றும், ஆண்டாளின் 'வாரணமாயிரம்' பதிகம்முழுவதிலும் மற்றும் கம்பராமாயணம் முதலான நூற்றுக்கணக்கான தமிழ் நூல்களிலும் வைதிகச் சடங்குகளோடுகூடிய மணவினையின் பெருமைகள் விரிவாகக் காட்டப்பட்டுள்ளன. ஆகையால், கருணாநிதியின் கொள்கை சங்ககாலம் தொடங்கி, இக்காலம் வரையிலுள்ள சான்றோர்களின் கருத்துக்கு முரணானது என்றும், படிக்காத பாமரர்களைப் பையப் பையத் தந்திரமாக ஏமாற்றுவதற்காகச் சமீபகாலத்தில் நாத்திகர்களால் உருவாக்கப்பட்டது என்றும் நடுநிலைநிற்கும் நல்லோர்களுக்கு நன்கு விளங்கும்.

---

* "சங்ககாலத் தமிழர் சமயம்" எனும் இந்நூல் ரூ. 1-50 [illegible] கிடைக்கும்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-34] [ஒளி-10

# காமகோடி பீடாதிபதிக்கு பகிரங்கக் கடிதம்

[ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B. L., அட்வகேட்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.]

**"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்"** [திருக்குறள் 293]

23 வருடங்களுக்கு முன் நீர் 'விஷ்ணுவுக்குத் தமோகுணம் உண்டு' என்று எல்லாப் பத்திரிகைகளிலும் பிரசாரம் செய்தபோது நாம் ஏராளமான ஆதாரங்களைக் காட்டி 'ஸாத்விக விஜயம்' என்னும் நூல் எழுதி, உமது வாதத்தை அடியறுத்தோம். இன்று வரை நீரோ உமது ஶிஷ்யர்களோ இந்நூலுக்கு மறுப்பெழுத இயல வில்லை. உம்முடைய ஶிஷ்யர்கள் ஆட்சிபுரியும் கல்கி, விகடன், கலைமகள், அமுதசுரபி முதலான பத்திரிகைகளில் 'ராமனுக்கு ப்₃ரஹ்மஹத்தி பாபம் ஏற்பட்டது', 'கண்ணனுக்கு வீரஹத்தி பாபம் ஏற்பட்டது' முதலான நூற்றுக்கணக்கான விஷ்ணு வைஷ்ணவ த்₃வேஷ ப்ரசாரங்களைச் செய்து, அவ்வப்போது என்னிடமிருந்து ஆதாரத்தோடு கூடிய மறுப்புகளைப்பெற்று, வாய்திறவாமல் இருக்கிறீர். 23 வருடங்களுக்கு முன்பே உம்முடைய சர்வமதசமரசவாதத்தை 'சர்வ சமய சமரசம்' [Toleration or Equalisation] என்னும் நூலில் தலையெடுக்க முடியாதபடி நான் கண்டித்திருந்தும், அதற்கு யாதொரு பதிலும் சொல்ல இயலாமல் 'எல்லா மதங்களும் ஒன்றே' என்னும் பொய்வாதத்தைத் திருப்பித் திருப்பி வெளியிட்டு வருகிறீர். கடந்த 23 வருடங்களாக ஸுதர்சனத்தில் வெளிவந்துள்ள பல கட்டுரைகளிலும், கடந்த சில வருடங்களாக வெளிவரும் ஸுதர்சனர் பதில்கள் பலவற்றிலும் உமது போலிச் சமரசவாதம் தலையெடுக்க முடியாதபடி கண்டிக்கப்பட்டிருக்கிறது. இவற்றுக்கு எந்த பதிலையும் எழுத இயலாமல் 'சாதுர்மாஸ்ய ஸங்கல்ப வ்யாஸ பூஜோபஹார:' என்னும்

தலைப்பில் ராமாநுஜ சங்கரப4ாஷ்யங்கள் ஜீவப்3ரஹ்ம ஐக்யவிஷயத்தில் ஒத்த கருத்துடையவை என்று தொனிக்கும் சுவடியொன்றை வெளியிட்டு, அதைத் திருப்பதி ஸம்ஸ்க்ருத வித்3யாபீட2த்தில் ரீடராயிருக்கும் V. ஸ்வாமிநாதன் மூலம் எனக்கும், பல விசிஷ்டாத்3வைத வித்3வான்களுக்கும் அனுப்பியிருக்கிறீர். அத்3வைத விசிஷ்டாத்3வைத பண்டி3தர்களின் ஸதஸ்ஸைக் கூட்டி உமது சுவடியில் உள்ளதை நிரூபிக்கவேண்டும் என்று அறைகூவி, நாம் சென்றமாதம் எழுதிய தலையங்கத்தை உமக்கும் ஸ்வாமிநாதனுக்கும் அனுப்பியிருந்தும் நீங்கள் வாளாவிருப்பதிலிருந்து உமது சுவடியிலிருப்பது ப்3ரஹ்மாண்டப்புளுகு என்பது உமக்கே தெரியும் என்று விளங்குகிறது. கடந்த ஒரு மாதமாக நாம் நூற்றுக்கணக்கான ஸ்ரீவைஷ்ணவ பண்டி3தர்களையும், மதுரையிலுள்ள ப்ரஹ்மஸ்ரீ சங்கரநாராயண சர்மா போன்ற அத்3வைத பண்டி3தர்களையும் கண்டு உமது சுவடியைக் காட்டிக் கருத்துரைக்கும்படி கேட்டோம். பலர் உமது ஆணையால் V. ஸ்வாமிநாதனால் தமக்கும் இச்சுவடி அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரிவித்தனர். அனைவரும் ஒருமுகமாக நீர் இச்சுவடியை வெளியிட்டிருப்பது மிகவும் நேர்மையற்றது என்று கூறுகிறார்கள். இரண்டு ப4ாஷ்யங்களையும் நன்கு கற்ற ச்ருங்கேரி பீட2ாதி4பதி இதை ஒரு நாளும் ஒப்புக்கொள்ளமாட்டார் என்று சங்கரநாராயணசர்மா கூறுகிறார். ச்ருங்கேரி பீட2ாதி4பதியையே மத்4யஸ்த2ராக வைத்து, இந்தச் சுவடியில் நீர் எழுதியுள்ள விஷயத்தை நிலைநாட்டமுடியுமா? இந்த எனது அறைகூவலுக்கும் யாதொரு பதிலும் கூறாமல் மேன்மேலும் போலிச்சமரசவாதத்தையே நீர் எழுதி வருவீர் என்பது நடுநிலையாளர் அனைவர்க்கும் தெரியும்.

நீரும் உமது சிஷ்யர்களும் பத்திரிகைகள் அரசியலாருடைய பக்கபலத்தோடு செய்யும் இந்தப் போலிச்சமரச வாதத்தாலேயே பெரும்பாலான சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் தங்கள் மதத்தில் பற்றில்லாமல்போய் ஏராளமானவர்கள் மதம்மாறும் நிலைமை ஏற்பட்டுவிட்டது என்பதை இனியாவது உணர்ந்து, இந்தப் போலிச் சமரசவாதத்தைக் கைவிட்டு, சைவத்தையும் வைணவத்தையும் உறுதியான அடிப்படையில் வளரவிடும் நல்லெண்ணத்தை உமக்கு ஆதி பரம்பொருள் அளிப்பதாகுக. நீர் செய்யும் சைவ சாக்த வாதங்களின் பயனாக—அவ்வப்போது உம்மிடம் ஆலோசனை கேட்டுப் பத்திரிகை நடத்தும் உமது சிஷ்யரான மணியன் "ஆண் பெண் உடலுறவே (அது வரம்பு மீறியதாயினும்) மோக்ஷஸாதனமாகும்" என்னும் ரஜ்னீஷின் கொள்கையை ஆதரிக்கத் தொடங்கிவிட்டார். மணியனுக்கு பகிரங்கக் கடிதம் எழுதி இதைக் கண்டித்து, அதன் பிரதியை உமக்கும் அனுப்பியிருக்கிறேன். நாட்டில் ஒழுக்கம் நிலைகுலையாமலிருப்பதற்கு உமது சிஷ்யரான மணியனைக் கண்டித்துத் திருத்துவீர் என்று எதிர்பார்க்கிறேன்.

---

# மணியனுக்கு பகிரங்கக் கடிதம்

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ஸுதர்சனர்),
*ஆசிரியர் : 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'*
3, புத்தூர் அக்ரஹாரம், *திருச்சி*-17.]

வள்ளுவன் வழிநிற்பதில் பெருமை கொள்வது நம் செந்தமிழ்நாடு. பிறனில் விழையாமையைப் பேராண்மையாகவும், பெருநெறியாகவும் தமிழர்களுக்கு வகுத்துத் தந்தவர் வள்ளுவர். உபநிஷத்துக்கள், இராமாயணம், கீதை முதலான சாத்திரங்கள் காட்டிய நெறியையே வள்ளுவனார் தலைசிறந்த நெறியாக வெளியிட்டார்.

இப்படியிருக்க, "இதயம்" 13—9—81 இதழில் 'பகவான் ரஜனீஷ்" என்னும் கட்டுரையில் " 'செக்ஸ்' ஒரு பாவமல்ல... ஆனால் இறைவனோடு ஐக்கியப்படும் பேரானந்தத்துக்கு ஒரு பாலபாடம் (Kindergarten of Paradise)...பேரின்பத்துக்கு அது ஓர் ஆரம்பம்...அதன்மூலமே அவனை தரிசிக்க முடியும்!" என்று கூறும் ரஜனீஷின் கொள்கைகளை ஆதரித்து எழுதியிருக்கிறீர்கள். ஆணும் பெண்ணும் நிர்வாணமாக உடலுறவுகொண்டு மயங்கிநிற்கும் புகைப்படங்களையும் வெளியிட்டிருக்கிறீர்கள்.

நம் சாத்திரங்களும், குறளும் ஆணும் பெண்ணும் உடலுறவு கொள்வதைப் பாவமென்று கூறவில்லை. மணவினைக்குப் புறம்பாக உடலுறவுகொள்வதையே பாவம் என்று கூறின. ரஜனீஷ் வரம்புமீறிய உடலுறவினாலும் இறைவனை தரிசிக்கலாம் என்று கூறுகிறார். இதை நீங்கள் ஆதரிப்பது வள்ளுவத்தாலும், ராமாயணத்தாலும் பாதுகாக்கப்பட்டுவரும் நம் நாட்டின் ஒழுக்கநிலைக்கு உலைவைப்பதாகும்.

கண்ணனின் ராசலீலையைச் சான்றாகக் காட்டுகிறீர்கள். ராசலீலையை வர்ணிக்கும் பாகவதம், பாத்மம் முதலான புராணங்கள் கண்ணனுக்கும், கோபியருக்கும் உடலுறவு ஏற்பட்டதாகவோ, வீரியம் வெளிப்பட்டதாகவோ கூற

வில்லை. நேர்மாருக 'அஸ்கலித நித்ய ப்ரஹ்மசாரி' [வீர்யம் வெளிப்படாத நித்யப்ரஹ்மசாரி] 'அநாதி-ப்ரஹ்மசாரி' என்று கண்ணனைப் பாராட்டி, கண்ணன் கோபியரை அணைத்தது பரமாத்மா ஜீவாத்மாக்களை அணைத்ததேயாகும் என்றே முழங்கியுள்ளன.

சிவாலயங்களில் ஆவுடையார் அமைப்பையும், கும்ப கோணத்திற்கருகே உள்ளதொரு ஆலயத்தில் சக்தியின் அந்தரங்க உறுப்பிற்குப் பூஜை செய்வதாக தேவியின் சிலை அமைந்திருப்பதையும் காட்டி, செக்ஸ் உணர்வின் மூலமும் இறைவனை அறியலாம் என முடிவு கட்டுகிறீர்கள்.

சைவத்தில் உள்ள மகாரபஞ்சகம் முதலானவை மக்க ளின் ஒழுக்கத்தைச் சீர்குலைத்துவிடும் என்று உணர்ந்து சைவசித்தாந்திகள் அவற்றை 'வாமாசாரம்' என ஒதுக்கி யிருப்பது தாங்கள் அறியாததல்ல.

"தகாத உடலுறவு நரகத்தையே அளிக்கும். கணவன் மனைவியரிடையேயும் உடலுறவின்மூலம் இறைவனை அடைவ தென்பது ஒரு நாளும் இயலாது. தமது தவமுயற்சியாலோ, இறைவனது அருளாலோ படிப்படியாக உடலுறவில் பற்றற்ற பின்பே எச்சாதியினரும், எந்த ஆச்ரமத்தவரும் இறைவனைப் பற்றி மோக்ஷத்தை அடையமுடியும்" என்பது வைணவத்தின் உறுதியான கொள்கை. 'உடலுறவினை ஒறுத்த ஸந்யாஸி களே மோக்ஷமடையமுடியும்' என்பது அத்₃வைதமதத்தின் உறுதியான கொள்கை. சைவசித்தாந்தத்தின் நிலையும் இவ்விஷயத்தில் வைணவத்தை ஒத்ததாகவே இருக்க வேண்டும். இதுபற்றி சிருங்கேரி காமகோடி பீடாதிபதிகள், சைவ மதத்தலைவர்கள்,வைணவ மதத்தலைவர்களின் கருத்தை யும் வள்ளுவர் வழிநிற்கும் தமிழர்களது கருத்தையும் வெளி யிடுவதன்மூலம் தமிழ்நாட்டின் ஒழுக்கநிலையை உறுதிப் படுத்துவீர்கள் என நம்புகிறேன்.

—❊—

# இராவணன் கொடியவனே

[ ஸெப்டம்பர்' 81 ஸப்தகிரியில் வெளிவந்தது ]

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L., அட்வகேட்,
ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.

ஜூலை' 81 ஸப்தகிரியில் 'தேவாரத்துள் இராமாயணம்' என்னும் கட்டுரையில் "இராவணன் கொடியவனே என்று எண்ணலாகாது" என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் 300 பதிகங்களிலும், திருஞானசம்பந்தர் 400 இடங்களிலும் இராவணன் பெருமையைப் பாடியிருப்பது இதற்கு ஆதாரமாகக் காட்டப்பட்டுள்ளது. இக்கருத்து சரியானதா என்பதை இங்கு ஆராய்வோம்.

இராவணன் சிவ பக்தனுகையால் நாயன்மார்கள் அவன் பெருமையை நூற்றுக்கணக்கான பாடல்களில் பாடியிருக்கலாம். ஆனுல் வால்மீகி ராமாயணத்தையும், கம்பராமாயணத்தையும், ஆழ்வார்களுடைய பாசுரங்களையும், காளிதாசன் முதலான ராம சரிதம் பாடிய நூற்றுக்கணக்கான கவிகளின் நூல்களையும் நடுநிலை நின்று ஆராய்ந்தால் 'இராவணன் கொடியவனே' என்பதை எவரும் மறுக்க இயலாது.

வீர்யம், தைர்யம், பராக்கிரமம், ஐச்வர்யம், பலம், ரூபம், காந்தி, இசையறிவு, வேதாத்யயனம், சிவபக்தி முதலான பல பெருமைகள் இராவணனுக்கு உண்டு என்பதை எவரும் மறுப்பதில்லை. இவனைக் கண்டவுடன் அநுமன் இவனுடைய இப்பெருமைகளையெல்லாம் கண்டு வியந்து "இவ்வளவு பெருமைகளையுடைய இவன் அறத்தை மீறியவனுயிருக்கிருனே" என்று வருந்தியதாக வால்மீகி ஸுந்தரகாண்டத்தில் (49-18) கூறியிருக்கிருர். பலவிடங்களில் இவன் செய்த அதர்மச் செயல்களை விரிவாக விளக்கியிருக்கிருர். தேவர்கள் இராவணனைப் பற்றிப் பிரமனிடம் முறையிடும்போது,

"உத்வேஜயதி லோகாம்ஸ்த்ரீந் உச்ச்ரிதாந் த்வேஷ்டி துர்மதி:"
(பாலகாண்டம் 5.8)

[இராவணன் மூவுலகங்களையும் அருவருப்படையச் செய்கிருன். தீய அறிவுடையவனுகையாலே உயர்ந்தவர்களிடமெல்லாம் துவேஷம் கொள்கிருன்] என்று தொடங்கி, இராவணன் பல அடாத செயல்களைச் செய்கிருன் என்று விரிவாக விளக்கியிருக்கிருர்.

"அஸ்ய க்ரூரை: ந்ருசம்ஸை: ச கர்மபிர்லோககுத்ஸிதை: |
தேவா பிப்யதி ஸர்வஸ்மால்லோகா: ஸாமரதாநவா: ||"
(ஸுந்தரகாண்டம் 49.19)

[இவ்விராவணனுடைய கொடியவையாய், பயங்கரமானவையாய், உயர்ந்தோர் அனைவராலும் இகழப்படுபவையான க்ரியங்களால் தேவர்கள், தானவர்களை உள்ளிட்ட எல்லா உலகங்களும் இவனைக் கண்டு பயப்படுகின்றன] என்று அநுமன் வாயிலாகக் கூறியிருக்கிருர். இப்படி வால்மீகிராமாயணத்தில் நூற்றுக்கணக்கான இடங்கள் உண்டு.

கம்பராமாயணத்திலும் திருவவதாரப்படலத்தில்,

"ஐயிருதலையினேன் அனுசராதியாம் மெய்வலி அரக்கரால்
விண்ணும் மண்ணுமே செய்தவம் இழந்தன" 18

"அரக்கர் என்றுளார் பொங்கு
மூவுலகையும் புடைத்து அழித்தனர்" 19

என்று திருமாலை நோக்கி தேவர்கள் இராவணனின் கொடுமைகளை முறையிட்டதாகக் கம்பநாட்டாழ்வான் காட்டுகிறான். இத்தகைய இடங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன. பல பாஷைகளில் ராமசரிதம் பாடிய காளிதாசன் முதலான பற்பல கவிகளின் காவியங்களிலும் நூற்றுக்கணக்கான இடங்களில் இராவணனின் அடாத செயல்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆழ்வார்களும் நூற்றுக்கணக்கான பாசுரங்களில் 'இராவணன் கொடியவர்களில் முன்னிற்பவன்' என்று பாடியிருக்கிறார்கள். "கொடியான் இலங்கை செற்றேனே என்னும்" [திருவாய்மொழி 5.6.9] என்றார் நம்மாழ்வார். "கொடுமையில் கடுவிசையரக்கன்" [பெரியதிருமொழி 5.7.7] "முன்பொலா இராவணன்" [திருக்குறுந்தாண்டகம் 15] என்றார் திருமங்கையாழ்வார். "பொல்லா அரக்கன்" [திருப்பாவை 13] என்றாள் ஆண்டாள். இப்படிப் பலவிடங்கள் உண்டு.

இராவணன் பல பெருமைகள் பெற்றவன் என்பது வேறு விஷயம். ஆயினும் கணக்கிலடங்காத பல கொடுஞ்செயல்களைப் புரிந்தவன். அவற்றிற்கெல்லாம் சிகரமாக ஜகன்மாதாவான சீதாபிராட்டியைச் சிறையெடுத்தவன் என்பதும் அனைவரும் இசைந்தது. இவையிரண்டையும் ஒன்றாக்கிக் குழப்புகிறார் கட்டுரையாளர்.

எனது நண்பர் ஒருவர் கூறிய உண்மை நிகழ்ச்சியொன்று இங்கு அனைவராலும் அறியத்தக்கது. ஓர் ஊரில் இராவண பக்தரான ஒரு நீதிபதியிருந்தார். அவர் அடிக்கடி நீதிமன்றத்தில் இராவணன் புகழ்பாடி வந்தார். அவர் நீதிபதியாயிருப்பதால் வழக்கறிஞர்கள் அவர் கூறுவதைப் பொறுத்துக் கொண்டிருந்தனர். ஒரு நாள் நீதிபதியின் இராவண பஜனை எல்லைமீறிப் போயிற்று. இதைப் பொறுக்கமுடியாத ஒரு தைரியசாலியான வழக்கறிஞர் "Your Honour should wait till your Houour's wife is abducted" [மேன்மை தங்கிய நீதிபதியவர்கள் தமது மனைவியை ஒருவன் இழுத்துக் கொண்டு போவதுவரையில் பொறுத்திருந்துவிட்டு அதற்குப்பின் இராவணன் புகழ்பாடுவது நல்லது] என்று கூறினாராம். அதற்குப் பின் நீதிபதி இராவணன் புகழ் பாடுவதை நிறுத்திக்கொண்டு விட்டார் என்று கேள்வி.

நம் நாட்டில் இராமராஜ்யம் ஏற்படவேண்டுமென்றே எவரும் விரும்புவர். இராவண ராஜ்யத்தை எவரும் விரும்பமாட்டார் என்பது வெளிப்படை.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
சோதி-34] [ஒளி-11

# மதமாற்றத்துக்கு முக்கியகாரணமும் பரிஹாரமும்

சமீபத்தில் இஸ்லாம் மதத்திற்கும், புத்தமதத்திற்கும் ஹரிஜனங்கள் கூட்டம் கூட்டமாக மதம் மாறுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. வெளிநாட்டுப் பணத்தின் தூண்டுதல், அரிஜனங்களை இந்துக்களில் மேல்ஜாதியினர் துன்புறுத்துவது என்னும் இரு காரணங்கள் பத்திரிகைகளால் விளம்பரம் அடைந்துள்ளன. இவை மத மாற்றத்துக்குக் காரணங்களே என்பதை எவரும் மறுக்க இயலாது. ஆனால் நீண்ட நாளாக இந்துக்கள் முஸ்லிம்களாகவும், கிறிஸ்தவர்களாகவும் மாறிவருவதற்கு மற்றும் ஒரு முக்கியமான காரணமும் உண்டு. வோட்டு வேட்டையாடும் அரசியல் வாதிகளும், பத்திரிகை விற்பனைக்காக எதையும் செய்யத்துணிந்த பொதுஜனப் பத்திரிகையாளர்களும் இந்துக்களில் பெரும்பான்மையினரின் விரோதத்திற்கு அஞ்சி இக்காரணத்தை மறைத்து வருகிறார்கள். அதை விளக்கிப் பரிஹாரம் உரைப்பதே இத்தலையங்கத்தின் நோக்கம்.

'ஆத்மாவின் உய்வுக்கு வழிகாட்டுவது மதம்' என்பது மதத்திற்கு எல்லா மதத்தினராலும் இசையப்பெற்ற இலக்கணமாகும். "விஷ்ணுவின் அருளுக்கு இலக்கானால் ஜீவன் பிறவித்துன்பம் நீங்கப்பெற்று, மோக்ஷமடைந்து உய்வுபெறலாம்" என்பது வைஷ்ணவ மதம். சைவமதத்தில் விஷ்ணுஸ்தானத்தில் சிவனை வைத்து ஆத்மா உய்வதற்கு வழிகாட்டப்படுகிறது. "மஹாவாக்யங்களின் பொருளை அறிந்து, தானே ப்₃ரஹ்மம் என்று உணர்வதே ஜீவன் மோக்ஷமடைய வழி" என்பது அத்₃வைதமதம். நம் நாட்டில் இம்மூன்று மதங்களுமே ஆயிரம் வருஷங்களுக்கு மேலாக வைதிகர்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன. இவற்றினிடையே போட்டியும், பொறாமையும், வாதப்ரதிவாதங்களும் ஆயிரம் வருஷங்களாக இடைவிடாமல் இருந்து வருகிறது. அத்₃வைதமதம் காலக்ரமத்தில் ஶிவவிஷ்ணு சமரசவாதமாகவும், ஷண்மத சமரசவாதமாகவும், ஸர்வதே₃வ சமரசவாதமாகவும் பரிணமித்தது. இதற்கிடையில் 19, 20 நூற்

ருண்டுகளில் இந்த நாட்டை ஆண்ட வெள்ளையர்கள் பாரததேசத்துக்கு இந்தியா என்றும், பாரத மக்களுக்கு இந்துக்கள் என்றும், வைதிக மதங்கள் எல்லாவற்றுக்கும் சேர்த்து இந்துமதம் என்றும் பெயர் வைத்தனர். வெள்ளையர்களை எதிர்த்துப் போராடிய அரசியல்வாதிகள் ஒன்று திரண்டு எதிர்க்கவேண்டியிருந்தபடியாலே சைவம், வைஷ்ணவம், அத்வைதம் எனும் தனித்தனிப் பெயர்கள் வேற்றுமையை வளர்க்கும் என்று கருதி, இந்து, இந்துமதம் என்னும் பெயர்களை ஏற்றுக்கொண்டனர். 'எம்மதமும் சம்மதம்' என்னும் பொய்வாதத்தையும் பரப்பி, மத அறிவற்ற பாமரமக்களில் பெரும்பான்மையினரை ஏற்றுக்கொள்ளச் செய்துவிட்டனர். 'உலகம் பொய், ஜீவனும் ப்₃ரஹ்மமும் ஒன்று' என்னும் தங்கள் மதம் உலகநடைக்கு ஒவ்வாது என்று கருதிய அத்₃வைதிகள் காலக்ரமத்தில் சைவர்களாகவும், சாக்தர்களாகவும் மாறி, சைவ சாக்தர்களையும் சேர்த்துக்கொண்டு சைவ சாக்தமதங்களை ப்ரசாரம் செய்யும்போது, கூடவே 'எல்லா தெய்வங்களும் ஒன்று. எம்மதமும் சம்மதம்' என்னும் போலிச்சமரசவாதத்தை லட்சக்கணக்கானவர்கள் படிக்கும் பொதுஜனப் பத்திரிகைகள்மூலம் பிரசாரம் செய்துகொண்டு வருகின்றனர். இதனால் சைவர்களிலும், வைஷ்ணவர்களிலும் கோடிக்கணக்கான ஜனங்கள் தங்கள் தங்கள் மதங்களில் ஊற்றமில்லாதவர்களாகிவிட்டார்கள். குறிப்பாக, ஹரிஜனங்கள் வைஷ்ணவர்களாக மாறி, ஒழுக்கத்தால் உயர்வதற்கு வழியில்லாமல் போயிற்று. ஆடு, கோழி, கள் முதலானவற்றைச் சிறுதெய்வங்களுக்குப் படைத்து, தாங்களும் உண்டு வாழும் சிறுமைமிக்கவர்களாய், இழிதொழில்கள் செய்பவர்களாகவே வாழவேண்டிய நிலை ஹரிஜனங்களுக்கு ஏற்பட்டது. காந்தியடிகள் அவர்களை உயர்த்துவதற்காக 'ஹரிஜனங்கள்' என்று பெயர்வைத்ததும், ஆலய ப்ரவேசச் சட்டங்கள் மூலம் அவர்களைச் சிவவிஷ்ணு ஆலயங்களில் அனுமதித்ததும் பயனற்றதாயிற்று. கல்வியறிவு வளர வளர, பற்பல சிறு தெய்வங்களைப் பூசித்துக்கொண்டு, சிறுமைமிக்கவர்களாய் வாழ்வது ஹரிஜனங்களுக்கே அருவருப்பை விளைத்தது. இந்நிலையை விட முஸ்லிம்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ மாறி ஒரே தெய்வமான அல்லாவையோ, பரமபிதாவையோ வணங்கி, ஆத்மாவுக்கு உய்வு தேடுவது நல்லது என்று அவர்களுக்குத் தோன்றத் தொடங்கிவிட்டது. இதுவே மதமாற்றத்துக்கு முக்கிய காரணமாகும். வெளிநாட்டுப் பணம் முதலானவையும் மதமாற்றத்தின் வேகத்தை அதிகப்படுத்தியுள்ளன.

முற்கூறியவற்றிலிருந்து:—ஒருதெய்வக்கொள்கையை வலியுறுத்துவதாய், கள்ளுண்ணாமை, புலால் மறுத்தல், பிறனில் விழையாமை முதலான உயர்ந்த கொள்கைகளைக் கொண்டதான வைஷ்ணவ ப்ரசாரம் ஒன்றே ஹரிஜனங்களையும், மற்ற தாழ்ந்த ஜாதி இந்துக்களையும் உயர்வடையச் செய்து, மதம் மாறுமலிருக்கும் சூழ்நிலையை விளைக்கவல்லது என விளங்கும். ஹரே கிருஷ்ண இயக்கத்தினர்

உலகம் முழுவதிலும் இவ்விஷயத்தில் வெற்றி கண்டுள்ளனர். சைவத்திலும் கறுப்பு, காட்டேரி முதலான சிறுதெய்வ வணக்கம் தவிர்க்க முடியாமலிருப்பதால் வைஷ்ணவ ப்ரசாரம் ஒன்றே தாழ்ந்த சாதியினரை உயர்த்துவதற்கு வழியாகும். இதை உணர்ந்து வைஷ்ணவ மடாதிபதிகளும், ஆசார்யபுருஷர்களும், வைஷ்ணவ மதப்ரசாரத்தை ஹரிஜனங்கள் முதலானவர்களிடமும் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம். இவ்விஷயத்தில் ஹரே கிருஷ்ண இயக்கத்தினரைத் துணைகொள்வதும் நல்லது. புத்த மதத்திற்கும், இஸ்லாமுக்கும், கிறிஸ்தவத்துக்கும் மாறுகின்றவர்களை— புத்தமதத்திலுள்ள கொல்லாமையையும் வலியுறுத்துவதாய், கிறிஸ்தவத்திலும், இஸ்லாத்திலுமுள்ள ஒரு தெய்வக்கொள்கையையும் பரிபூர்ணமாகக் கடைப்பிடிப்பதாய், பரமவைதிகமதமாய், சங்க காலத் தமிழர் சமயமான வைஷ்ணவ மதத்தை ப்ரசாரம் செய்வதால்தான் மதம் மாறாமல் தடுத்து வைதிக (இந்து) மதத்தில் நிலை நிறுத்தமுடியும். அழிந்துகொண்டுவரும் ஜாதிக்கு முக்கியத்துவம் கொடுக்காமல், விசிஷ்டாத்வைதிகள், த்வைதிகள், ஹரேகிருஷ்ண இயக்கத்தினர் முதலான சைதன்ய மதத்தவர்கள் முதலிய எல்லா வைஷ்ணவர்களும் தங்களுக்கேயுரிய தனித்தன்மைகளைத் தங்களளவிலே வைத்துக்கொண்டு, பாரத நாட்டைக் காப்பாற்றுவதற்காக இப்பொதுவிஷயத்திலே ஒன்று சேர்ந்து, வைஷ்ணவத்வம் ஒன்றுக்கே முக்கியத்துவம் கொடுத்து, பாரததேசம் முழுவதிலும் ஓர் பேரியக்கத்தைத் தோற்றுவிப்பதொன்றே தற்போது நிகழ்ந்துவரும் மதமாற்றங்களைத் தடுப்பதற்கு நிரந்தரமான பரிஹாரமாகும். இத்தகைய பேரியக்கம் தோன்ற ஆதிபரம்பொருளாம் நாரணன் அருள்புரிய அனைவரும் ப்ரார்த்தித்து ஆவன செய்வோமாக.

## நமது திவ்யப்ரபந்தப் பதிப்பு

நமது திவ்யப்ரபந்தப் பதிப்பு ரூ. 27 விலை வைக்கப்பெற்று, நம்மால் ரூ. 20 அடக்கவிலைக்கு அளிக்கப்பெற்றது. ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமியால் ரூ. 10 விலைக்கு 2000 காபிகளுக்குமேலே வழங்கப்பெற்றது. நம்மாலும், பிறராலும் பலருக்கு 2000 காபிகளுக்குமேல் ரூ. 20 விலைக்குக் கொடுக்கப்பெற்றது. (புத்தக வியாபாரிகள் மூலம் சில நூறு காபிகள் ரூ. 27 விலைக்கு அளிக்கப்பெற்றது; ரூ. 7 அவர்களுக்குக் கமிஷன்) இவ்வண்ணமாக நாலாயிரம் காபிகளுக்குமேல் அடக்கவிலைக்கும், அதில் பாதி விலைக்கும் வாரிவழங்கப்பெற்ற நமது பதிப்பு, வெளியான ஒரு வருஷத்திற்குள் தீர்ந்துவிட்டது. ஆகையால், இனி திவ்யப்ரபந்தப் புத்தகம் பெற நமக்கு யாரும் பணம் அனுப்பவேண்டாம். இரண்டாவது, மூன்று நான்காவது ஆயிரங்கள் மட்டும் முறையே ரூ. 8, ரூ. 12 விலையில் சில காபிகள் கைவசம் உள்ளன. அவற்றைப் பெறலாம். இனி, திவ்யப்ரபந்தம் தேவையுள்ளவர்கள் அடுத்துக் காணும் புதுப் பதிப்பை, அதை வெளியிட்டவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளவும்.

## புதிய திவ்யப்ரபந்தப் பதிப்பு

**நாலாயிர திவ்யப்பிரபந்தம்.** பதிப்பாசிரியர்: வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார், வி.பூதூர், தென் ஆர்க்காடு மாவட்டம். விலை ரூ. 45-00. **வெளியிடுவோர்:** திருவேங்கடத்தான் திருமன்றம், 32, பெருமாள் முதலிதெரு, இராயப்பேட்டை, சென்னை-600014. போன் நெ. 20484.

1973ல் வித்வான் வி.பூதூர் ரெட்டியார் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பெற்ற முதல் பதிப்பு முன்னமே ஸுதர்சனத்தில் விமர்சிக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டாம் பதிப்பு ஆப்-செட் முறையில் அச்சிடப்பெற்று, நாலாயிரமும் ஒரே புத்தகமாக நல்லமுறையில் ஒபன்பைண்டு செய்யப்பெற்றுள்ளது. சடகோப ரந்தாதியும், திருவாய்மொழி நூற்றந்தாதியும் இணைக்கப்பெற்றிருப்பது இப்பதிப்புக்குச் சிறப்பு. முதற்பதிப்பிற்போலவே பாசுரங்கள் சீர் பிரித்துக் கொடுக்கப்பெற்றுள்ளன. அன்பர்கள் பெற்றுப் பயனடையலாம்.

## நமது நித்யாநுசந்தானப் பதிப்பு

(தென்கலை) நித்யாநுசந்தானமும், ஆழ்வார் ஆசார்யர்கள்பற்றிய வாழித்திருநாமமும், தனியன்கள், இயல்சாத்து முதலானவையும் கையடக்கமான (பாக்கட் ஸைஸ்) பதிப்பாக (200 பக்கம்கொண்டது) வெளியிடப்பெற்றுள்ளது. ராப்பர் பைண்டு ரூ. 6-00 விலை வைக்கப் பெற்றுள்ள இப்புத்தகம் 1982 முடிய ரூ. 5-00 அடக்க விலைக்கே வழங்கப்பெறும். ரூ. 7-00 விலையுள்ள அட்டை பைண்டு 1982 முடிய ரூ. 6-00 விலைக்குக் கிடைக்கும். சாதா தபாற்கூலி 75பை. புத்தக வியாபாரிகளும் இந்த விலைக்கே பெற்று ரூ. 1 அதிகவிலைக்கு விற்றுக் கொள்ளலாம். நம் காரியாலயத்தில் பிரதிகள் பெற்றுக்கொள்ளலாம்.

## ஸுதாரஸமஞ்ஜரீ—முதல்பாகம் வெளியீட்டு விழா

ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசார்யஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தியின் நினைவாக வெளியிடப்பெறும் 'ஸுதாரஸமஞ்ஜரி'யில் பகவத்விஷயம் பற்றிய பல வித்வான்களின் கட்டுரைகளடங்கிய இரண்டாவது பாகம் முன்னமே ஸ்ரீரங்கத்தில் வெளியிடப்பட்டு, ஸுதர்சனத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. ஸ்ரீபாஷ்யம் பற்றிப் பல வித்வான்களின் கட்டுரைகளடங்கிய முதல்பாக வெளியீட்டு விழா (27—9—81) ஞாயிறு மாலையில் சென்னை பவழக்காரத்தெரு ஸ்ரீக்ருஷ்ணன்கோவிலில் ஸ்ரீ உ. வே. உத்தமூர் வீரராகவாசார்யஸ்வாமி தலைமையில் பல வித்வான்கள் ஆசியுரை அருள, சிறப்பாக நடைபெற்றது. ஏற்கனவே வரதாசார்யஸ்வாமியிடம் மஞ்ஜரிக்காகத் தொகை செலுத்தியவர்கள் மாத்திரம் அவரிடம் நேரில் பெற்றுக்கொள்ளலாம். பிரதிகள் தீர்ந்துவிட்டபடியால் அதைப் பெறவேண்டி ஸ்வாமிக்கோ, நமக்கோ கடிதம் எழுதவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறோம். சிறந்த பொக்கிஷம் போன்ற ஸுதாரஸமஞ்ஜரியின் திருந்திய இரண்டாம்பதிப்பு விரைவில் வெளிவரவேண்டும் என்பது ஸ்ரீவைஷ்ணவவுலகின்பிரார்த்தனையாகும்.



ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-34] [ஒளி-12

# கருணாநிதியைக் குறித்துச் சில கேள்விகள்

[ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L., அட்வகேட்,
ஆசிரியர்: 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்',
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.]

## டாக்டர் கலைஞர் அவர்களே !

மூன்று மாதங்களுக்கு முன் "சங்கநூல்களும் கருணாநிதியும்" என்னும் கட்டுரை ஒன்றை "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" எனும் என்னை ஆசிரியராகக் கொண்ட மாத இதழில் அச்சிட்டு, அதையும், "சங்ககாலத் தமிழர் சமயம்" எனும் எனது நூலையும் தங்களுக்கு அனுப்பி, "தொல்காப்பியர் முதலான சங்ககாலச்சான்றோர்கள் நாஸ்திகர்களல்லர்; வடமொழி வேதத்திலே மிகுந்த நம்பிக்கையுடையவர்கள்; வேதமுதல்வனான திருமாலையே பரம்பொருளாகக்கொண்டு உலகனைத்துக்கும் தந்தையான அவனிடம் அன்பு செலுத்தி, வேதநெறியில் வாழ்வதே மறுமையில் தலைசிறந்த பயனான வீட்டுலகை அடைய வழி என்று நிலைநாட்டியவர்கள்" என்று அவ்வெளியீடுகளில் நிலைநிறுத்தப் பெற்றிருந்த உண்மையை, அரசியல் கண்கொண்டு நோக்காமல், இலக்கியக் கண்கொண்டு நோக்கி ஆராய்ந்து, தங்கள் கருத்தைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டிருந்தேன். இவ்வளவு நாட்களாகியும் தங்களிடமிருந்து எந்த பதிலும் வராததால், இவ்வுண்மையைத் தங்களால் மறுக்க இயலவில்லை என்று தேறுகிறது. இதனாலும், இதயத்தில் பலர் உம்மை மறுத்ததாலும் ஏற்பட்ட சினத்தினால், விசுவாமித்திரர் முதலான ரிஷிகளையும், சிவனையும், ஆண்டாளையும் பழித்து, 1—11—81 "குங்குமம்" இதழில் "குப்பைத் தொட்டி" என்னும் கற்பனைக்கதையுருவில் கட்டுரையொன்றை வெளியிட்டிருப்பது எனது பார்வைக்கு வந்தது.

விசுவாமித்திரர் முதலான ரிஷிகள், ரிஷியாவதற்குமுன் காமம், வெகுளி முதலான குறைகளுடன் வாழ்ந்த ஜீவர்களே என்று இதிஹாச புராணங்கள் பறைசாற்றுவதால், அந்நிலையில் அவர் களைப்பற்றி நீர் எழுதியதுபற்றி ஆத்திகர் யாரும் கவலைப்படப் போவதில்லை. சிவனை நிர்வாணமாகச் சித்திரம் தீட்டி, அவர் தாருக வனத்து ரிஷி பத்தினிகளைக் கற்பழித்ததாக வழங்கும் புராணக்கதையை அடிப்படையாகக்கொண்டு சிவனைப் பரிகாசம் செய்திருக்கிறீர். இதற்கு பதில் சொல்லவேண்டிய பொறுப்பு சைவர்க ளுக்கு உண்டு. அதேபோல் "குத்துவிளக்கெரிய" என்னும் ஆண்டாளின் பாசுரத்தை எடுத்துக்கொண்டு, கண்ணனும் நப்பின்னை யும் அணைத்துக்கொண்டிருப்பதுபோல் சித்திரம்தீட்டி, அதை வருணித் திருக்கும் ஆண்டாளை நீர் பழித்திருப்பதற்கு பதில் சொல்லவேண்டிய பொறுப்பு வைணவர்களாகிய எங்களுக்கு உண்டு. அப்பொறுப்பை இக்கட்டுரையில் நிறைவேற்றி, தங்களைக் குறித்துச் சில கேள்விகளைக் கேட்கிறேன். முன்போல் மௌனமாயிராமல், குங்குமத்திலேயே இக்கேள்விகளுக்கு பதிலிறுப்பதன் மூலம் தங்களது இலக்கியப் புலமை யையும் நேர்மையையும் நிலைநிறுத்திக் கொள்வீர்கள் என நம்புகிறேன்.

நீங்கள் சங்கத்தமிழர் பரம்பரையில் தோன்றியவர்கள் என்று கட்டுரைகளிலும், மேடைப் பேச்சுக்களிலும் பெருமை பேசிக்கொள்கி றீர்கள். அச்சங்கத்தமிழர்கள் திருமாலைப் பரம்பொருளாகக் கொண்ட வர்கள் என்பதை "சங்ககாலத் தமிழர் சமயம்" என்னும் எனது நூலில் தமிழறிஞர் எவரும் மறுக்கவொண்ணாதபடி நிலைநாட்டியிருக் கிறேன். சங்கநூல்களில் ஒன்றான பரிபாடலில் "அல்லி அம் இருமறுமார்ப" [பரிபாடல் 1] "திரு ஞெமர்ந்து அமர்ந்த மார்பினை" [பரிபாடல் 1] "திருவின் கணவ" [பரிபாடல் 3] "நின் திருவரை அகலம் தொழுவோர்க்கு உரிதமர் துறக்கமும் உரிமை நன்கு உடைத்து" [பரிபாடல் 13] என்று, ஸ்ரீதேவியாகிய இலக்குமியைத் தன் திருமார் பிலேயே தரித்துநிற்பவன் திருமால் என சங்ககாலச் சான்றோர்கள் பாடியிருக்கிறார்கள். இப்படித் தன் மனைவியைத் தன் மார்பிலேயே கொண்டிருப்பதற்குக் காரணம் என்ன என்பதையும் (முற்கூறிய) நாலாவது மேற்கோளில் காட்டியிருக்கிறார் நல்லெழுநியார் எனும் சங்க காலச் சான்றோர். "இருமை வினையுமில ஏத்துமவை" [பரிபாடல் 13] என்று பரிபாடலில் பாடியபடி உயிர்கள் செய்யும் புண்யபாபங்க ளுக்குப் பலனளிக்கும் பரம்பொருளான திருமால், அவர்கள் பாபத் தைக் கண்டு சீற்றம் கொள்பவனாகையாலே, உயிர்கள் தன்னை அணுகுவது இயலாமற்போய்விடும் என்னும் காரணத்தாலேயே அச்சீற்றத்தை ஆற்றி, தன் மக்களான உயிர்களைத் தன் கணவனான பரம்பொருளிடம் சேர்விடும் ஸ்ரீதேவியைத் தன்மார்பிலேயே தரித்தி

ருக்கிருன் என்றும், தாயாகிய அந்த ஸ்ரீதேவியை முன்னிட்டுக் கொண்டு, தந்தையாகிய அத்திருமாலைத் தொழுகின்றவர்களுக்கு வீட்டுலகமே மறுமையில் உரிமையாகக் கிடைக்கும் என்றும் அச் சான்ருேர் தெளிவாகக் கூறுகிருர். "கோடாச் செல்வனை ஏவல் இன் முதுமொழி கூறும்" [பரிபாடல் 13] என்று இவ்விஷயத்தை வேதம் கூறுகிறது என்றும் வெளியிடுகிருர். வேதம் உமக்குப் புரியாது; அதில் உமக்கு நம்பிக்கையுமில்லை. "சங்கத் தமிழர் பரம்பரையில் வந்த பச்சைத் தமிழர்கள் நாம்" என்று பெருமை கொள்ளும் உமக்கு சங்ககாலச் சான்ருேரின் இக்கொள்கையில் நம்பிக்கை வேண்டாமா?

பரம்பொருளாகிய திருமால் உயிர்களை உய்விப்பதற்காக இவ்வுலகில் பல பிறப்புகளை எடுத்தான் என்றும் சங்ககாலச் சான்ருேர்கள் "பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோர் இலையே" [பரிபாடல் 3] முதலான பலவிடங்களில் பாடியிருக்கிருர்கள். "இடவல குடவல கோவல காவல" [பரிபாடல் 3] முதலான இடங்களில் திருமால் கண்ணனாக அவதரித்தான் என்றும், தனக்கு ஜீவாத்மாக்களின்மேல் உள்ள ஆராத காதலை உலகிற்குக் காட்டுவதற்காகக் குரவைக்கூத்து [கண்ணன் பல உருவெடுத்து, கோபியரோடு, இடம்வலமாகக் கைகோர்த்து நின்று விளையாடிய விளையாட்டு] முதலான லீலைகளைப் புரிந்தான் என்றும் பாடியிருக்கிருர்கள். நப்பின்னை அந்த கோபியருள் ஒருத்தி. "மாயவனுடன் தம்முன் ஆடிய வாலசரிதை நாடகங்களில் வேல்நெடுங் கண் பிஞ்ஞையோடாடிய குரவை ஆடுதும் யாம்" [சிலம்பு, ஆய்ச்சியர் குரவை] என்றும், "மாமணி வண்ணனும தம்முனும் பிஞ்ஞையும் ஆடிய குரவை இஃதாம்" [மணிமேகலை 19: 65-66] என்றும் நப்பின்னையோடு கண்ணன் குரவைக் கூத்தாடியதை இரட்டைக் காப்பியங்கள் கூறும். கண்ணன் ஏழு எருதுகளைத் தழுவி வீர விளையாட்டு விளையாடி, அவ்வீரத்தின் பரிசாக நப்பின்னையைப் பெற்று மணம்புணர்ந்தான் எனப் பல தமிழ் நூல்கள் கூறு கின்றன. சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் பல பாடல்களிலும், "தளவேழ் முறுவல் பின்னைக்காய் வல்லானுயர் தலைவனுய் இளவேறு ஏழும தழுவிய எந்தாய்" [திருவாய்மொழி 1-5-1] முதலான பாசுரங்களி லும் இதைக் காணலாம். "நீணிரை நப்பின்னை இலவர் வாயின் னமிர்தம் எய்திஞனன்றே" [சிந்தாமணி 482] என்று ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்ருன சிந்தாமணியும் கூறிற்று. இவ்வண்ணமாக, பரம்பொருளான திருமால் உயிர்களை உய்விப்பதற்காக ஆயர்குலத்தில் கண்ணனுக வாழ்ந்தபோது, ஆயர்மடமகளான நப்பின்னையை மணம்புணர்ந்து அவளைத் தழுவிக்கொண்டு பள்ளியறையில் துயின்ருன் என்று தமிழர் மரபைப் பின்பற்றி ஆண்டாள் பாடியதிலோ, அவனைப் பள்ளி எழுப்பியதிலோ என்ன தவறு?

டாக்டர் கலைஞர் அவர்களே! நீர் தமிழர் பரம்பரை என்று அடிக்கடி பெருமை கொள்வது உண்மையாயிருந்தால், பின்வரும் கேள்விகளைக் குங்குமத்தில் அச்சிட்டு பதில் கூறும்படி உம்மை அறைகூவி அழைக்கிறேன்.

## கேள்விகள்

1. சங்ககாலச் சான்றோர் திருமாலைப் பரம்பொருளாகப் பாடி "அல்லியம் திருமறுமார்ப" [பரிபாடல் 1] "திருஞமர்ந்து அமர்ந்த மார்பினை" [பரிபாடல் 1] "திருவின் கணவ"[பரிபாடல்3] "நின் திருவரை அகலம் தொழுவோர்க்கு உரிதமர் துறக்கமும் உரிமை நன்குடைத்து" [பரிபாடல் 13] முதலானவிடங்களில், "அவன் உயிர்களை உய்விப்பதற்காக ஸ்ரீதேவியைத் தன் மார்பில் தரித்திருக்கிறான்" என்றும், அந்த தேவியை முன்னிட்டுக்கொண்டு அவனைத் தொழுபவர்களே மறுமையில் வீட்டுலகை அடையமுடியும் என்றும் பறைசாற்றியிருப்பதை மறுக்கமுடியுமா?

2. பரம்பொருளான இத்திருமால் உயிர்களை உய்விப்பதற்காக ஆயர்குலத்தில் கண்ணனாய் அவதரித்தபோது, உயிர்களின் மீது தன் ஆராத காதலை அறிவிப்பதற்காக, நப்பின்னையை ஏறுதழுவி மணம் புணர்ந்ததாகவும், அவளைத் தழுவி நின்றதாகவும் பண்டைத் தமிழ்நூல்களில் பாடியிருப்பதைப் பின்பற்றி ஆண்டாள் பாடியிருப்பதில் என்ன தவறு? திருமாலுக்கோ, கண்ணனுக்கோ பெண்களோடு பிராகிருதமான உடலுறவோ வீர்யம் விழுதலோ உள்ளதாக வடமொழியிலோ, தமிழிலோ உள்ள எந்த நூலிலும் காணப்படாததிலிருந்து, கண்ணன் நப்பின்னையைத் தழுவியது பரமாத்மாவிற்கு ஜீவாத்மாவிடமுள்ள ஆராத காதலைத் தெரிவிப்பதேயொழிய பிராகிருதமான உடற்பசிக் காமத்தைக் காட்டுவதல்ல என்று விளங்கவில்லையா?

3. ஆண்டாளைப் பழிக்கும் நீர் — அதே விஷயத்தை "பொற்பொறி வெள்ளை அடர்த்தாற்கே ஆகும் இந்நற்கொடி மென்முலை தான்" [சிலம்பு-ஆய்ச்சியர்குரவை] என்று பாடிய இளங்கோவடிகளையும் பழிக்கத் துணிவீரா?

இக்கேள்விகளுக்குக் குங்குமத்தில் பதிலுரைக்காவிடினும், இவற்றிற்கு பதில் எழுதி எமக்கு அனுப்பினாலும் போதும்.

# (இஸ்கான்) ராவணாரிதாஸரின் முழக்கம்

(K. A. தேவராஜன், B. Sc., ACA. C.A.I.I.B.,
5, ராமசாமி தெரு, சென்னை-1)

சென்னையில் 1981 டிசம்பர் 19, 20, 21 தேதிகளில் "உலக ஸ்ரீகிருஷ்ண பக்தி இயக்கம்" *(International Society For Krishna Consciousness)* நடத்திய கருத்தரங்கில் பங்கு கொண்ட PLO *(Palestenian Liberation Organisation)* தலைவர் யாஹ்யா யூனஸ் என்ற பூர்வாச்ரமப் பெயருள்ள ஸ்ரீமத் ராவணாரிதாஸர் முழங்கிய முழக்கம் அனைவரையும் — ஏன் 3 - 4 இஸ்லாமியர்களையும் — ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது! ஸ்ரீமத் பகவத் கீதையையும், இஸ்லாமிய வேதநூலான குர்ரானையும் எடுத்து உதாஹரித்து அவர் கூறியதாவது :- "உலகிற்கு ஒரே தெய்வம் ஸ்ரீகிருஷ்ணர். அவர் அருளிய ஸ்ரீபகவத் கீதா சாஸ்திரம் உலகின் ஒரே மறை. அவரை வழிபட்டு நாம் எளிதாக மோட்சம் அடையலாம். அல்லா, கிறிஸ்து, சிவன், ஸுப்ரமண்யன், கணபதி, காளி எல்லாம் பரப்ரஹ்மமான ஸ்ரீகிருஷ்ணனால் தோற்றுவிக்கப்பட்ட சில்லரை தேவதைகள். அவர்களின் சக்தி எம்பெருமான் கொடுத்தது. கலியின் தோஷம் நீங்க மஹாமந்திரமான ஸ்ரீக்ருஷ்ண நாம ஸங்கீர்த்தனம் செய்யவேண்டும். தினமும் 1008 முறையாவது ஒவ்வொருவரும் செய்ய வேண்டும்". அவரது சொற்பொழிவைக் கேட்ட இரு இஸ்லாமியர்கள் அவரை வாதத்திற்கு இழுத்தனர். அவர்களை குர்ரானை கொண்டே வாய் மூடச் செய்தார். அவர்களை ஸ்ரீக்ருஷ்ண பக்தர்களாக ஆகும்படி கூறினார். அவரைத் தனிமையில் சந்தித்துப் பேசும் வாய்ப்பு அடியேனுக்குக் கிடைத்தது. மேற்கு ஜெர்மனியில் உள்ள *Hamburg University* இல் படித்து *Computer Science* இல் டாக்டர் பட்டம் பெற்ற 40 வயது நிரம்பிய ஒரு கோடீச்வர குடும்பத்தைச் சேர்ந்த யூனஸ் தற்போது உலகில் ஸ்ரீக்ருஷ்ண பக்தியைப் பரப்புவதில் தம் உடல், பொருள், ஆவியை அர்ப்பணித்துள்ளார். இன்னும் ஒரு நூற்றாண்டில் உலகம் முழுவதும் ஸ்ரீக்ருஷ்ண நாமமே முழங்கப் போகிறது என்று திரு யூனஸ் திட்டவட்டமாகக் கூறுகிறார். இன்று *ISKCON* உலகில் 200க்கு மேற்பட்ட இடங்களில் செயல்படுவதாகவும், இருபது லக்ஷத்திற்கு மேற்பட அங்கத்தினர்கள் இருப்பதாகவும் அவர் கூறினார். சமீபத்தில் இந்த இயக்கத்தில் சேர்ந்த ஸ்ரீ ஆல்பெர்ட் போர்டு (*Sri Alfred Ford*) தமது செல்வமான ரூ 300 கோடிகளை ஸ்ரீக்ருஷ்ண பக்தி சாம்ராஜ்யம் அமைக்க நன்கொடை அளித்துவிட்டார் என்றும் கூறினார். இந்தியாவில் தற்போது சுற்றுப்பயணம் செய்யும் ஸ்ரீமத் ராவணாரிதாஸர் முக்கியமான வைணவ க்ஷேத்திரங்களை ஸேவித்ததாகவும் அறிவித்தார். இந்தியாவில் ஸர்வபாவனமான வைதிக மதம் தாழ்வுற்று நீச மதங்கள் வலிவுறுவதைத் தடுக்க *ISKCON* பல திட்டங்கள் வகுப்பதாகவும், எல்லா மதத்தினரையும் ஸ்ரீக்ருஷ்ண பக்தர்களாக்குவதில் *ISKCON* வெற்றிகாணும் என்றும் தெளிவாக அழுத்தமாக அவர் பேசினார். திரு. மணியன் உள்பட பல பத்திரிகையாளர்கள் அவரைப் பேட்டி கண்டனர்.